# முகவுரை.

---

அநாதிகாலமாக மனிதனை இறப்பு பிறப்பு என்னும் அந்தகாரத்தி லாழ்த்தி வீழ்த்தி வருவது மனத்தின் மறைப்பே யாகும். மனதின் உற்பத்தி ஸ்தானத்தையும் அதின் பரிணாம சக்தி வல்லமையும் முடிவையும் சாஸ்திர மூலமாகவும், பெரியார்கள் மூலமாகவும் அநுபவ வாயிலாக சந்தேகமின்றி கூறு கூறாகக் கண்டறிய வேண்டுமென்று எனக்குப் பேரவா உண்டாயிற்று, "எண்ணிய நான் எண்ணியவாறு எனக்களிக்கும் தெய்வம்" என்று திரு வருட்பாவில் படித்த பதம் அளவுகடந்த தைரியத்தைக் கொடுக்க ஞானத் துறையிலிறங்கும்படி செய்தது. ஆங்கு அனுபவித்த கஷ்ட நஷ்டங்களையும், அரும்பாடுகளையும், அதனால் கிடைத்த ஆன்மலாபத்தையும், அன்பினிற் சிறந்த அறிஞர்களாகிய நம்மவர்களெல்லாம் அவ்வருட் கூற்றை அனுபவ வாயிலாக கண்டதிசயித்து ஆனந்திக்க வேண்டுமென்ற ஆசையால் ஆவிக்கு நல் துணவை நல்கும் இச்சிறு நூலை வரையலானேன். உலகத்தில் முன்தோன்றிய பெரியார்கள் வால்யம் வால்யமாக செய்யுள் முறையில் எவ்வளவோ சாஸ்திரங்கள் செய்திருக்கின்றார்கள். அதற்கு பின்தோன்றிய பாஷ்யக்காரர்கள் விருத்தியுரைகள் செய்திருக்கின்றார்கள். அதில் தோன்றும் பதவுரை கருத்துரை பொழிப்புரைகள் மிகுந்தபடிப்பில்லாத எம்போன்ற ஏனையோர்கட்கு அதிலகுவில் விளங்காதென நினைத்து, எனது அனுபவத்தை மிக்க எளிய வசன நடையில் ஓர் புத்தகம் வெளியிட வேண்டுமென்று

துணிவு பிறந்தது. நாம் நமது பிள்ளைகளுக்குச் செய்யும் உதவிக்கு கூலிகேட்கிறோமா? இல்லை. அவர்களுக்கு சகல நன்மைகளையும் செய்ய நாம் கடமைப்பட்டிருக்கிறோம். நாம் அவர்களுக்காக வேலை செய்யவேண்டியது நமது பொறுப்பாகவே நினைக்கிறோம். அதுபோல எனது அனுபவத்தை பொருளையோ ஸ்வர்க்கத்தையோ பிரதி பலனை எதிர்பாராமல் உலகத்திற்கு லோகோபகாரமாக கொடுத்து உதவவேண்டியது எனது கடமை. முக்கிய நோக்கமாவது, இதிலடங்கியுள்ள விஷயத்தை அனுபவமென்னும் படியினால் மனதை நிரந்தர வாழ்வில் நிறுத்தி, துரிய தரிசனம் என்னும் புனிதப் பேற்றை நீங்கள் ஒருமைப்பட்ட மனத்துடன் கிரகித்து அனுபவித்து அடைவீர்களாயின், அதுவே எனக்குப்போறுமானது. இதனால் எனக்கு பெரியவரென்று பேருண்டாக வேண்டுமென்றோ, எல்லோரும் மதிக்கவேண்டுமென்றோ மதித்து இந்நூலை நான் எழுதவில்லை. இஃது எப்படியிருக்கினும் இருக்கட்டும். இதுவரையில் புத்தகத்தில் வெளிவாராத, ஒருவராலும் பேசியிராத அனுபவித்திராத ரகஸிய நூதனவிஷயம் நான் ஒன்றும் எழுதிவிடவில்லை. புத்தகத்தைப்படித்தும் பெரியார் வாயிலாகக்கேட்டும் அதன்மூலமாக அடைந்த அனுபவசக்தியை இதில் குறித்திருப்பதால் பக்குவமில்லாதவர்கட்கு நாவலாகவும் பக்குவிகட்கு ஞானப்பொக்கிஷமாகவும் விளங்கும். இவ்வனுபவ சாஸ்திரம் குயுக்திகள் பேசுவோருக்கோ அல்லது அனுபவம் சிறிதுமின்றி மூளையைக் கலக்க வல்லவராய் சரமாரியாகப் பொழியும் வசனலங்கிருத பண்டிதர்கட்கோ இந்நூல்பயன்படுமென்று நான் நம்பவில்லை. என்னைப்போன்ற மூமூட்சுகட்கே இது ருசிகரமாயிருக்கும். இப்புத்தகத்திலுள்ள குற்றங் குறைகளை எனக்குத் தோன்றாத்துணையாயிருந்து அநுக்கிரகித்த வடலூர் அருட்பெருஞ்சித்தர்

ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளின் மேலாவது அல்லது தோன்றாத் துணையாயிருந்து அநுக்கிரகித்து ஸ்திரமாக ஆத்ம வாசனையை மலரச்செய்த திருவண்ணாமலை பகவான் எனது குருநாதன் ஸ்ரீ ரமணமஹரிஷிகளின் மேலாவது சுமத்தாமல் என்மேல் சுமத்தக்கோருகிறேன். அப்பெரியார்களின் பொருட்டு எங்கும் எப்பொழுதும் நமஸ்காரம்.

என்னால் பலவேறு சமயங்களில் சிறு புத்தகங்களாக எழுதி வெளியிட்ட அனேக பிரதிகளை ஒன்றாக்கி தரவேண்டுமென, அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி பல மலராக வுள்ளதை ஒரே கொத்தாக பக்குவிகட்கு ஞானப் பொக்கிஷமாகும்படி அமைத்துள்ளேன்.

"திருவருட் சம்மதம்போலாகுக"

இராமலிங்கம் பிள்ளை,
பின்னலூர்.

திருவண்ணாமலையில் தீனர்களை இரட்சிக்கும்பொருட்டு
குருமூர்த்தமாக பிரஹ்மானந்த ஸ்வரூபராய் வீற்றிருக்கும்
ஸ்ரீ ரமண மஹரிஷி அவர்கள்மீது

# நிந்தா ஸ்துதி.

---

இந்திரியம் புலத்தின்வழி செல்லாமல் தடுத்திட்ட விணையில்லாக் கொடியனாகும், தந்திரங்கள் மிகச்செய்து மனத்தின்வழி நடவாமல் தடுகாமத்துரோகியாகும், முந்தி வரும் துணைவர்களை கஞ்சியினுக் கலையவிட்டான் முழுதி லுமே வம்பனாகும், குந்திநித மேங்கிடுவான் ரமணனவன் தீச்செயல்க ளிவையெனவே குறியில்லையே.

மனக்குரங்கை யடக்கிவிட்டு மரக்குரங்கைத் துணை பிடித்தோன் மானம்விட்டோன், வனத்தில்மிக குடிகொண் டோன் வாணாளை வீணாக்கும் வகையில் நிற்போன், இனத் துமிகு நினைப்பென்று மறைப்பென்று மிரண்டையுமே விட் டோனாகும், சனங்களது கூட்டத்தில் சார்வில்லான் தீச் செயல்க ளிவைதானம்மா.

குடும்பத்திலே வாழான் குணங்கெட்டு காணுமனங் குறிப்பில் நில்லான், படும்பாடிங் கேதேனும் செய்வாரைத் தடுத்திடுவான் பசுக்கள் தம்மை இடும்பைபற் பலபேசி நல் லாரை யெந்நாளு மிழிவே செய்வான், அடும்பாவி யாகி வளர் ரமணனது தன்மையதை யாய்ந்து பாரீர்.

மண்சுமந்தோன் விறகுவிற்றோன் செருப்படியும் கல்ல டியும் மகிழ்வாய் பட்டோன், விண்ணரிய வளைவிற்றோன் வந்திப்பிட்டதை வாங்கி வீங்கவுண்டோன், பண்ணதனால் இவனையுமேபணிரமணன் தன்னையுமிப்பாரின்மீது, நண்ணினா ரெல்லாரும் மயலுறுவோம் நல்லவனின் குணங்களீதோ.

இராமலிங்கம்,

பின்னலூர்.

# கடவுளை நம்பு.

---

நம்பிக்கை உள்ள இடம்
அன்பு ஊறும்
அன்பு ஊறும் இடம்
சாந்தம் பொங்கும்
சாந்தம் பொங்கும் இடம்
இன்பம் பெருகும்
இன்பம் பெருகும் இடம்
ஞானம் வழியும்
ஞானம் வழியும் இடம்
அருள் ஒளிரும்
அருள் ஒளிரும் இடம்
கடவுள் தோன்றும்
கடவுள் தோன்றும் இடம்
வேண்டுவது ஒன்றும் இல்லை.

இராமலிங்கம்,

பின்னலூர்.

# உண்மை நெறி.

## நாமடையவேண்டிய அரும்புருஷார்த்தம் 4.

**1. இந்திரிய வொழுக்கம்:**—கொடியசொல் செவிபுகாது, நாதமுதலிய ஸ்தோத்திரங்களைக்கேட்டல்; அசுத்த ஸ்பரிசஞ் செய்யாதிருத்தல்; குரூரமாகப் பாராதிருத்தல், உருசி சுகந்தம் விரும்பாதிருத்தல்; இன்சொல்லாடல்; பொய் சொல்லாதிருத்தல்; ஜீவஇம்சை நேரிடுங்காலத்தில் எவ்வித தந்திரத்திலாவது தடை செய்தல், ஜீவோபகார நிமித்தமாய் சாதுக்கள் வாசஸ்தானங்களிலும், திவ்ய திருப்பதிகளிலும் சஞ்சரித்தல்; நன்முயற்சியிற் கொடுத்த லெடுத்தலாதிசெய்தல்; மித ஆகாரஞ்செய்தல்.

**2. கரண வொழுக்கம்:**—மனைதச் சிற்சபையின் கண்ணே நிறுத்தல், அதாவது முதலில், புருவமத்தியி னிற்கச்செய்தல், துர்விஷயத்தைப் பற்றாதிருக்கச் செய்தல், சீவதோஷம் விசாரியாதிருத்தல், தன்னை மதியாதிருத்தல், இராகாதி நீக்கி, இயற்கைச் சத்துவ மயமாதல், தனது தத்துவங்களை அக்கிரமத்திற் செல்லாது தண்டித்தல்.

**3. ஜீவ வொழுக்கம்:**—ஆண்மக்கள் பெண்மக்கள் முதலிய யாவர்களிடத்திலும், ஜாதி, சமயம், மதம், ஆச்சிரமம், சூத்திரம், கோத்திரம், குலம், சாஸ்திர சம்மந்தம், தேசமார்க்கம், உயர்ந்தோர், தாழ்ந்தோரென்னும் பேதம் நீக்கி எல்லவர்களும் தம்மவர்களாய்ச் சமத்திற் கொள்ளுதல்.

**4. ஆன்ம வொழுக்கம்:**—யானைமுத லெறும்பீறாகத் தோன்றிய சரீரங்களிலுள்ள ஜீவான்மாவே திருச்சபையாகவும், அதனுள் பரமான்மாவே பதியாகவும் கொண்டு, யாதும் நீக்கமற எல்லாவிடத்திலும் பேதமற்று எல்லாம் தானாகநிற்றலாம். இவ்வண்ணம் நின்றால் மேற்குறித்த உண்மை நெறியாகிய அரும் புருஷார்த்தங் கைகூடும்.*

---

* இது அன்பர்கட்கு உபயோகமாகுமென்று அருட்பாவினின்று குறிக்கப்பட்டது.



பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள்,

திருவண்ணாமலை.

திருவண்ணாமலை

எனது குருநாதன்,

# ஸ்ரீ ரமணமஹரிஷி அவர்கள்

மாக்ஷிமை

## விருத்தம்.

சுந்தரர்க்குத் திருச்சுழியில் சுதனுதித்த திறத்தைத்
துதித்திடவே வாய்மணக்கு முள்ளமெலா மணக்கும்
அந்தரத்திலூன்மணக்கும் அன்புமிக மணக்கும்
அம்பலமாமுள்ளநிலை வஸ்துவது மணக்கும்
உந்தரத்தால் யோகியர்த முள்ளகுகை மணக்கும்
உண்மைநிலை மதிமணக்கும் மதிக்கப்பால் நிற்கும்
தந்திரத்தால் பாமணக்கும் தத்துவமே கடந்த
தபசியராம் ரமணமுனி நான் மணக்க நின்றேன்.

திரு அருளொளிச் செல்வராகிய மஹா கெம்பீரம் பொருந்திய பகவான் ரமணனந்தர் முகஜ்வலிப்பானது ஞானத்தாகமுள்ள அன்பர்களை வாருங்கள் வாருங்கள் உங்களது பேரானந்தப்பெருவாழ்வின் இன்பவூற்றை உங்களிடமே காட்டுகின்றேன், கண்டு அனுபவித்து ஆனந்தமடையுங்கள் என்று அழைப்பதுபோலிருக்கின்றது. அவர்முகம் எப்பொழுதும் சாந்தமயமாயிருக்கும். அவருடைய சலிக்காத கண்களினின்று சாந்தமும் தைரியமும் பிரகாசித்துக்கொண்டிருக்கும். நம்முடைய அறிவிற்கு புலப்படாத ஆனந்தமயமான சாந்தமானதை இம்மஹான் சந்நிதானத்தில் செவ்வனே கண்ணாரக்காணலாம். மஹரிஷியவர்கள் கடவுள் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட சர்வ பிராணிகள் ஆகிய இவ்விரண்டிடத்திலும் சர்வ வியாபகமான அன்பைப் பாராட்டி வருகிறார். ஒருவன் அவரெதிரில்வந்து அவரைப் பார்ப்பானானால் அவன் எண்ணங்கள் எவ்வளவு இழிவானதாயும் அற்பத்தன்மையாயுமிருந்தாலும் அவை

கள் அவன் மனதைவிட்டு ஓடிவிடும். அவன் மனம் பரமாத்மா வினிடம் கொண்டுபோகப்படும். அவன் மனதில் புதிதாய் பெருந்தன்மையான எண்ணங்களும் உணர்ச்சிகளும் உண்டா கும். அனுதாபங்கள் அதிகப்படும். அவருடன் கொஞ்சம் சம்பாஷணை செய்தமாத்திரத்தில் ஜீவன் பரமாத்மாவின் அம்சம் என்ற நம்பிக்கை ஸ்திரப்படுவதுடன் இவன் மனமும் சஞ்சலத்தைவிட்டு சமாதானத்தை யடையும். அதிகம் சொல்வானேன். இம்மஹான் சந்நிதானத்தை அடைந்தமாத்திரத்தில் மனதிலுள்ள சந்தேகங்களெல்லாம் நிவிருத்தியாய்விடும். அவர் சிரிப்பானது மின்னல்போல ஜ்வலிக்கும். அவர் அன்புநிறைந்தவர். கீழோர் மேலோர் என்ற வித்தியாசமின்றி எல்லோரையும் சமதிருஷ்டியாகப் பார்ப்பார். ஸ்தாவர சங்கம வித்தியாசமின்றி, நாய், மான், குரங்கு, அணில், காகம், பசு இவைகளைப்பார்த்து அவை களுடன் சம்பாஷணைசெய்து ஆனந்தத்தை யனுபவிப்பவர். எல்லா வஸ்துவையும் பரமாத்மாவாகப் பாவிப்பர். இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், மலையாளம் இந்த பாஷை களில் ஜீவாத்மா பரமாத்மா ஐக்யபாவம் சம்மந்தமான விஷ யங்களை சவிஸ்தாரமாகப் பேசுவார். அவரிடத்தில் பரமாத்மா நினைவுதவிர வேறு கிடையாது. அவருக்குத் தேகம் ஒன் றிருப்பதாக அவர் நினைவில் காணவில்லை என்றே தோன் றும். தேகத்துடனிருப்பதாக காணப்படினும் தேகபாவனை முற்றும் துறந்தவர். அவர் பார்வையினால் எதிரிலிருப்பவர்கள் மனம் அன்பு நிறைந்ததாக ஆகிவிடும். கல்நெஞ்சமும் கரைந்துவிடும். மஹரிஷி யவர்கள் சம்பாஷிப்பவருடன் அனேகம் கதைகளை திருஷ்டாந்தமாக எடுத்துச்சொல்லி கேட்கிறவர்களின் மனதில் எளிதாய் தெளிவுடன் பதியும் படிக்கு மிக்க அமைதியாய் சொல்லுவர். பொதுவாக ஜனங் கட்கு ஆத்தும தத்துவத்தை உபதேசிப்பதில் மிக்க உற்சாக

முள்ளவர். வருவார் யார் எக்கேள்வி கேட்கினும் அதற்கு பகவான் விருப்பு வெறுப்பின்றி அங்கீகரித்து விடைபகருவார். வியாசர், ஸ்ரீ சங்கரர், ராமகிருஷ்ண பரமஹம்சர், ஸ்வாமி விவேகானந்தர், ராமதீர்த்தர் இவர்களின் கொள்கையையுடையவர். இவர் தாயாரும் உறவினரும் வீட்டிற்கு கூப்பிட்டதற்கு மௌனமாகவிருந்து எழுதி காட்டியதாவது:—

“அவரவர் பிராரப்தப்பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்து ஆட்டுவிப்பன் என்றும், நடவாதது என்ன முயற்சிக்கினும் நடவாது, நடப்பது என்ன தடைசெய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆதலின் மௌனமாயிருக்கை நன்று!”

## ஸ்ரீரமண மஹரிஷி அவர்களின் உபதேசமாவது

நானார்? புலன், பூதம், கரணம், குணம், மனம் இவையெல்லாம் அல்லவெனக் கண்டனைசெய்து மிஞ்சி நிற்பது அறிவு, அவ்வறிவே நான், அது சச்சிதானந்தமயம், மனமென்பது தனியாயில்லை, நினைப்பே மனத்தின் உரு, மனமே உலகைத் தோற்றுவிக்கிறது. அதுநசித்து ஆத்மஸ்வரூபம் தோன்றும்போது உலகு தோன்றாது, மனமே நான் என்று கிளம்புவது, நானென்னும் விசாரமே மனமடக்கவழி பிராணாயாமத்தாலும் அடக்கலாமெனினும் பிராணன் கிளம்பினால் மனமும் மீண்டுங்கிளம்பும், ஆத்மஸ்வரூபத்தை இதயத்தில் தியானிக்க தியானிக்க இன்பநிலை யதுவாகும். அதைத்தவிர வேறொன்றையும் எண்ணாதிருத்தலே நிராசை. அதனை விடாதிருத்தலே ஞானம். முத்துக் குளிப்பவனைப்போல ஆழ்ந்து தனக்குள்ளே மூழ்கி வைராக்கியத்துடன் ஆத்மமுத்தைப் பெற வேண்டும். ஆத்மசுகம் ஒன்றேயுள்ளது. உலகென்பது நினைவே, அதில் சுகம் இல்லை. ஆத்மநிழலை நீங்காதிருப்பதே சுகம், ஒருபரமேச்வரசக்தி உலகை

நடத்துகிறது. அது அனைத்தையும் தாங்கும், அதற்கு நாமும் அடங்கியிருக்காமல் அப்படிச் செய்யவேண்டும் இப்படிச்செய்யவேண்டும், எனச்சிந்திப்ப தெல்லாம் அகந்தை வண்டியிற் செல்பவன் மூட்டையைத் தலையிற்சுமப்பது மடமை. சங்கல்ப ரகிதரான ஈசனின் சந்நிதான மாத்திரத்திலேயே உலகம் தானுகநடக்கிறது. தத்துவக்குப்பைகளை ஆராய்வதுங் காலவிணே, மனதை வெளிவிஷயங்களில் விடாது இதயத்தில் லயப்பட்டிருப்பதே சுகம், நானென்னும் அகந்தையற்ருல் தானென்னும் சக்தி தானுக தலைகாட்டும். அதையே பற்றி அடங்கி நிலைத்தலே ஆத்மானந்தம்:— இதுவே ரமணவித்தை.

1911ஞு நவம்பரில் முதன் முதலாக பிராங்கு ஹம்ப்ரிஸ் கணபதிமுனிவருடன் மஹரிஷிகள் சந்நிதிக்குவந்தார். வணக்கமுடன் பேசாமல் வெகு நேரமிருந்து மஹரிஷிகளின் விழிகளையே ஹம்ப்ரிஸ் பார்த்துக்கொண்டிருந்தார். "அவை உள்ளே சமாதியில் ஆழ்ந்திருந்தன. அவர் உடல் அசைவற்றது. அது வெறுங்கருவியாகவே இருந்தது. ஆண்டவனே அதன்மூலம் தனது வார்த்தைகளை மொழிந்தான் எனது உள்ளுணர்வை விவரிக்க மொழியில்லை" என்கிருர் ஹம்ப்ரிஸ்.

பிறகு முனிவர் ஹம்ப்ரிஸை பேசலாம் என்ருர்.

மஹரிஷிகள்:—ஆங்கிலத்திலேயே பதில் சொன்னுர்.

ஹம்ப்ரிஸ் :—குருவே, நான் உலகிற்கு உதவியாயிருப்பேனு?

மஹரிஷிகள்:—தனக்குத்தான் உதவிக்கொண்டால் உலகிற்கும் உதவினவனுவான். உலகினின்று தான் அன்னியனல்ல ; உலகும் தன்னின் வேறில்லை.

ஹம்ப்ரிஸ் :—குருவே கண்ணன் ஏசுநாதர்களைப்போல் நான் அற்புதச் செயல்களைச் செய்ய முடியுமா?

மஹரிஷிகள் :—அவர்கள் அச்செயல்களைச் செய்யும் போது, தாமே செய்ததாக உணர்ந்தாரா ?

ஹம்ப்ரிஸ் :—சற்று யோசித்து இல்லை குருவே !

மஹரிஷிகள் :—அவர்களைக் கருவியாகக் கொண்டு ஆண்டவன் சக்தியன்றோ அவற்றைப் புரிந்தது. தனது பரமாத்ம நிலையைப் பரிபூரணமான ஆத்ம ஸமர்ப்பணத்துடன் அடைவதே முதன்மை.

உபதேசம் — " பார்ப்போனைப்பார். "

ஆத்மஸித்தியே ஸித்தியென்று மஹரிஷிகள் பின்பு ஹம்ப்ரிஸுக்கு உபதேசித்தார்.

ஹம்ப்ரிஸ் மஹரிஷிகளிடம் பலமாக அன்பால் வசப்பட்டார் தம்மையும் ஒரு நெருங்கிய சீடராக ஆட்கொண்டு உபதேசம் செய்ததை வணக்கமுடன் போற்றினார். மஹரிஷிகள் முன்னிலையில் சிறுசிறு குழந்தைகளும் அமைதியான வணக்கமுடன் நாள்தோறும் வந்து உட்காருவதைக்கண்டு மகிழ்ந்தார். " அவர் உரை கடந்த பெருமையுள்ளவர் ; அவருடைய மகத்துவமும், மேன்மையும், அன்பும், மனவுறுதியும், சாந்தமும், நிச்சயபுத்தியும் அளவற்றது" என்று போற்றினார். இப்படி பல அரிய உபதேசம் பெற்று அனுஷ்டித்து பின்பு ஹம்ப்ரிஸ் புத்துணர்வடைந்தார். போலீஸ் அஸிஸ்டெண்டு சூப்பரிண்டெண்டா யிருந்தவர் கொஞ்சகாலத்தில் தமது வேலையை விடுத்து கத்தோலிய சந்நியாசியானார். இப்படி அநேக ஆங்கிலேயர்களும், இந்தியர்களும் ஜாதிமத பேதமின்றி யமைந்த ரமண பக்தர்களின் ஒவ்வொருவர் சரித்திரத்தையும் எழுதுவதென்றால் இடம் போராதென்று நிறுத்திக் கொள்ளுகிறேன்.

ஸ்ரீ ரமணமஹரிஷி ஓர் பிரம்மஞானி. அவர் ஜனனமெடுப்பதற்கு முன்னும் ஆத்மஞானி. ஜனனமெடுத்த

பின்பும் ஆத்மஞானி இவர் பிறக்கக் காரணமாயுள்ள பிராரப்தம், அடுத்தவர்களைத் தன்போலாக்கவேண்டுமென்ற சங்கல்பமே யாகும். தன்னைப்போலாக்கப்பட்டவர்கள், ஆக்கப்படுகிறவர்கள், ஆக்கப்படப்போகின்றவர்களுடைய மாஹிமையே ஸ்ரீரமண சரிதமாகும். தன் இயல்பின்படி பகவான் ஸ்ரீ ரமணர் தன்னை ஆச்ரயிக்கும் அன்பர்களெல்லாம் சொரூப தரிசனம்பெற்று பரமாத்ம சொரூபத்தில் இரண்டறக்கலந்து, பேரானந்தாதீதப் பெருவாழ்வடைய பூரணநோக்கங்கொண்டு சதா அனுக்கிரகித்துக் கொண்டேயிருக்கிறார்.

மஹரிஷியவர்கள் சந்நிதானத்தில் பேதபுத்தியுள்ளவர்கள் செயல்கள் கிஞ்சித்தும் செல்லாதென்பது செவ்வனே தெரிந்த விஷயம். மஹரிஷியவர்களுடன் அன்பர்கள் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது, பரிமாறும் பக்த சிரோமணி அன்புமேலீட்டினாலே பகவான் ரமணரிஷிகளுக்கு கொஞ்சம் அதிகப்படியாயும், மற்றவர்கட்கு கிரமமாகவும் படைத்திருந்துமறிந்த பகவான் அதற்கெனக் கோபங்கொள்ளாமல் மிக்க சாந்தமாகவே நான்வேறு அவர்கள் வேறு? எனக்கெனத்தனித்து ஒன்றும் அதிகமாக செய்தல்கூடாது. அன்பர்கட்கு அதிகம்செய்து எனக்கு குறைவாகசெய்தாலும் பாதகமில்லையென தனது பரிபூரண சமரஸபாவத்தை வியக்தமாக வெளிப்படுத்தினார். எங்குங் கண்டிராத காணவியலாத என்ன சமரசதிருஷ்டி! என்ன சமரச பாவனை.

ஆனால் எப்படியோ பகவானை அண்டிவந்த அன்பர்கள் துயரம் ஆடிமேகம்போலப் பறக்கின்றது. இதுதான் சந்நிதானப்பெருமை. ஆனால் மஹரிஷிகள் ஒருவரையும் சிஷ்யனாக ஏற்று இதுகாறும் தீக்ஷைகொடுத்ததில்லை. தாமே சுயம் பிரகாசராக விளங்குகிறார். "ஒரு அகண்ட ஜோதி எரிகிறது. [illegible]வோர் அதில் மனவிளக்கை யேற்றிக்கொள்ளலாம்."



ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்,

திருச்சிற்றம்பலம்.

## திருவருட் பிரகாச வள்ளலார்

# வடலூர். இராமலிங்க ஸ்வாமிகள்

## சரித்திரம்



### விருத்தம்

சிவஞான மணங்கமழ சித்தியெலா
மடைந்த பெருஞ் சீர்மை காட்டி
அவஞான மலமகற்றும் அருட்பாவை
இன்பமுற வருளிச் செய்த
தவஞான உத்தம ராமலிங்கமெனும்
தலைவரவர் தன்மை பெற்றே
நவஞானம் பொழிகின்ற நன்னிதியை
யென்றனுக்கு நல்கினாரே

அருட் பெருஞ் ஜோதியுருவாய் அண்ட புவன சரா சரங்களில் நீக்கமற நிறைந்து விளங்கும் நம் பெருமானனவர் பக்தர்களின் பக்குவத்திற் கேற்ப தமது சந்நிதான விசேஷ சக்தி (வல்லமை)யால் ஆக்கல், அளித்தல், அழித்தல், அனுக்ரஹித்தல் முதலியவைகளின் மூலமாக எந்தவிடத்தில் எந்தக்காலத்தில் தர்மமானது குறைந்து அதர்மமானது மேலிடுகின்றதோ அந்த விடத்தில் அக்காலத்தில் அவதார புருஷர்களைத் தோற்றுவித்து அபக்குவர்களைப் பக்குவப்படுத்தி உலகினரை உய்விப்பது ஒருதலை.

நமது இந்தியாவில் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர், தாயுமானவர், பட்டினத்தடிகள், சங்கரர்,

ராமனுஜர், ராமகிருஷ்ணபரமஹம்சர், ஸ்வாமி விவேகானந்தர் முதலிய பெரியார்கள் தோன்றினர். நமது திருவருட்பிரகாசவள்ளலாராகிய வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் திருவவதாரமுமங்ஙனமே.

இவர் சிதாகாசப் பெருவெளியில் நடமிடும் நடராஜப் பெருமான் அமர்ந்துள்ள திருத்தில்லை யென்னும் திவ்ய க்ஷேத்திரத்திற் கணித்தாயுள்ள திருமருதூரில் ஆமாத்திய ரென்னும் சீர்கருணீக மரபில் சதா சிவ சிந்தனையி லீடுபட்ட திருவண்ணுமலை மூலக்காடு இராமையப் பிள்ளை யென்பாருக்கும் மனைவி பொன்னேரி சின்னம்மை யென்னும் பெண்மணிக்கும், சபாபதிப் பிள்ளை, பரசுராமப் பிள்ளை, சுந்தரம்மாள், உண்ணுமுலை யம்மாள் என்னும் நான்கு சகோதரர்களுடன், ஓர் வயோதிக சிவயோகியாரின் திருவருட்பிரசாத மகிமையினுல், தெய்வ வடிவினரான பிள்ளைப் பெருமான் இராமலிங்கமெனும் திருநாமத்துடன் 1823ஞ அக்டோபர்மீ 5உ அவதாரமானுர்.

இவர் சிறு பருவத்தே தகப்பனுர் சிவபதமடைந்தனர். பின்பு தமையனுர் குடும்பத்துடன் சென்னையம் பதியடைந்து உபாத்திமைத் தொழில் மூலம் குடும்பத்தைப் போஷித்து வந்தார். இங்ஙனம் தமயனுர் போஷணையில் வளர்ந்துவரும் பிள்ளையவர்கள் ஐந்தாம் ஆண்டு நிரம்ப, ஓதுவிக்கும் திறமை மிகுந்த ஓர் வேதியரைக் கொண்டு வித்யாரம்பம் செய்யப் பெற்று, பின்பு தமையனுரையே வித்யா குருவாகக் கொண்டு கல்விகற்பதில் வல்லவராயினர். பின்னர் ஏழாமாண்டிற்குள் தெய்வபக்தி, சத்திய வுணர்வு, அடக்கம், அன்பு, அறிவு, அவாவறுத்தல், இரக்கம், இன்சொல், ஈகை, ஒழுக்கம், சாந்தம், தவம், நடுநிலை, வாய்மை முதலிய ஞானத்திற்குரிய சற்குணங்கள்யாவும் பூர்வவாசனை

யின் பக்குவப்படி தாமே வந்தடைந்தும், சமயாசாரப்படி தமயனார் தீக்ஷைபெற்றபின் தானும் அகமுக குருதீக்ஷை பெற்று, திருவெண்ணீற்றுப்பை, திருமந்திர சிறு புத்தகம், உருத்ராட்ச ஜபமாலை இம்மூன்றும் பூஷணமாகக் கொண்டார். அக்காலத்தில் நிலைக்கண்ணாடி ஒன்று வைத்து தன் சாயலை அதில் கண்டு அதன் காரணமாயுள்ள ஆத்துமதத்துவத்தை நினைத்து தன்னைத்தான் அறிவிக்கும் காரணனை உபாசிக்கலாயினர். அக்காலத்திலேயே வேதாந்த சித்தாந்த சந்தேக விபரீத அர்த்தங்கட்குக் கேட்பா ரதிசயிக்கும் வண்ணம் பொருத்தமுறும் சமாதானங்களை விரித்துக் காட்டி சம்பாஷிக்கலாயினர். பின்னர் ஒன்பதாம் ஆண்டில் கந்தர் சஷ்டி காலத்தில் உபவாசமிருந்து திருத்தணிகாசல தெய்வத்தைச் சிந்தித்து.

“ ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே,தெய்வ யானைமகிழ் மணிக்குன்றே யரசே முக்கட், பேறுமுகப் பெருஞ்சுடர்குட் சுடரே செவ்வேல் பிடித்தருளும் பெருந்தகையே பிரம ஞானம், வீறுமுக........................................................

பன்னிருகண் மலர் மலர்ந்த கடலே, ஞானப்பரஞ் சுடரே யாறுமுகம் படைத்த கோவே, யென்னிருகண் மணியே யெந்தாயே யென்னை யீன்றானே யென்னரசே யென்றன் வாழ்வே, மின்னிருவர் ”

என்று சொல் நயம் பொருள் நயமுறு தோத்திரமாம் தணிகைப்பதிக மோத அக்காலத்தில் திருத்தணிகாசலனும், சின் முத்திரையைக் காட்டி திருவருள் செய்தார். இஃதிப்படி யிருக்க.

சென்னையம்பதியில் வழக்கமாக பிள்ளையவர்கள் புராணச் செய்யுள் சொல்ல தமயனார் செய்யுளுக்கு உரை சொல்லி புராணப் பிரசங்கம் செய்து வரும் நாளில் ஓர் நாள்

தமயனாருக்கு தேகம் அசௌகர்யப்பட புராணப்பிரசங்கத்திற்குப் போகத்தடைப்பட்டதினால், வழக்கம்போல் நடைபெற்ற பிரசங்கத்தை நிறுத்தக் கூடாதென்று அன்பர்கள் பலரும் தமையனாரை, "தங்கள் தம்பி இராமலிங்கம் பிள்ளையை யேனும் அவசியம் அனுப்பவேண்டும்" என்று வேண்ட, அதற்கிணங்கிப் பிள்ளையவர்கள் செய்யுள்படித்து தானே உரை சொல்லும் போது நம்பெருமான் பகவான் அருட்பிரசாதத்தை யுண்டவரானதால், திருவாய் மலர்ந்தருளி கடன்மடை திறந்திட்ட ஜலம் போலும், சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தாற் போலும், அமிர்தவசன மொழிகளைப் பொழிய கேட்போர் என்றுங் கேட்டானந்திக்கா ஆனந்தபரவசராயினர். இப்படியே 2-3 தினங்களும் நடக்க இச்செய்தி பலராலும் தமயனார் கேட்டு, அதி ஆச்சர்யமுற்று தேக அசௌகர்யத்துடன் ரகசியமாக கூட்டத்திலொருவராய் அமர்ந்து பிள்ளையவர்கள் புராணப் பிரசங்க மழை வருஷிப்பதைப் பார்க்க இஃது தெய்வசம்பத்துடன் கூடிய அருள் மாரியான படியினால் இப்படி அருளுடன் கூடிய சொல் மழை வருஷித்த விடத்தில் இனிநாம் இந்த இடத்திற்கு தகுதியல்ல. இது வரையில் தம்பி யென்றிருந்தேன். இனி தம்பியல்ல, முருகக்கடவுளே யென்பதாக நினைத்து அன்னவரையே புராண பிரசங்கம் பூராவாக முடிக்கும்படி செய்தனர். என்ன விந்தை !

பின்னர் திருவொற்றியூர்ப் பெருமானார் சிறப்பைக் கேள்வியுற்று அத்தலத்திற்குச் சென்று எழுத்தறியும் பெருமானும் தியாகப் பெருமானை தினம் அன்புடன் தொழுது வரும் நாளில்,

"அருட்குருவே இவ்வுலக ஆபாசக்கடலில் மூழ்கி கரைதெரியாது கலங்கி நிற்கும் அடியேனை தேவரீர் திரு

வுள்ளத்தில் கொண்டு கரையேற்றும் நாளெந்நாளோ. தேவரீர் திருச்சந்நிதானத்தில் ஏழையேனுகிய நாயேன் என் குறையினை இன்னபடி என்றெடுத்து புலம்பும் ஆற்ற லில்லேன். என் செய்வேன் என் குருநாதா, இனி அடியேன் கடைத்தேற திருவருள் செய்ய வேண்டியது உமது கடமையாகும்"

என்று விண்ணப்பித்து நிற்க அங்ஙனமே சற்குரு கடாக்ஷம் பெற்று அமிழ்தினுமினிய திருவருட்பா பாட தொடங்கினர்.

பின்பு அருள் நோக்கம் பெற்று பிரமானந்த முற்று திருவருளை வியந்து வியந்து ஆடுவதும் பாடுவதும் ஆனந் தக் கண்ணீர் விடுவதுமாயிருந்தார். ஓர்நாள் பசியோடு சிவா னந்த நித்திரைசெய்தார். அச்சமயத்தில் கோயிற் குருக்கள் போல் (தியாகேசப் பெருமான்) உருக்கொண்டு பிள்ளையவர் களின் துயிலகற்றி சிவப்பிரசாதந் தந்தருள, அதனை வாங்கி யுண்டு ஆன்மவிசாரத் தழுந்தினர். மறுநாள் பிள்ளையவர்கள் இரவு வந்த கோயிற் குருக்களை விசாரிக்க அவர் இரண்டு தினமாக ஊரிலில்லை யென்றார். பின்பு பிள்ளையவர்கள் தியா கேசப் பெருமானே வந்தாரெனத் தீர்மானித்தார். என்னே கடவுளின் கருணை!

வேறொரு நாள் ஒற்றியூர் சத்திரத்தில் ஓரிரவில் படுத் துக் கொண்டிருக்கும்போது, ஒரு கள்வன் வள்ளலாரது வலது காதிலுள்ள கடுக்கனைக் கழற்ற, இடது காதினையும் காட்டவே இரண்டையும் கள்வன் எடுத்துக்கொண்டு ஏகி னன்.

இப்படியிருக்கும் நாளில் தாயார் சின்னம்மையாரும் தமயனார் சபாபதிப் பிள்ளை பரசுராமப் பிள்ளையும் தமக் கையாரும் பிள்ளையவர்களுக்கு திருமணம் செய்துவைக்கத் தீர்மானித்து பலகாலும் பிள்ளையவர்களை நிர்ப்பந்தித்து வேண்டுவராயினர். அதற்குப் பிள்ளையவர்கள் நீவிர் அவ்வி

ரும் என்னினும் முதியரே யாயினும் இது விஷயமாக நிர்ப்பந்திப்பது தகுதியன்றென்று உடன்படாதவரானார். மீட்டும் தமயனார் தமக்கையார் பல உலக ஞாயங்கள் எடுத்தோத திருஞானசம்பந்தர் மூவாண்டில் ஞானப் பாலுண்டு சிவஞான மூர்த்தியாய் விளங்கியும், தந்தை சிவபாத விருதயர் வேண்டு கோளின் பொருட்டு திருமணக் கோலம் கொண்டாற்போல தமையனார் சொல்லைத் தலைமேற் கொண்டு தமக்கையார் பெண் தனம்மாள் என்னும் மாதினைத் திருமணம் புரிந்தார். எனினும் பின்பு அது விஷயத்தில் எவ்வகைப் பற்றும் சிறிதுமின்றி சதானந்த சகஜநிஷ்டை சாதனமுடையாராயினர். இங்ஙனம் பல அறிஞர்களுக்கு போதகாசிரியராக விருந்து, வேதாந்த சித்தாந்த சமரச நூற்களைப் போதித்து, அருட்பாக்களைப்பாடுவதும், அன்பர்கட்கு ஞானார்த்தங்களை பொழிவதுமாக விருக்கும் நாளில், தம்மை யீன்ற சின்னம்மை சிவநெறியடையக் கண்டு அவர்கட்கு மோக்ஷதீபகைங்கர்யங்களை சிவதீக்ஷையின் நெறிப்படி செய்து, சென்னையம்பதியில் வீற்றிருந்த நாளில் பொருள் வேண்டும் ஒருவர் பிள்ளையவர்களை அடுத்து தங்கள் அன்பிற்கிசைந்த நண்பர்கட்கு கடிதம் கொடுக்கும்படி வேண்ட,

"ஏட்டாலுங்கேளய லென்பாரை
    நான்சிரித் தென்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடங் கேளே
    னென்னுணைப் புறம் விடுத்துக்
கேட்டாலு மென்னை யுடையா
    னிடஞ்சென்று கேட்பனென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ்
    சொல்லி நிறுத்துவனே."

என சீட்டுக்கவி வரைந்து கொடுத்தும், செல்வ மிகுந்த மற்றொருவர் தமது புத்திரியின் திருமணத்திற்கு பிள்ளையவர்களை வரும்படி விரும்ப அவர்மனம் நோகாது,

"சோடில்லை மேல்வெள்ளைச் சொக்காயில்லை
நல்ல சோமனில்லைப்
பாடில்லை கையிற் பணமில்லை
தேகப் பருமனில்லை
வீடில்லை யாதொரு வீறுப்பு
மில்லை விவாகமது
நாடில்லை நீநெஞ்சமே
யெந்தவாறினி நண்ணுவையே."

என சீட்டுக்கவி யெழுதிக்கொடுத்தும் மற்றொரு சீமான், பிள்ளையவர்களை தமதிடம் வரவிரும்ப "**குடும்ப கோரம்**" என்னும் அகவற்பா வெழுதி (தனக்குள்ளிருக்கும் தத்துவக் குடும்பத்தினரை) சுட்டிக்காட்டி நான் குடும்பத் தொல்லைக்காரன் வரமுடியாதென்று மறுத்து மமர்ந்தனர்.

பின்னர், சிதம்பரம் தலத்தில் வந்து அநேக காலம் ஸ்ரீமந் நடராஜப் பெருமானை தரிசனம் பண்ணி, சிலருடன் சீகாழி, வைத்தீச்வரன் கோயில், திருவாரூர், திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர் முதலிய ஸ்தலங்கள் சென்று ஆங்கமர்ந்திருக்கும் சிவபெருமான் மீது பற்பலபாக்கள்பாடி பரவச மடைந்து, பின்பு சிதம்பரத்திற் கெழுந்தருளி ஆனந்தத் தாண்டவதரிசனம் செய்து, தமது பிறப்பிடமாகிய மருதூரை யடுத்த கருங்குழிக்கு வந்த காலத்தில், பிள்ளையவர்கள் செய்த ஆறு திருமுறைகளடங்கிய திருவருட்பாவை அச்சிட்டு வெளியிட்டனர். அக்காலத்தில் திருமயிலை யென்னும் திவ்ய க்ஷேத்திரத்தில் தமது மூத்த சகோதரர் சபாபதி பிள்ளை யென்பவர் சிவநெறியடைந்தனர். என்றாலும், இதைக் கவனியாமல் பிள்ளையவர்கள் சிவானுபவ நிலையிலேயே அமர்ந்திருந்தனர்.

ரும் என்னினும் முதியரே யாயினும் இது விஷயமாக நிர்ப்பந்திப்பது தகுதியன்றென்று உடன்படாதவரானார். மீட்டும் தமயனார் தமக்கையார் பல உலக ஞாயங்கள் எடுத்தோத திருஞானசம்பந்தர் மூவாண்டில் ஞானப் பாலுண்டு சிவஞான மூர்த்தியாய் விளங்கியும், தந்தை சிவபாத விருதயர் வேண்டுகோளின் பொருட்டு திருமணக் கோலம் கொண்டாற்போல தமையனார் சொல்லைத் தலைமேற்கொண்டு தமக்கையார் பெண் தனம்மாள் என்னும் மாதினைத் திருமணம் புரிந்தார். எனினும் பின்பு அது விஷயத்தில் எவ்வகைப் பற்றும் சிறிதுமின்றி சதானந்த சகஜநிஷ்டை சாதனமுடையாராயினர். இங்ஙனம் பல அறிஞர்களுக்கு போதகாசிரியராக விருந்து, வேதாந்த சித்தாந்த சமரச நூற்களைப் போதித்து, அருட்பாக்களைப்பாடுவதும், அன்பர்கட்கு ஞானார்த்தங்களை பொழிவதுமாக விருக்கும் நாளில், தம்மை யீன்ற சின்னம்மை சிவநெறியடையக் கண்டு அவர்கட்கு மோக்ஷதீபகைங்கர்யங்களை சிவதீக்ஷையின் நெறிப்படி செய்து, சென்னையம்பதியில் வீற்றிருந்த நாளில் பொருள் வேண்டும் ஒருவர் பிள்ளையவர்களை அடுத்து தங்கள் அன்பிற்கிசைந்த நண்பர்கட்கு கடிதம் கொடுக்கும்படி வேண்ட,

"ஏட்டாலுங்கேளய லென்பாரை
நான்சிரித் தென்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடங் கேளே
னென்னுணைப் புறம் விடுத்துக்
கேட்டாலு மென்னை யுடையா
னிடஞ்சென்று கேட்பனென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ்
சொல்லி நிறுத்துவனே."

என சீட்டுக்கவி வரைந்து கொடுத்தும், செல்வ மிகுந்த மற்றொருவர் தமது புத்திரியின் திருமணத்திற்கு பிள்ளையவர்களை வரும்படி விரும்ப அவர்மனம் நோகாது,

"சோடில்லை மேல்வெள்ளைச் சொக்காயிலை
நல்ல சோமனில்லைப்
பாடில்லை கையிற் பணமில்லை
தேகப் பருமனில்லை
வீடில்லை யாதொரு வீறுப்பு
மில்லை விவாகமது
நாடில்லை நீநெஞ்சமே
யெந்தவாறினி நண்ணுவையே."

என சீட்டுக்கவி யெழுதிக்கொடுத்தும் மற்றொரு சீமான், பிள்ளையவர்களை தமதிடம் வரவிரும்ப "**குடும்ப கோரம்**" என்னும் அகவற்பா வெழுதி (தனக்குள்ளிருக்கும் தத்துவக் குடும்பத்தினரை) சுட்டிக்காட்டி நான் குடும்பத் தொல்லைக்காரன் வரமுடியாதென்று மறுத்து மமர்ந்தனர்.

பின்னர், சிதம்பரம் தலத்தில் வந்து அனேக காலம் ஸ்ரீமந் நடராஜப் பெருமானை தரிசனம் பண்ணி, சில்ருடன் சீகாழி, வைத்தீச்வரன் கோயில், திருவாரூர், திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர் முதலிய ஸ்தலங்கள் சென்று ஆங்கமர்ந்திருக்கும் சிவபெருமான் மீது பற்பலபாக்கள்பாடி பரவச மடைந்து, பின்பு சிதம்பரத்திற் கெழுந்தருளி ஆனந்தத் தாண்டவதரிசனம் செய்து, தமது பிறப்பிடமாகிய மருதூரை யடுத்த கருங்குழிக்கு வந்த காலத்தில், பிள்ளையவர்கள் செய்த ஆறு திருமுறைகளடங்கிய திருவருட்பாவை அச்சிட்டு வெளியிட்டனர். அக்காலத்தில் திருமயிலை யென்னும் திவ்ய க்ஷேத்திரத்தில் தமது மூத்த சகோதரர் சபாபதி பிள்ளை யென்பவர் சிவநெறியடைந்தனர். என்றாலும், இதைக் கவனியாமல் பிள்ளையவர்கள் சிவானுபவ நிலையிலேயே அமர்ந்திருந்தனர்.

பின்னர், பிரபவஞு வைகாசிமீ 11உ குருவாரத்தன்று கடவுள் நியதிப்படிக்கு சத்தியஞானலயப் பிரதிஷ்டை செய்ய வடலூர் பெருவெளியில் அஸ்திவாரமிட்டு, சிதம்பரம் நான்கு கோபுரமும் ஒருங்கே தோன்று மிடமாயுள்ள ஷை ஞானலயத்திற்கு சமீபம் சத்திய தருமச்சாலை, நிருத்த சித்தி விநாயகராலயம் முதலியவை நியமித்து ஷை தருமச்சாலையில் தாமெழுந்தருளி ஜீவகாருண்ய உபந்நியாசம் செய்து ஜாதி சமயக் கொள்கையை விட்டு பதினாயிரம் பேர்கட்கு மூன்று தினம் அன்னமிட்டுத் திருப்திசெய்தனர்.

அச்சமயம் பிள்ளையவர்களை அணுகியவர்களுக்கு தத்துவாதீதமாகி விளங்கு முதற்கடவுளைக்காண விருப்புடையீராயின், நீவிர் இது தருணம் தொடங்கி புலை, கொலை, கள், காமம், பொய் நீக்கி, ஜீவகாருண்யத்தைக் கைப்பிடித்து ஈசுர பக்திமான்களாய் வாழும் வாழ்க்கையே வாழ்மின் என்று கூறி, பிறகு ஞானசபைக்குள் காணும் திண்மையி னுண்மை அவ்வரிய ஞானமே சபையாக அம்மெய்ஞான உள்ளொளியே தெய்வமாய் அவ்வொளியினசைவே நடனமாகி விளங்களால் நடராஜமணியும் அவ்வசைவு நீங்கின விடமே ஆனந்தாதீதம் அதுவே சிதம்பரமெனவுட் கொண்ட அனுபவாதீத மூர்த்தியுமாதலின்:—அவ்வனுபவத்தை வெளிமுகமாக்கும் பொருட்டு கருப்புதிரை (மாமாயை) நீலத்திரை (மாயாசக்தி) பச்சைத்திரை (கிரியாசக்தி) சிவப்புத்திரை (பராசக்தி) பொன்மைத்திரை (இச்சாசக்தி) வெண்மைத்திரை (ஞானசக்தி) கலப்புத்திரை (ஆதிசக்தி) முதலிய 7, திரைகளிட்டும் அவ்வேழுதிரைகளும் நீங்கியவிடத்தே அருட்பெருஞ்ஜோதி தரிசனம் கிடைக்கு மென்றும், அது கிரியை முடிந்த ஞான மாதலின் ஞானபூசையே முக்கியமென்றும் கற்பூரஜோதி ஆராதனையே நியாய அனுபவத்திற்கு ஆராதிக்கத் தக்கதென்றும், அம்மன்றத்தை யமைக்கும் நிலைபு

முணர்த்தி, அஷ்டகோணமாக தாமரைப்புஷ்பம் போன்ற சபை ஒன்றுகட்டுதல் எல்லாம் வல்ல இறைவனருளால் முடிவு பெறுமென்று தம்மைச் சூழ்ந்தவர்கட்கு ஆணை யிட்டு தாம் மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையி லேயே கட்டும் அச்சபைமுகம் பாராமலும், கும்பாபிஷே கத்திற்கும் போகாமலும், நிஷ்டானுபூதியுடைய வராயிருந்து தம்மையடுத்து வரும் அன்பர்கட்கு ஜீவகாருண்யத்தின் உண்மையை எடுத்தோதியும், பக்தர்களின் பக்குவத்திற் கேற்றவாறு வேதாந்த சித்தாந்த யோகாந்த நாதாந்த போ தாந்த கலாந்த ஞான ரகசியத்தினை விண்மாரி பொழிந்தாற் போல், அருண்மாரி பொழிந்தும் விளங்கி ஒருநாள் அன்பர் களை நோக்கி **"கடையைவிரித்தோம் கோள்ளுவாரில்லை கட்டிவிட்டோம்"** நீங்கள் அருள் அடைவதற்கு இந்த தீபத் தினை கடவுளெனக்கொண்டு சிந்தித்துக் கொண்டிருங்கள். என்றருளி ஸ்ரீமுக வருஷம் தைமீ 19உ சுக்ரவாரம் புனர் பூச நக்ஷத்திரங்கூடியநாள் நடுராத்திரி 12-மணிக்கு அளவுகடந்த நெடுங்காலம் சதானந்த சமாதி நிஷ்டைகூட விச்சித்துள்ளோம். எனது சரீரம் சிறிது காலத்திற்குள் உங்கள் கண்களுக்குத் தோற்றாது மறைந்து போம். இப் பூத வுடம்பையே புனிதஉடம்பாக்கி சுத்த சுவர்ண பிரணவ தேகமாகக் கொண்டு சகல சித்திகளும் சித்திக்கப்பெற்று ஞான சம்பந்த குருத்வ நிலையைப் பெறுவோ" மென்று சொல்லி சின்மாத்ர சகஜசமாதியில் அசைவற நின்று தமது ஆத்ம சற்குருவைச்சிந்தித்து தாமமர்ந்திருந்த அவ் வறையை மூடிப்பூட்டிக்கொள்ள, தமதன்பர்கட்கு குறிப் புணர்த்தி பூட்டச்செய்து தாமுந் தமதிந்திரியக் கதவை மூடி, மௌன நிஷ்டை கூடி நித்தியானந்த முற்றனர்.

இக்குருநாதர் கட்டளை யிட்ட வண்ணம் இத்திருமா ளிகை தக்ஷிணமுகப்பில் தோன்றுந் துணையாயிருந்த காலத் தில் ஸ்தாபித்துவைத்த சத்திய ஞானதீப மென்னும் அகண் டம் இன்றும் பிரகாசித்து ஓங்கி வளர்ந்து கொண்டிருக் கிறது.

திருச்சிற்றம்பலம்.

# நேரிசையாசிரியப்பா.

உலகினிதயமு முலகின் மூலையு மிலகும் பாவன வெழிலார் குகையிற், றம்முட்டாமே சம்பா டித்தன வம் மொழி கேட்டோ ரனைவரு மக்காற், றம்முரை யற்றுத் தம்பமா யிருந்தன ரிம்மகிக் கிதயமா யிருந்தொளிர் பானுவி னொளிமதி யினைத்தன் னுயரத் தொளிர்ப்ப வொளிதரு மம்மதி யுலகிற் கதுபோ, லிதய மிடமா யிருந்திடு முனியி னுதட்டி னின்றெழ வுபநிட தங்கள், மூலையிடங் கொள் முதல்வற்காக ஞாலம் போன்று நாங்களுங் கேட்டோஞ் செவியுறுந் தூய திருவாசகத்தி லவிர்தரு மொவ்வோருரும் பதவுண்மை, யதுவாத்திடுவ னலக்கண மாயினு மெதனு லுண்மை யெனினுண்மை யானே, யம்மகா மௌனி யாகிய ரமண னெம்மறை பொருட்கு மிரகசியமான, விதயமு மூலையு மெடுத்தினி துரைத்தா னதனைப் பிதற்றுவ னறி விலியானுஞ், சிறிதைப்பெரிதா தெரித்திடு மாடி மருவு துவார வழியெந்திரத்தி, னகத்திற் புகட்டுந் தகட்டுளவோ விய மிகப்பெரி தாச்சுவர் விளையாடிடல்போ, லிதயத் தனுவா யிருந்திடு பற்று மதுவு மூலையா மாடியாற் றூல மாய்க், கண்வாய் மூக்கிவை களாற்புறம் போந்து விண் ணில் விதவித விசித்திரங்காட்டு, மிதயந் தன்னி லிந்நாட் கழித்தன னிதினின்றுலகில் யான் வருபோதி, லறிந்த னன் மூலையா லகத்துறு மென்வழி யறிந்தன னென்றெ ழுங் கதுவு மங்கனே, யென்றவித் தூமொழி யிசைத்து முடித்தன் னன்றவை யண்ணலு மகத்திற் குறித்தன, ருமனை வருனல மாமானங் கொண்டன மாமவையானுமிவ் வமையம் விண்டன, ஞாணி யருணு சலனுங் கிலத்திற் றூரணி யோர்க்குச் சாற்று சீரணி பாக்களின் செந்தமி ழிதுவே.




# துரியவெளி

## அல்லது எனது அநுபவம்



### விருத்தம்.

கருணைமணங் கந்திக்கும் கமலத்தே யினிக்கும்
கதிக்குவழி காட்டிவிடும் வேதமணம் நாறும்
பொருணிறைந்த சிவயோக மணம்வீசும் ஞானம்
பொங்கிவரும் வேதாந்த மணங்கமழும் பொல்லா
மருணீக்கு மாமலராம் மோனமணம் மணக்கும்
மதிபெருகும் சித்தாந்தமணம் பரிமளிக்கும்
அருணைவாழ் ரமணகுரு ஆனந்த மருளும்
அவதார அண்ணலடி அருமலரி னிடத்தே.

"உலகத்தில் மனிதப் பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்கள் இந்தப்பிறப்பினால் அடையத்தக்க ஆ[illegible]லாபத்தைக் காலமுள்ள போதே அறிந்து அடைய வேண்டும்" என்பது அருட்பெருஞ்சித்தன் என் அப்பன்

வாக்கு. அதற்கிணங்க அக்காரியத்தில் பிரவேசித்து அந்த அனுகூலத்தால் அடைந்த எனது அனுபவத்தை எனது குருநாதன் பகவான் ரமணனது திருப்பொற் பாதங்களை எனது சிரமேற்றாங்கி கதையாத் துவக்குகின்றேன்.

" திருவருட் சம்மதம் போலாகுக "

எனது அனுபவ சரித்திரத்தை நானே எழுதுவதில் பலர் பலவாறாக நினைக்கலாம். பலர் பலவாறாகப் பேசலாம். எனது பகிரங்கச் செய்கைகள் பார்ப்போருக்கு பலவாறாகத் தோற்றலாம். அந்தரங்கத்து பரமாத்மா ஒன்றையே நாடியிருக்கின்றேன். இதற்கு என்னை நடத்துவோன்தான் சாக்ஷி. எனது ஆரம்பத்திலிருந்து அனுபவத்தை எழுதுவதில் சிற்சில தவறிய வழிகளு மிருக்கலாம். சரியான வழியுமிருக்கலாம். இதனால் எனக்குப் புகழோ பெருமையோ உண்டாக வேண்டும் மென்னும் அகம்பாவத்துடன் இதை எழுதவில்லை. உண்மையை உணர ஆரம்பகாலத்தில் எவ்வளவோ கஷ்டப்பட்டேனல்லவா? அன்பர்களாகிய ஞானத்துறையி றங்குவோருக்கு அக்கஷ்டங்களெல்லாம் நீங்கி நேரான பாதையை அடைய இது ஒரு தைரியம் கொடுக்கும். ஊன்று கோலாகுமென மதித்து இந்நூலை எழுதுகின்றேன்.

தென்னிந்தியாவில் மிக விசேஷிக்கப்பெற்ற பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகியதும், என்றும் தில்லைவாழ் அந்தணர்களால் பூஜிக்கப்பெற்று சிறப்புற்றோங்கியதும், அருள் வடிவக் கடவுள் ஞான ஸ்வரூபத்தைக் குறிக்கும் சிதாகாசத்தையும், ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீமந் நடராஜ பெருமானையும் கொண்ட திவ்யஸ்தலமுமாகிய சிதம்பரத்திற்கு வடமேற்கு பதின்மூன்று மைல் தூரத்திலுள்ளதும், ஸ்வரூபானந்த ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்று பாடு துறைமுதலிய விஞ்ஞான நூல்களைச்செய்த ஞானானுபவச்

செல்வராகிய மஹான் தத்துவராயஸ்வாமிகள் விதேக கைவல்யம் பெற்று ஆலயமாகக் கொண்ட கதம்பவனமென்னும் எறும்பூர் திவ்ய க்ஷேத்திரத்திற்கு வடகிழக்கு மூன்றுமைல் தூரத்திலுள்ளதும், திருவருட்பிரகாச வள்ளலாராம் இராமலிங்க சுவாமிகள் அன்பர்கள் அருட்பெருஞ்ஜோதி தரிசனம் கண்டு களித்துக் கடைத்தேறும் வண்ணம் ஞான சபையை ஸ்தாபித்த வடசிதம்பரம், பார்வதிபுரம், உத்தரஞானசித்திபுரம் எனப்படும். வடலூரென்னும் திவ்யக்ஷேத்திரத்திற்கு நேர்தெற்கு நான்கு மைல் தூரத்திலுள்ளதும், சுவாமிமலையிற் போல் கருங்கல்லினால் கட்டப்பட்ட சிறு மேட்டின்மேல் இராமேச்வர ஐதிகப்படி ஸ்ரீபர்வத வர்த்தனி அம்பாள் சமேத ஸ்ரீ இராமலிங்கேச்வரர், இராமபிரான் முதலியவர்கள் கோயில்கொண்ட கிராமமாகிய பின்னலூரில் வடராஜா வாய்க்கால் நதி தீரத்தின் மேல் கரையில் வடலூர் இராமலிங்க சுவாமிகள் (இது என் தகப்பனார் சிதம்பரம் பிள்ளையால் சொல்லக்கேட்டேன்.) ஓரோர் சமயம் வந்தமர்வதும் என் தந்தையார் சிதம்பரம் பிள்ளை பாட்டனார் வைத்தியநாத பிள்ளை முதலியோர் சமாதி கொண்டுள்ளதுமான, புராதன மடத்தை ஸ்தாபித்த காருகாத்தாரென்னும் சைவ வேளாள குலத்து செய்புதரிய வம்சப் பெரியார்வழிவந்த சிதம்பரம் பிள்ளைக்கும் மனைவியார் அருந்தவம் அம்மாளுக்கும் முறையே ஜனித்த இராமலிங்கம் சிவ குருநாதன் என்னும் இருவருள் இராமலிங்கம் கர வருஷம் வைகாசிமாதம் 22உ புதன்கிழமை அசுவதிநட்சத்திரம் நாழிகை 45-11-க்கு உதயாதிநாழிகை 25-க்கு துலாலக்கினத்தில் பிறந்தனன்.

அருந்தவமே அன்பதனால் வருந்திக்கொண்டே
அருள்ராம லிங்கனவனருளையுன்னி
இருந்தநிலை யறிந்திடவே யெண்ணியெண்ணி
யியல்புநிலை யருட்பாவி லேகுகின்று

பொருந்திடநன் சூலாகிப் பெற்றபாலன்
புகழ்பெறவே பொய்யுலகின் போக்கில்நிற்கா
திருந்திடநன் மகனவனும் ரமணன்பின்னே
திரிந்துமிகப் பித்தாகு னென்னசெய்வாள்.

கடல் சூழ்ந்த உலகமானது எந்நாளில் உற்பத்தியா னதோ அந்நாள்தொட்டு இந்நாள் வரைக்கும் எனது அறி யாமையால் பாவ புண்ணியத்திற் கிசைந்தவாறு அனேக ஜனனங்களெடுத்து அலுத்துக்களைத்து வரும் நாளில், எனது மாதா பிதாக்கள் வடலூர் இராமலிங்க சுவாமிகளை நேரில் தரிசனம்செய்தும், சம்பாஷித்தும் அவர்அநுக்ரஹத் தின் பயனாகப் பிறந்தவனான படியினால் எனக்கும் ஷை மஹான் இராமலிங்க சுவாமிகளின் பெயரையே இராமலிங்க மென திருநாமஞ் சூட்டி வளர்த்து வரும் நாளில், ஷை இராம லிங்க சுவாமிகளின் அருட்பாவை எனது தாயார் அருந்த வம் அம்மாள் மிக்க உருக்கமாக ஆழ்ந்த கருத்துடன் படித் துக் கண்ணீர்காலுறுகப் பெருக அழுது தன்னை அறியாமற் புலம்புவதைப்பார்த்து சிறியேன் ஆச்சர்யப்படுவேன். எனது தந்தையார் சிதம்பரம் பிள்ளை யோகதண்டுடன் யோகம் பழகுதலும், விடியற்காலை மூன்றுமணிக்கு ஷை அருட்பாவை தோத்திரம் செய்தலும் பழக்கம். ஆனால் அக் காலத்தில் அவர்கள் படிப்பதின் நோக்கம் யோகம் செய்வ தின் சாராம்சம் எனக்கு ஒன்றுமே தெரியாது. எனது எட்டு வயதாம் ஞான மெட்டாப் பருவமதில் எனது தந்தையார் சிதம்பரம் பிள்ளை எனக்கென்று வீட்டின் சுவரில் ஓர் சிறிய அலமாரி அமைத்து, அதில் விநாயகர் செம்பு விக் கிரஹம் ஒன்று அமைத்தும், இன்னம் பழனி ஆண்டவர் படம் ஸ்ரீ நடராஜ மூர்த்திபடம் முதலியவைகளை ஸ்தா பித்து அதற்கு விநோத ரஸகுண்டு முதலியவைகளால் அலங்கரித்தும் விக்கிரஹம் படமுதலியவைகட்கு ருத்ரா

கூஷமாலை அணிந்தும், எ ங் க ள து வம்சபாரம்பரை மடத்தின் நந்தவனத்திலுள்ள புஷ்பங்களெடுத்துவர புஷ்பக் குடலைகள் அமைத்துக் கொடுத்தும் சுத்த பத்தியோடு பூஜை செய்து வரும்படி ஆக்ஞாபித்தார். அதன்படி நடக்க ஓர் நாள் சிறு பிள்ளை விளையாட்டில் புஷ்பமெடுக்கத்தவறி விட்டபடியால் வேண்டியது கிடைத்தது. ஓர்நாள் பூஜை செய்து தூபதீபநைவேத்தியம் முடிக்காமல் அலட்சியமாக சாப்பாட்டிற்கு உட்கார்ந்து விட்டேன். தந்தையார் இவன் குளிக்காமலும் பூஜைசெய்யாமலும் சாப்பாட்டுக்கு உட்கார்ந்து விட்டபடியினால் சாப்பாடு போடாதே யென்று தாயார் அருந்தவம் அம்மாளுக்கு கண்டிப்பான உத்திரவு செய்தார். என் செய்வேன். அவர்கள் கட்டளைக்குக் கீழ்ப் படிந்து ஸ்நானம் செய்து பூஜை முடித்து சாப்பிடலானேன். இதில் மற்றொரு விசேஷமாவது "ஔவை" அருளிச் செய்த மூன்றுபைசா விலையுள்ள விநாயகர் அகவல் என்ற புத்தகத்தை வாங்கிக்கொடுத்து, அதை தனி நோட்டில் என்கையினாலேயே எழுதி பாராயணமாக வரப் பண்ணி தனது நேரில் ஒப்புவிப்பதுடன், பூஜைபண்ணும்போது விநாயகரிடம் தோத்திரம் பண்ணிவர சட்டதிட்டங்கள் அமைத்தார்.

இதில் ஐந்து நிமிஷம் சொல்ல வேண்டிய அகவலை ஓர் நாள் இரண்டேநிமிஷத்தில் தென்னிந்தியா ரயில் போட் மெயிலைவிட அதிக து ரி த ம ா க ஒன்றை விட்டு ஒன்று சொல்லி முடுக்கி முடிக்க ஆரம்பித்தேன். பார்த்தார் தந்தையார், சாவதானமாக என்னை ஓரிடத்தில் உட்காரவைத்து செல்லுகிறேன் கேளென்று ஔவையார் கதையைத் துவக்கினார்.

முன்பு ஒருகாலத்தில் சேரமான்பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் கைலாயத்திற்குப் போவதைத்

தெரிந்து, விநாயகர் பூஜை செய்து கொண்டிருந்த ஒளவை என்பவள் தானும் அவர்களுடன் கைலாயத்திற்குப்போக விருப்பங்கொண்டு மிக்க துரிதமாக பூஜை செய்தாள். அப்பொழுது விநாயகர் ஒளவையைப் பார்த்து ஒளவையே நீ சாவதானமாக பூஜை செய் அவர்களுக்கு முன்னதாக நீபோய்ச் சேர்வாய் என்றார். அப்படியே துரித மில்லாமல் பூஜைசெய்து இந்த அகவலை தோத்திரமாகப் பாடினள். விநாயகர் தாம் சொன்னபடியே தனது தும்பிக்கையால் ஒளவையாரைத்தூக்கி கைலாயத்திற் சேர்த்து விட்டார். ஒளவை கைலாயத்திற் சென்று முன்னதாக வந்த சேரமான் பெருமாள் நாயனரைக் காணமற்றிகைத்து வரும் வழியைப்பார்க்க அப்பொழுது தான் முகில் போன் முழங்கி அதிரநடந்திடும் யானையும் தேரும் அதன்பின் குதிரையும் நாயனரும் காதவழி தூரத்திற்கப்பால் வந்து கொண்டிருக்கிறார்களாம்.

இவ்வளவு மகிமை பொருந்தியது இந்த அகவற்பா எனவுரைத்து இனி மிகவும் சாவதானமாக வார்த்தையின் பொருளைக்கவனித்து நிதானித்து பூஜைசெய் என்றார். நாளடைவில் அதிலுள்ள பதங்களை கவனித்தேன்.

---

## விநாயகர் அகவல்



சீதக்களபச் செந்தாமரைப்பூம்
பாதச்சிலம்பு பலவிசைபாட
........................ ........................
........................ ........................
இப்பொழுதென்னை யாட்கொளவேண்டித்
தாயாயெனக்குத் தானெழுந்தருளி

மாயாப்பிறவி மயக்கமறுத்துத்
திருந்தியமுதலைந் தெழுத்துந்தெளிவாய்
பொருந்தவேவந்தென் னுளந்தனிற்புகுந்து
குருவடிவாகிக் குவலயந்தன்னில்
திருவடிவைத்துத் திறமிதுபொருளென
வாடாவகைதான் வந்தெனக்கருளிக்
கோடாயுதத்தாற் கொடுவினைகளைந்தே
உவட்டாவுபதேசம் புகட்டியென்செவியில்
தெவிட்டாதஞானத் தெளிவையுங்காட்டி
ஐம்புலன்றன்னை யடக்குமுபாயம்
இன்புறுகருணை இனிதெனக்கருளிக்
கருவிகளொடுங்குங் கருத்தினையறிவித்
திருவினைதன்னை அறுத்திருள்கடிந்து
தலமொருநான்குந் தந்தெனக்கருளி
மலமொருமூன்றின் மயக்கமறுத்தே
ஒன்பதுவாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக்கதவை அடைப்பதுங்காட்டி
ஆறுதாரத் தங்குசநிலையும்
பேறாநிறுத்திப் பேச்சுரையறுத்தே
இடைபிங்கலையின் எழுத்தறிவித்துக்
கடையிற்சுழிமுனை கபாலமுங்காட்டி
மூன்றுமண்டலத்தின் முட்டியதூணின்
நான்றெழுபாம்பி னாவிலுணர்த்திக்
குண்டலியதனிற் கூடியவசபை
விண்டெழுமந்திரம் வெளிப்படவுரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழுகனலைக்
காலாலெழுப்புங் கருத்தறிவித்தே
அமுதனிலையும் ஆதித்தனியக்கமும்
குமுதசகாயன் குணத்தையுங்கூறி

இடைச்சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக்கரத்தின் உறுப்பையுங்காட்டிச்
சண்முகதூலமுஞ் சதுர்முகசூட்சமும்
எண்முகமாக இனிதெனக்கருளிப்
புரியட்டகாயம் புலப்படவெனக்குத்
தெரியெட்டுநிலையுந் தெரிசனப்படுத்திக்
கருத்தினிற்கபால வாயிற்காட்டி
இருத்திமுத்தி இனிதெனக்கருளி
என்னையறிவித் தெனக்கருள்செய்து
முன்னைவினையின் முதலைக்களைந்து
வாக்குமனமும் இல்லாமனோலயம்
தேக்கியேயென்றன் சிந்தைதெளிவித்
திருள்வெளியிரண்டுக் கொன்றிடவென்ன
அருடருமானந்தத் தழுத்தியென்செவியில்
எல்லையில்லா ஆனந்தமளித்து
அல்லல்களைந்தே அருள்வழிகாட்டிச்
சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி
சித்தத்தினுள்ளே சிவலிங்கங்காட்டி
அணுவிற்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய்க்
கணுமுற்றிநின்ற கரும்புள்ளேகாட்டி
வேடமுநீறும் விளங்கநிறுத்திக்
கூடுமெய்த்தொண்டர் குழாத்துடன்கூட்டி
அஞ்சக்கரத்தின் அரும்பொருடன்னை
நெஞ்சக்கரத்தி னிலையறிவித்துத்
தத்துவநிலையைத் தந்தெனையாண்ட
வித்தகவிநாயக விரைகழல்சரணே

முற்றிற்று.

இப்படி விநாயகருக்கு சுமார் இருபது வருஷம் தினம் புஷ்பமெடுத்து பூஜை செய்தும் ஷை அகவலை சொல்லி அருச்சனைசெய்தும் வந்திருக்கிறேன். இப்பொழுதும் அந்த விநாயகருக்கு வீட்டில் பூஜை நைவேத்தியங்கள் நடந்து வருகின்றன. ஆனால் ஷை அகவல் சொல்லி பக்தி சிரத்தை யாக செய்வோரைத்தான் காணோம், யானும் செய்வதில்லை. எதற்காக எவன் தந்தை விநாயகருக்கு பூஜை செய்யும் படிக்கும் அகவற்பா தோத்திரம் செய்தே தீரவேண்டு மென்றும் வற்புறுத்தி யிருப்பாரோ, அது அந்த விநாயக ருக்கும் இதைப்படிக்கும் வாசகர்கட்குந்தான் தெரியும். ஷை அகவலில் மாயாப்பிறவி மயக்கமறுக்கும் உபாயமும், ஐம் புலன்களையும் கருவிகளையும் ஒடுக்கும் வழியும், ஆணவமலம், மாயாமலம், கன்மமலம் என்னும் மும்மலத்தையும் அறுக் கும் விபரமும், ஒன்பது வாசலுள்ள இந்த வீட்டில் ஒரு ஐந்தெழுத்தின் மந்திரத்தாலே ஐம்புலக்கதவை அடைக்கும் விபரமும், குண்டலி சக்தியை விழிப்பிக்கச் செய்து தன்னை யறிந்து ஆத்ம தரிசனம் பண்ணவும், சோபான முறைகளை முறையே நம மூதாட்டி தெரிவித் திருப்பதை யாழ்ந்து நோக்கின், வாசகர்கட்கு உண்மை எளிதில் விளங்குகின்ற தன்றோ,

கண்ணப்பன் தனையொப்ப அன்பதனால் மேலும்
கண்ணதனை ஒருமையுடன் கனிவுடனே வைக்கேன்
வண்ணமுள சிறுத்தொண்டர் மடைப்பளியில் மகனை
வஞ்சகமாய்க் கொன்றதுணி வில்லைவிறன் மிண்டர்
எண்ணம்போல் தன்காலைத் துண்டுசெயமாட்டேன்
யிளைமைநிலைத் திருநீலர் நின்றநிலை நிற்கேன்
அண்ணலடி யருணைவளர் குருரமணகோவே
அன்பதனு லுய்யும்வகை அறிவிலி நானறியேன்.

இப்படிக்காலம் செல்லும்போது உலக நடைக்குள்ள வழியில் என்மனமிருப்பினும், வயது ஏற ஏற அருட்பாவின் மதுரங்கனிந்த அற்புத பாசுரத்தின் உட்பொருளுக்கு ஆசைப்பட்டு முக்கிய பாட்டுகளை மனனம் செய்தேன். வயது பத்து, இக்காலத்தில் எனது தாய் தந்தையர்கள் என்னை சிதம்பரம் நடராஜர் சந்நிதானத்தில் தரிசனத்திற்கு அழைத்துப்போய், ஆங்குள்ள சொந்த தீக்ஷிதரால் கனகசபையிலுள்ள ஸ்ரீமந் நடராஜப் பெருமானை தரிசனம் செய்வித்து, அதன் பின்பு பக்கத்திலுள்ள ஒரு சிகப்புத் திரையால் மறைக்கப்பட்டிருந்த இரகஸிய தரிசனம் காட்ட, தீக்ஷிதருக்கு ரூபாய் ஒன்று கொடுக்கப் பெற்றுக் கொண்டு கர்ப்பூர மேத்தி ஷை படுதாவை நீக்கி வெட்ட வெளியாகிய ஆகாயத்தைக் காண்பித்தனர். நான் எனது தந்தையைப்பார்த்து என்ன அப்பா! அங்கு ஒன்றையுங் காணோமே என்றேன், இதைக்கேட்டு ஆங்குள்ள தீக்ஷிதர்களும தாய்தந்தையரும் கொல்லென்று சிரித்தனர். பின்பு தந்தை என்னை விளித்து நன்றாகப் பார்த்தனையா என்றனர். ஆங்கு ஊன்றிப் பார்த்தேன். வில்வதளத்தினு லமைந்த சரம்போல தங்கமயமான இரண்டு மூன்றுகொத்துகள் தொங்கிக்கொண்டிருந்த தோன்றின, பார்த்துப்பின்பு அதோ தெரிகின்றதே சரம்போல தொங்கிக்கொண்டு அதுதானு என்றேன், அதற்கவர்கள் (கைவல்யத்தில் "தாலத்தை முன்பு காட்டித் தனிப்பிறை காட்டுவார்போல்....தூலத்தை முன்புகாட்டி சூக்கும சொரூபமான மூலத்தைப் பின்பு காட்ட") என்றதைப்போல் ஆகாச ஸ்வரூபத்தைக் காட்ட அத்தளத்தை காண்பித்தனர், தரிசனம் செய்தபின்பு படுதாவால் உடனே மறைத்து விட்டனர், தரிசனம் செய்து திரும்பு காலையில் ஏன் ஒன்று மில்லாத இடத்தைக் காண்பித்து ரூபாய் வாங்கினர் என்று கேட்டேன். இந்த ஆகாச

ரூபம் தான் ரகஸ்யத்தின் உண்மை என்றார்கள். என்னவோ அக்காலத்தில் எனக்கு மனதிற்கு விளங்கவுமில்லை, அதன் உட்கருத்தை அறிய ஆவலுமில்லை, தகுந்த பரிபக்குவமு மில்லை, இஃது எப்படியிருக்கினும் இருக்கட்டும் இது என் பிற்காலப் பக்குவ வாழ்வின் அதாவது இப்பொழுது எழுதும் தூரிய வெளி அல்லது எனது அனுபவம் என்னும் சகஜ வாழ்வாம். அனுபவக்காக்ஷியின் பூரண திருப்தியைக் கொடுத்தது போலும், ஈச்வரவடிவம் ஆகாச ஸ்வரூபம் என்றால் கடவுள் வெட்டவெளி ரூபமாயிருக்கப்பட்டவர். சித் + அம்பரம்—சிதம்பரம், சித்—ஞானம், அம்பரம்— ஆகாஸம் இதுவே. சிதம்பர ரகஸ்யமென்பது.

குறிப்பு:—சிதாகாசம் எல்லா வற்றிற்கும் நிலயமான தினால் மனிதப்பிறவி எடுத்தவர்கள் கண்டு தரிசிக்க வேண்டியது இஃதேயெனக் குறிப்பாக உணர்த்தப் பெரியோர்கள் சிதம்பரம் கனகசபையிலும் வடலூர் ஞானசபையிலு மிதனை அமைத்தார் போலும்.

அறியாத சிறுபருவ மதுகால மென்னை
  அன்புள தாய்தந்தையர் சிதம்பரத்தில் சென்று
அரிதாகும் நடராஜர் நடனத்தைக் காட்டி
  ஆஙகுளதோர் திரைநீங்க ரகஸியமுங் கண்டேன்
பரிபாக மிதுகாலம் பாங்கான ரமணன்
  பண்புடனென் னுள்நடிக்கும் நடராஜன் தன்னைப்
பரிந்துமிகக் காண்பிக்கப் பார்த்துமிகக் களித்துப்
  பரவெளியின் ரகஸ்யத்தி லுளங்களித்து நின்றேன்.

இந்தப்படி உலக நடைக்குள்ள வழியில் என்மனம் சென்று கொண்டிருக்க, அக்காலத்திற் கேற்ப நான்காவது படித்து, பிரைமெரிபாஸ்செய்து பின்னர் சிலகாலம் உபாத்தி மைத்தொழிலிருந்து அதையும் விட்டு சுமார். 10-வருஷம்

போட்டோகிராப் படமெடுத்தல், சித்திரங்கள் அமைத்தல், கெடியாரம், ஆர்மோனியம், கிராமபோன், சைகிள், மோட்டார்சைக்கிள், மோட்டார், ஆயில் எஞ்சின், முதலியன ரிப்பேர் செய்தல், ரப்பர் ஸ்டாம்புகள், எங்கிரேவிங் அமைத்தல், ஆர்மோனியம் சொந்தமாகச் செய்தல், டிராமாவுக்கு கால் ஆர்மோனியம் வாசித்தல், மேடையில் வேடம்பூண்டு நடித்தல் இத்யாதி தொழில்களைச் செய்து வரும் நாளில், தந்தையார் சிதம்பரம் பிள்ளை தேகம் நழுவ, இவர் தகப்பனார் சமாதியின் முன் இவரது சமாதி கிரியையும் முடிந்தது. அக்கால் சொப்பனத்தில் சிதம்பர சிற்சபையில் அடுக்கு தீபாராதனை, அலங்கார தீபாராதனை, சோடசவுபசாரங்களுடன் ஸ்ரீமந் நடராஜப் பெருமான் தரிசனம் மூன்று நாள் கண்டு விழித்தெழுந்து ஆனந்தப்பட்டிருக்கின்றேன். என்ன ஈச்வரகருணையோ அறியேன், சிலகாலம் எனது சொப்பனத்தில் லங்கோடு கௌபீனதாரியாகவும், நிறை முக்காடிட்டும், பெரியார் வந்து வந்து தோன்றி ஏதேதோ நடித்து மறைவர். நல்ல சொப்பனமென்று மதித்து ஆனந்தப் படுவேன். அச்சொப்பனத்தில் தோன்றியவர் பகவான் ரமணனும், அருட்பெருஞ் சித்தர் இராமலிங்கமுமாகும். இதில் சந்தேகமில்லை.

பின்பு தந்தையார் பெட்டியில் எனக்கு ஏதேனும் பொருள் வைத்திருப்பாரா என்று ஆராய்ச்சி செய்தேன். ஒன்றுமில்லை. ஆனால் இரண்டு கிடைத்தது, அதாவது பாட்டும் உரையுங் கூடிய கைவல்ய நவநீதம் புத்தகம் ஒன்று, இருபக்கமும் யாளிமுகமமைந்ததும் கருங்காலிமரத்தில் மிக உயர்ந்த வேலைப்பாடுடன் கடைந்தெடுத்ததுமான யோக தண்டு ஒன்று, (இவனுக்கு அஞ்ஞானப் பொருள் வேண்டாம் மெய்ஞ்ஞானப் பொருளை யடையத் திறவு கோல்தான் கொடுக்க வேண்டுமென்று கடவுளின் திருவருள்

நோக்கம்போலும், வாழையடி வாழையாகக் கிடைக்கத் தக்கது தான் கிடைக்குமெனத் தீர்மானித்துத் தெளிந்தேன்.

சிலசமயம் வள்ளி திருக்கல்யாணம், பக்தன் நந்தன் சரித்திரம், பக்கவாத்தியம் பின்பாட்டுகளுடன் பாகவதரைப் போல கதா காலக்ஷேபம் செய்தேன்.

பின்பு இப்னுட்டிஸம் மெஸ்மெரிஸம் மனோவஸ்ய சாஸ்திரம் என்று சொல்லும் புத்தகம் ஒன்று (அப்பியாசம் செய்யப் பிரிண்ட்செய்த சக்கரம் படத்துடன்) முதன் முதல் கிடைத்தது. அதில் சொல்லியபடி நிலைக்கண்ணாடி ஒன்றமைத்து எதிரில் நின்று கண்ணாடியில் உருவத்தின் கண் கருவிழிகளின் மத்தியில் தோன்றும் நமது பிரதிபிம்ப சூட்சுமச்சாயலை உற்று பார்த்துப் பழகுவது. இப்னுட்டிஸ சக்கரத்தின் மத்தியிலுள்ள புள்ளியையே நோக்குவது கண்மூடி புருவமத்தியில், ஓர்சிறு வெள்ளை அல்லது கருப்புப் புள்ளியோ இருப்பதாகப் பாவித்து ஊன்றி நிற்பது. இம் முறையில் ஈடுபட்டுப் பழகினேன்.

நமக்குப் பின்புறமாக வெளிச்சமுள்ள வீட்டில் முன் பக்கம் சுவற்றிற்கு மூன்றடி தூரத்தில் உட்கார்ந்து நெற்றியில் வைக்கக்கூடிய கருப்புப் பொட்டளவு நமது கண்ணுக்கு நேரளவில் சுவற்றிலமைத்து, அக் கருப்புப் பொட்டையே கவனித்து மனதில் ஓர் எண்ணமும் எண்ணாமல் பார்த்தால் அக்கருப்புப் பொட்டானது வெண்மையாகவுள்ள நட்சத்திர வடிவமாக மாறி, அச்சிறு நட்சத்திரமே நேரம் ஆக ஆக பெரிய சந்திரன்போலாகி மேலும் அவ்வொளி வடிவமே அளவுகடந்த பெரியதாகி மனதின் செயலற்று உட்கார்ந்திருக்கும் இடம், வெளிச்சம், தேகம் முதலியவை மறந்து மனம் அந்தர் முகத்திற்குச் சென்று விடும். இதுமனோலயத்திற்கு சரியான வெனது அநுபவவழி. நிஷ்டை சாதிக்கப் பிரியமிருக்கிறதென்றும்

அதற்குரிய சிலவழிகளைச் சொல்லவேண்டுமென்றும் சாதுக்களை அன்போடு கேட்டேன். அதற்கவர்கள் நிஷ்டை சாதிப்பது சுத்த பைத்யக்காரத்தனம், நாமே பிரமசொரூபமென்று நினைத்திருப்பதே ஞானம், நாங்களெல்லாம் அப்படித்தான் இருக்கிறோம். நீங்கள் கஷ்டப்படவேண்டாம் என்றார்கள். யோசித்தேன். வேதாந்த புஸ்தகங்களைபடித்து பொட்டை நெட்டுருப்போட்டும் இவர்கள் தெளிந்திருப்பதாக எனக்கு விளங்கவில்லை (ஆனால் நூற்றிலொரு அனுபவி எனக்குத் தெரியாமலிருக்கலாம் அவர்களைப்பற்றிப் பேசவில்லை) தாயுமானவர் சாஸ்திரம் பார்த்தேன்.

வெண்பா.

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறு வுற்பவரோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்பு போம் (தாயுமானர்)

நிஷ்டை கட்டாயம் வேண்டுமென துணிபுபட்டது.

தலைவனைக் காண தாகமெடுத்தது, எனினும் அக்கடவுளை எப்படி அடைவது, காண்பது, என ஒன்றும் புலப்படவில்லை. தெய்வக்காதல் கொழுந்து விட்டெரிந்தது. இப்ஞட்டிலஸ அப்யாசத்தில் கடைசிமுறையில் (தன்னைவிட்டு அன்னிய பொருளை யெதிர்பார்த்திருப்பதால்) இம்முறையில் ஞானம்பெறுதல் முடியாதெனத் தெரிந்துகொண்டேன்.

விருத்தம்.

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந்
தனவரத முரைப்பதாகி
நிகழொளியா மாத்தும தத்துவமான
சொரூபத்தை நினைத்தல் செய்வார்

திகழிதய குகையுறையுந் தேவதையை
விட்டயலே தெய்வந்தேடன்
மிகவரிய கவுத்துவத்தை யெறிந்து சிறு
மணிதேடும் வேட்கைபோலாம். (வாசிஷ்டம்)

இரண்டு வருஷம் கர்மம், பக்தி, யோகம், ஞானம் முதலிய பகவத் பிரசாரத்தில் காலம்போக்கினேன்.

அனுபவமுள்ள பெரியார்களை நாடி, அருட்பாவில் கண்ட "அருட்பெருஞ்ஜோதி" என்பது ஆயிரம் காண்டில் பவர்கொண்ட கியாஸ்லைட்டைப்போல எத்தனைலைட்பவர் வெளிச்சமிருக்கும், அல்லது எலக்ட்ரிக் டயனமோ வொயர் மூலமாக பல்பில் பிரகாசிக்கும் வெளிச்சத்தில் எத்தனை வால்ட்கொண்ட வெளிச்சமாகவிருக்கும், அதைப்பார்த்தால் கண்கள் மிக கூசுமா? எனக்கேட்டேன், அதற்கவர்கள் இந்த சிக்கலான பிரசினத்தைக் கண்டு சிரித்தார்கள். என்ன ஒன்றும் சொல்லாமல் மௌனமாயிருக்கின்றீர்களே என்று விடாக்கண்டனுகப் பேசினேன், அதற்கவர்கள் நீ நினைக்கும் பேசும் எல்லா வெளிச்சத்திற்கும் மனம் வாக்கிற்கு மெட்டா அகண்ட மூலவெளிச்சம் அது, பார்க்க உனக்கு கிடைக்கும் என்ருர்கள். இது எனது அறியாமைத்தனமான கேள்வியல்லவா.

மற்ருேர்சமயம், வேதாந்த சாஸ்திரங்களை வாயினுல் சரமாரியாகப் பொழியும் பெரியார் ஒருவரைக்கண்டு உண்மையை உணரவேண்டி அருட்பா மஹாதேவமாலையிலுள்ள

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர்யோக
ரறிஞர்மல ரயன்முதலோ ரனந்தவேதங்
களவிருந்துங் காணுதி யிறந்துஞ் செய்யுங்
கடுந்தவத்துங் காண்பரிதாங் கடவுளாகி

யுளவறிந்த வெம்போல்வா ருள்ளத்துள்ளே
ஊறுகின்ற தெள்ளமுத ஊறலாகிப்
பிளவிருந்து பிண்டாண்ட முழுதுந்தானுய்ப்
பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரியதேவே.

உளவறிந்த எம்போல்வாருள்ளத்துள்ளே ஊறுகின்ற தெள்ளமுதே, என்று சொல்லியிருக்கின்றாரே. அது சித்தர் கட்கும், யோகர்கட்கும், அறிவாளிகட்கும், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் மூவர்கட்கும், வேதங்கட்கும், கருவிகரணங்கள் இறக்கப்பெற்ற தவசிகட்கும்காணா, அரிதாகவுள்ளகடவுளே, உளவுகண்டுபிடித்த என்னைப்போலொத்தவர்கட்கு வெளிப் படுங் கடவுளே என்கின்றாரே, அது என்ன உளவு, எல்லாம் தெரிந்த தாங்கள் அந்த உளவை எனக்குச் சொல்லிக் கொடுங்கள் என்றேன், திறு திறென்று விழித்தார்! அவர் விழித்ததில், இவன் மஹா அதிகப்பிரசங்கி என்று நினைத்த தாகவே தென்பட்டது, யோசித்தார் சரியான விடைகூற முடியவில்லை...............நான் அந்த இடத்திற்கு இன்னம் செல்லவில்லை எனக்குத் தெரிந்த அளவில் வாயினுல் போதிப்பது பழக்கம், ஆனுல் நீவிர் கேட்பதோ முற்றும் முடிந்த விடம், தெரிந்த பெரியார்களை கேட்டுத் தெளிந்து கொள்ளுங்கள் என்று சமாதானமாகவே சொன்னுர்.

ஓர் நாள் கடப்பை சச்சிதானந்த யோகீச்வரர் எழுதிய புஸ்தகத்தைக் கண்ணுற்றேன், அதில் ஜலத்தின்மேல் சின் முத்ரையுடன் காலைமடக்கி பத்மாசனத்தில் படுத்திருப்பது. கால்களைநீட்டிப் படுத்திருப்பது முதலிய போட்டோபடங் களைக் கண்டேன், அதைப்போல் சுமார் இரண்டு தினங்கள் அப்யஸித்தேன், பூர்த்தியாயிற்று. இப்படி நாட்கணக்கில் ஜலத்தின்மேல் படுத்திருக்கலாம். ஓர் நாள் ஓர் ஊரிலுள்ள குளத்தில் ஜலத்தின்மேல் படுத்து பிரேதம்போல மிதந்து

கொண்டிருந்தேன், ஜனங்கள் யாரோ ஒரு பெரியவர் ஜலத்தில் நிஷ்டையில் படுத்திருக்கிறாரென்று கரையில் ஏராளமான கூட்டங் கூடிவிட்டது. திருவிழாதான். என்ன பைத்யக்கார வுலகம், பைத்யக்காரன் வேலையிலுள்ள விசேஷமாவது, நாதஸ்வரக்காரனுக்கும் தவில்காரனுக்கும் பின்னால் விடாமல் தொடர்ச்சியாக நீண்ட ஒரே சத்தமாக ஒத்து ஊதுகின்றானே அவன் வேலைதான் அந்தவேலை. இதற்கு ஆகாரமில்லாதிருப்பது நலம். வயிற்றில் காற்று இருக்கவும் வேண்டும், விடவும் வாங்கவும் வேண்டும், இஃது ஓர் பழக்கமாகும். கைகளைப் பின்புறமாக நீட்டுவதில் பாலென்சு மிருக்கிறது. சுரைக்குடுக்கைபோன்று மிதக்க வேண்டும் சுவாசத்தை ரெகுலேட் பண்ணிக்கொண்டிருப்பதுதான் மிதப்பதற்குக் காரணம். இதை இகழ்வு படுத்திக்கூறியதாக நினைக்கவேண்டாம், எனது அப்யாசத்தைச் சொன்னேன். மிதப்பதில் ஞானம் இருக்காதென்றே நினைக்கின்றேன்.

ஓர்நாள் எண்பத்துநான்கு யோக ஆசனங்கள் போட்டு பழகும் அடயோகப் பிரதீபிகை புத்தகம் ஒன்று கிடைத்தது, அதன்படி பழகவேண்டுமென்று சங்கல்பம் உதித்தது, மறுநாள் சிதம்பரமிருந்து தற்செயலாய் திருவிடை மருதூருக்கு டிரெயினில் போய்க்கொண்டிருந்தேன், அவ்வண்டியில் லங்கோடு கௌபீனதாரியாகவுள்ள 15-வயதுள்ள சிறுவன் 84-யோக ஆசனங்களையும் போட்டுக் காட்டியும் அடிவயிற்றை யெக்கி நௌலிபிடித்துப் பம்பரம் போலக் கிறுகிறென்று சுழற்றிக்காட்டியும், கடைசியில் பல்லைக்காட்டிக் கெஞ்சி என்னைப்போல அங்கு உட்கார்ந்திருந்தவரிடமெல்லாம் பைசா காலணாவிற்கு கையேந்தி நின்றான், கொடுத்தோம் எனினும் பைசாபெறாத இந்த யோக ஆசனங்களை சிந்திக்கவே வேண்டாமென அற

மறந்தேன், பார்ப்போர் ப்ரமிக்கும்படி இதுபால்யமிருந்து அவயவங்களைப் பண்படுத்திவைக்கும் ஓர் சாதன சர்க்கஸ் வேலையாகும், இதில் ஞானம் இருக்காதென்றே நினைக்கிறேன், இது இப்படி இருக்க ஆச்சர்யமாக எனக்குத் திடீரென்று உலகத்தில் மிகுந்த வெறுப்பும் விவஹாரங்களில் மிகுந்த கசப்பும் இதை விடுவிக்க சீக்கிரம் முயற்சி செய்யவேண்டுமென்று அதிக ஆவலும் உண்டாயின. இனி இல்லறத்திலேயே இருக்கக்கூடாதென்றும், பெரியவாளிடம் காஷாயம் வாங்கிக்கொள்ள வேண்டுமென்றும், சாஸ்திர விதிப்படி இருக்குமிடத்திலிருந்து 200 மைலுக்கப்பால் செல்லவேண்டும். அப்படி சென்றால்தான் சொந்தக்காரரின் பந்தம்வராதென்றும் ஏதேதோ கருதினேன், எனது தந்தையார் காலமானபின் அக்குடும்ப பாரம் என்னைத் தாக்கியது, ஞானபாரம் ஒருபக்கம் தாக்கியது, தம்பிக்கோ உலக நடைக்கு வேண்டிய அறிவு போதாது, எங்களிருவரையும் பெற்ற தாயாரோ பேதை, நாங்கள் இருவர் உதிக்கு முன்னம் பிள்ளையிலாக் குறையால் அம்மான்மகன் ரத்தினம் என்பவனை ஸ்வீகாரபுத்திரனுக எடுத்து வளர்த்தாள் அவன் ஓர் காட்டுமிருகம், இந்நிலையில் நான் குடித்தனத்தை விட்டு வெளியேறினுல் மற்று முள்ளவர்கள்கதி அதோகதி தான், தாயைத் தனித்துவிட்டுப்போக மனம் வரவில்லை தாய் தம்பி விதரணையில்லாமல், நிலம் இருப்பதை யொழித்துப் பின்னுல் அன்ன வஸ்திரத்திற்கு ஆலாப் பறந்தால் என்செய்வது, இதற்கோர் ஒழுங்குபண்ணி நாம் எங்கேனும் துறவியாய்விடலாம் எனத் தீர்மானித்தேன். எனது பங்காளியிடம் ஒரு அறிக்கையிட்டேன், அதாவது இப்பொழுதிருக்கும் 4-காணி நிலங்கள், வீடு, தோட்டம், மாடு, முதல் ரூ 5000, பெறக்கூடிய சகல சம்பத்தையும் செட்டில்மெண்ட் மூலமாக இனும் சாசனம் செய்கிறேன்

எங்கள் காலம்வரையில் அன்னவஸ்திரம் அளித்தால் போதும் ஏனவார்த்தை விட்டேன், இதற்கு எனது தாய் தம்பிகள் ஒப்பமாட்டேனென்றார்கள், நாங்கள் இருக்கும் காலம்வரையில் இயல்பில்லாவிடில் நிலங்களை விற்றேனும் சாப்பிடுகிறோம், உனக்குப் பிரியமில்லாவிடில் உன் வேலையைப்பாரென்றனர், அவர்களுக்கு இதமாக, வேண்டியபுத்திமதியைச் சொன்னேன், வாழைப்பழம் வேண்டாமென்னும் குரங்கு உண்டா, எனது பெரிய தகப்பனார் குமாரர் வைத்தியநாத பிள்ளை 40-ரூபாய்க்கு பத்திரம் வாங்கிவர சகல சொத்துக்களையும் செட்டில்மெண்ட் மூலமாக ரிஜிஸ்தர் செய்துகொடுத்துவிட்டோம், இனி யெனக்கு குடும்பபாரமென்பதில்லை, நிலம் வீடென பந்தம் இல்லை, நிம்மதியானேன், இனிநான் செய்யப்போகும் வேலைக்குப்போராடும் குந்தகமில்லை, இதுவும் பகவான் திருவருட்சம்மதம் போலும்.

இப்படி முடிவு பெற்றது ஊரெங்கும் பரவிற்று, என்னைப்பார்த்து யாவரும் பரிகாசம்செய்ப ஆரம்பித்தனர். என்ன அறிவில்லாப் பைத்தியமானாய், இப்படிக்கூட உலகத்தில் உயிருள்ளபோதே சர்வ சுதந்தரமாக ஒருவருக்குக் கொடுப்பார்களா? நாளைக்கு உங்கட்கு சாஸ்வதமாக சாதிப்பார்கள் என்பது என்னநிலை, தொலைந்தவன் நீ தொலைந்தாலும் பாக்கி இருக்கிறவர்கள் வைத்துக்கொண்டிருக்க மாட்டார்களா, படுபாவி கெடுத்துவிட்டாயே, அவர்கட்கென்று சொத்திருந்தால்தான் அந்தியகாலத்தில் கௌரவமாகக் காப்பாற்றுவார்கள், முன்னதாகக் கொடுத்துவிட்டால் மதிப்பார்களா, இப்படி என்னென்னவோ வசைமொழிகளைக் கூறினார்கள். (இஃதிப்படியிருக்கப் பிற்காலத்தில் ஷை வைத்தியநாதபிள்ளை கண்டிஷன்படி நடந்துகொள்ளாமல்............நடந்தார்) எப்படி இருக்கினும் இருக்கட்டும்.

அறிவில்லாப் பைத்தியமென் றென்னையேசி
அனைவருமே பழித்திடவோ விங்குவைத்தாய்
பொறிபுலனால் மயக்குற்றுப் புலம்பிமேலும்
பொன்பூமி மடவாரின் போக்கில் நின்று
குறிகெட்டுக் குணங்கெட்டுக் குடியுமாகிக்
குறித்துநிலை நிற்காமல் குறுகிநிற்கும்
வெறிகொண்ட வீணரவர் வெற்றுவார்த்தை
வெதும்பிடவே செய்திடுக ரமணதேவே.

நமது குறைகளை பகவானிடம் நேரில் தெரிவித்தால் குறை நீங்குமென்று தைரிய முண்டாயிற்று, பகவானிடம் குறை கூறுவதற்குக் கூட்டம் தகுதியல்லவென்பதாகத் தீர்மானித்து பகல் 3-மணிக்கு பின்ன லூருக்கு வெகுதூரத்தில் ஏரிக்கரையில் வேண்டிய வரத்தைக் கொடுக்கும் கரைமேட்டுப் பிள்ளையாரிடம் ஏகாந்தமாக நேரில் சென்று கண்ணீர் ஆறுகப் பெருக நின்று, மஹா கணபதே, விநாயகப் பெருமானே, ஔவையார்க்கு அருள்கொடுத்த ஆதிமூலமே, பிரணவப் பெருமானே, இவ்வுலக சுக துக்க கஷ்டநஷ்டங்களில் அலைப்புண்டு, மனம்வெதும்பித் துயரடைந்து எவ்வளவு நாளைக்கு துக்கப்படுவேன், தேவரீரை சதா நினைந்துள்ள அடியேனுக்கிந்த விசாரம் கவலை வரலாமா? ஏன் இப்படி பராமுகமா யிருக்கின்றீர்? பக்தியில்லாத பகல் வேஷக்காரனென்று நினைத்தீரோ? இப்படி விசாரப்படுவதற்குத்தான் என்னை மனிதனாகப் பிறப்பித்தீரோ? அந்தோ! கொடுமை! நான் ஏன் பிறந்தேன்? ஏன் என்னிடம் பேசமாட்டேனென்கிறீர்? நான் கற்ற கல்வியெல்லாம் கதையாய் முடிந்ததோ? கேட்ட கேள்வியெல்லாம் கேடாய் முடிந்ததோ? நான் அறிந்த அறிவெல்லாம் அவலமாய் விட்டதோ? தெளிந்த தெளிவெல்லாம் தீங்காய்விட்டதோ?

நீதியில்லையே, நெறியில்லையே, என்று இங்கு எழுத முடியா வளவு பலவாறாகப் புலம்பிக்கண்ணீர் மாலை மாலையாய் சொரிய மாடுபோல் கதறி ஹோ வென்று அழுவேன், ஐயோ இப்படிப் புலம்புவது யாருக்கேனும் தெரிந்தால் பைத்தியக்காரத்தனமாகுமே யென்று நினைத்து அம் மேட்டுப்பாங்கைவிட்டுப் பக்கத்திலுள்ள விழல்வெளி மைதானத்தில் தனியாக வேண்டிய வரையில் அழுது பின்பு வீடு திரும்புவேன். இப்படி சுமார் மூன்றுமாத காலம் நடந்தன. மேலும் எனக்குப் பிரதி பந்தமாகவிருக்கும் சமஸ்தத்தையும் சீக்கிரம் ஒழிக்க வேண்டுமென்று நினைத்தேன், அப்படியே ஒழித்தேன். இனி செய்ய வேண்டியதென்னவென ஆலோசித்தேன்:—மிகுந்த நூல்கள் கற்பதற்கு நாட்கள் போதாவென்று வசன நடையிலுள்ள கைவல்யம், ஞான வாசிஷ்டம், சசிவர்ண போதம், பகவற்கீதை, ஒழிவிலொடுக்கம், ஆத்மபுராணம், ரிபுகீதை முதலியவைகளை சங்கிரகமாக சந்தேக நிவிருத்திக்குப் பார்த்தேன். பின்பு மிக்க அனுபவமுள்ள ஓர் பெரியார் வேண்டு மென்றும், அன்னார் வாயிலாக உண்மையாக அந்தரங்க வேலைகளின் சந்தேகங்களை நிவிருத்தி பண்ணிக்கொள்ள வேண்டுமென்றும், ஓர் எண்ணம் உதித்தது.

பின்னர், முன் எனது சொப்பனத்தில் நடமாடிய லங்கோடு கௌபீனதாரியாகவுள்ள பெரியார் யாராயிருக்கலாமென அறிய ஆவல் கொண்டேன், தற்செயலாக என் சொப்பனத்தில் நடமாடிய உருவமுள்ள படம் ஒன்று கிடைத்தது. அதில் திருவண்ணாமலை, பிராமணஸ்வாமி ரமண மஹரிஷி என்ற விபரம் இருந்தது, மன வண்டியை முடுக்கியாயிற்று 21-வயதுள்ள தவராஜன் படத்தைக் கண்டதும் வெட்கமும், ஆத்ம வீரமும், மனதைக் கவர்ந்தன அந்தோ! வாழ்நாளை வீணாக்கினேனே என விசனப்பட்டேன்.

அப்பெரியாரை தரிசனம் பண்ண புறப்பட்டு திருவண்ணாமலை சேர்ந்தேன், இராணியிடத்தில் ஓர் ஏழை ஸ்திரீ பேசுவதற்கு எப்படி அஞ்சுவாளோ அப்படி பகவான் ரமண மஹரிஷியவர்களிடம் முதன் முதல் பேச அஞ்சி கடிதம் வாயிலாக விண்ணப்பம் தயாரித்தேன்.

## விண்ணப்பம்.

திருவண்ணாமலை மேல் எம் போன்ற தீனர்களை இரக்ஷிக்கும் பொருட்டு குரு மூர்த்தமாக அவதாரம் செய்தருளி எனதுள்ளத்திற் கலந்து விளங்கிய பகவான் ஸ்ரீரமண மஹரிஷியவர்கள் சந்நிதானத்திற்கு:—

பிரபஞ்ச சுக துக்காதிகளால் அலைப்புண்டு பயந்து, மனம் வெந்து, புண்பட்டு, பவசாகரத்தில் வீழ்ந்து, இந்நாள் வரையில் என்னுடைய காலத்தை விருதாவாக பிரயோஜன மின்றிப் போக்கி கரை யேறும் வழிதெரியாமல் கலங்கும் சிறுவன் பின்னலூர் இராமலிங்கம் போதநாசஞ்செய்ய சிவசந்நிதான சாக்ஷியாக எழுதிக் கொண்ட சிறு விண்ணப்பம், எப்படி யேனும் இவனை ஆட்கொண்டு, மனப் பிணிக்கு மருந்து கொடுத்து, பவசாகரத்தினின்று கரையேற்றி அந்த மில்லாத ஆனந்தத்தை யடையச் செய்விப்பது தங்களின் கடமையாகுமென்று மனம் வாக்கு காயமுள்பட பன்முறை நமஸ்கரித்து பிரார்த்திக்கின்றேன்.

இப்படிக்கு
இராமலிங்கம்.

சங்கற்ப விகற்ப கன்ம மூட்டைகளை வெளியே வைத்து, விண்ணப்பத்தைக் கைபிடித்து ஆச்ரமத்துள் சென்று பகவானைக் கண்டேன் எனது நினைவு எனக்கில்லை. விண்ணப்பத்தைப் பகவானிடம் கொடுத்து நமஸ்கரித்து நிற்கும்போது என்னை அறியாமல், அடக்க முடியாமல் அன்பும் அழுகையும் இன்பும் கூடி, ஹோ வென்று வாய் விட்டலறிக்கண்ணீர் காளுருகப் பெருக அழுது ஊன் நடுங்கி உளம் வெதும்பி வேர்த்து விறு விறுத்து மயிர் கூச்செறிந்து நின்றேன்.

அஞ்சலென வந்தடையு மேழைதம்மை
அபயாஸ்தங் கொடுத்தருளு முதாரமும்பின்
நெஞ்சதனி லீரமுமின் சொல்லுமிக்க
நெறியுடனல்லுபசார சீலமெங்கும்
விஞ்சுநின் திருக்கருணை யொளியேவீச
வெளியதனில் நின்புகழே மேன்மையாக
செஞ்சைலஞ் சிறக்கின்ற செல்வா வுன்னைச்
சேர்ந்துமிகக் களிக்கின்றேன் ரமணதேவே.

## வசனம்.

பகவான் சிறியேனை ஞானக்கண்ணால் ஏறப்பார்த்து தமது சந்நிதான விசேஷ வல்லபத்துடன் கூடிய மலர்ந்த இனிய புன் முறுவலுடன் உட்கார் என்றனர்.

வந்தாயென்றன் குறைநீக்க
மன்னேயென்னை யாண்டவனே
தந்தாயுன்றன் திருக்கருணைத்
தலைவாவென்ன புகன்றிடுவேன்
சிந்தாகுலந்தீர்ந் திடவேநான்
சிறியேனெண்ண முடிந்ததுவே
யெந்தாயெந்தை யிதுமுதலே
யென்வேலையெலா முன்னதுவே.

துன்புடைய வுலகசுக முனக்குமினி வேண்டாம்
துரியநிலை யான்மசுக மதுவொன்றே போதும்
அன்புடைய வடியார்கள் அடிபணிந்து நின்றே
அவருறவில் பழகிடநின் அவஸ்தையெல்லாம்
இன்புடைய பேரருளி லிலங்கிடவே நீயு [போகும்
மென்னைநீ பாடுகவென் ஞேடுகலந் தாடு
வன்புடையார் செயலதனில் வயங்கிடவே வேண்டாம்
வார்த்தைதிருக் குறிப்பதனல் வழங்கிட்ட ரமணு.

திருவண்ணுமலை மேல் ஆச்ரமத்தில் சேர்ந்தவுடன் அடியன் திருவண்ணுமலை வீதிகளில் பெருமாள்சுவாமி,.... ..........................................முதலிய ஆச்ரம சிஷ்யக் கூட்டங்களுடன் வீதிகளிற் சென்று பகவானல் அருளிய அருணுசலேச்வரர் அக்ஷரமணமாலை சொல்லிக்கொண்டு பிட்சை எடுப்பது பழக்கம்.

அருணு சல சிவ, அருணு சல சிவ, அருணு சல சிவ, அருணு சலா!

.... .... ....

ஊர்சுற் றுளம்விடா துனைக்கண் டடங்கிட
வுன்னழ கைக்காட் டருணுசலா

.... .... ....

ஒருவனு முன்னை யொளித்தெவர் வருவா
ருன்சூ தேயிது வருணுசலா

.... .... ....

கண்ணுக்குக் கண்ணுய்க் கண்ணின்றிக் காணுனைக்
காணுவ தெவர்பா ரருணுசலா

.... .... ....

சொல்லாது சொலிநீ சொல்லற நில்லென்று
சும்மா விருந்தா யருணுசலா

.... .... ....

ராப்பகலில்லா வெறு வெளி வீட்டில்
ரமித்திடு வோம்வா வருணுசலா

இதுதான் முதலில் திருவருணை வீதியில் மானத்தை விட்டு பிட்சை யெடுத்ததும், அபூர்வக்கருத்து கொண்ட அக்ஷர மண மாலையை, பிட்சை யெடுக்கும்போது வாயாரச் சொல்லி, மனமாரநினைத்து, பொருளை ஊன்றிச் சிந்தித்தது மாகும், அப்போது சொல்லிக்கொண்டுபோன அந்த மண மாலையின் ஆத்ம உபதேச இன்னொலி, இன்னும் இம்மனோ பாவத்தில் சுழல்கின்றது, இதுதான் ஆச்ரமத்தில் பெற்ற முதல் உபதேசம்.

## விருத்தம்.

கருணைமழை பொழிகின்ற கடவுளுன்னைக் கதி பெறவே யானுளத்தில் காணவேண்டிக், குருரமண பதி யெனவோ குன்று மோனக் குரவனெனக் குறிப்பிடவோ குறிக்கோதமற்றும், பொருளாகும் சாஸ்திரத்தின் புனித னென்றோ பொருந்திநிற் றுயென்றோ தகப்பனென்றோ, அருணைநிலை யருளென்றோ யன்பனென்றோ யாவும் நீ யொன்றெனவே யழைப்பே னந்தோ.

எல்லையிலாப் போகமதா யியங்குகின்ற சிவமே யென் னறிவி லூறுகின்ற வின்பநிறை யமுதே, தொல்லையெலா மணுகாமல் தொலைத்திடவே யடிமை தொண்டுசெயக் கிடக் கின்றேன் சிறியேனென் குற்றச், சொல்லையெலாம் குண மாகக் கொண்டிட்ட நிதியே சூதாகும் ஞானவெளி சாந்த நிலை வாழ்வு, வல்லையென வருந்தாமல் வாழும் நாளுளதோ வண்ணமணி யருணமலை வளர் ரமண தேவே.

நின்னருளாம் நிதிவேண்டும் நினைபக்தி செய்யும் நித் தியரின் நேயமதே வேண்டுகின்றேன் நாளும், பொன் னடியை வேண்டிமிகப் போற்றவும் நான் வேண்டும் போராடு மாயையினைப் புதைத்திடவும் வேண்டும்.

கன்னியரின் காதலினைக் கனவினிலும் காணுக் காட்சியினை நானடைந்து களிப்புறுதல் வேண்டும், அன்பதனுல் சிவனுக்குள் சிவமயமே யாக அருளைவளர் ரமணபதி யாண்டருள்க தேவே.

தவம்செய்து பெற்றெடுத்த தாயேயல்லால் தனிமையுறும் சேயதற்கு துணைகாணுப்போல், பவமறுக்கு முனையன்றிப் பாரோரெல்லாம் பலவிதத்து மல்லல்நிலை கூட்டிவைத்துக், கவலைமிகும் நாடகத்தைக் காணவைப்பார் கருத்தழிந்து கவலைநிலை கருதாவண்ணம், பவனினது கதிசேர்ந்தப்பதியேயாக பலரெவரும் துணையாகார் ரமணதேவே.

வான்மாறினும் மறைமாறினும் மதி கதிரோன்
தான்மாறினும் பரந்தாமன் பாதம் தனிலடியேன்
நான் மாறிடாத தவத்தையருளிநீ நானதுவாய்த்
தேன்மாரிபெய்யும் வழியே ரமண தெரிவிப்பாயே.

போகமெலா மனுபோக மாகக்கொளவறியேன் பொலிவுடனே யுழைத்துமிகப் போருந்திடுவேன் மாயா, மோகமதிலனுபோக முயன்றிடுவேன் பேதை மோகினியின் வேதாந்த முழங்கிடுவேன் சப்த, மேகமெனப் பொளபொளென மண்விண்ணும் தகர மேதினியில் வந்தொரு வகையறியேன் கேட்டா, லேகமென வறியாமல் பல்லை மிக விளிப்பே னேங்கிமிகத் தவித்திடுவே னென்செய்வேன் ரமணு.

இரும்புநிகர் மனத்தினனு னேழையனுன் ஞான வின்ப நிலை யறிந்திடவே யாவல்மிக்கொண்ட, துரும்பில் மிகச் சிறியேனுன் துயரடைந்தேனையே துணையாக நினையடைந்து துணிந்துமிகப் பிடித்தேன், திரும்பியெனை மயக்கிவிடும் வஞ்சபுலனைந்தும் திருத்தமுற மிகவடைத்துத் திருத்தியெனைக் கொண்டு, கரும்புரச வன்பூறக் களிகொளுமாறெனக்கு காட்சியா முபசாந்தம் கொடுத்தருள்க தேவே.

வேண்டுமென விரும்புவார்க் குணவை நீயும் விருப்ப முட னளிக்காமல் விரைந்துமேவி, வேண்டாமென் றனு தினமும் விருப்பம் நீக்கி வித்தகமா மோர்நிலையில் விளங்கு வோர்க்கு, வேண்டிமிகக் கொடுத்திடுநின் தரந்தானென்னே மேதினியி லவர்களுநீமே மேவிடாமல், மீண்டிடவே வஞ்சக மாய் முயற்சி செய்யும் மெய்மையிது குருரமண முனியின் சூதே.

உயர்வான விருந்தெங்கே யுண்பதனுக் கினிய வுண வெங்கே பருப்பொடுநெய் சோறெங்கே மிக்க, வயிறேங்கப் பொரியலொடு வறுவல்மிகு மாமை வடையெங்கே மிட்டாய் தேன் குழலெங்கே யல்வாப், பெயராகும் பாங்காள பாத் தெங்கே மைசூர் பாகெங்கே யின்னுமுண விடமில்லை யென்றே, துயர்கொண்டே னல்லாதோர் சிறிதுமுனை நினையேன் துரியநிலை சிவகுருவே ரமணபதி தேவே.

சோறிட்டுச் சொர்க்க மதைக் காட்டுவான் போற் சொல்லுகின்ற பலர்சொல்லைச் சூதாய் நானு, மேறிட்டு மறியாத வேழையந்தோ வீடேற வெண்ணி யெனை யனுபவத்தில், நேரிட்டுக் கண்டிடவே நிமலன் றனில் நித்தியமா யடைந்திடவே நீயுமுன்னி, மோரிட்டு மறு வகையோ டன்ன மீந்து மோட்ச நிலை யறிவித்தாய் ரமண முத்தே.

## வசனம்.

மஹரிஷிகளிடம் சம்பாஷிக்கும்போது, ஸங்கல்பமே கூடாது, எதிலும் சங்கல்பம் வேண்டாம் என்று அடிக்கடி சொல்லுவார், மனதைப்பற்றியும், உலகத்தைப்பற்றியும், உயிரைப்பற்றியும், திரணம்கூட மதிக்காமல் கண்டித்துப் பேசுவர். உயிர்நின்றால் நிற்கட்டுமே, போனால்போகட்டுமே

நிற்கிறவன் நீயா, போகிறவன் நீயா, இப்படிக் கடந்த பதங்கள்தான் பிரயோகிப்பர், பயம் என்பதையே அறியாத அசைக்கமுடியாத அவ்வளவு தைரியம் வேண்டியிருக்கின்றது "நாம் நம்மிடத்தில் நிலைத்தால் எல்லாம் தாமாகவே நடக்கும்" என்று பகவான் சொல்லுவார். குருநாதன் சிறியனிடம் பேசும்போது அடிக்கடி வாசிஷ்டம், தாயுமானுர், கீதை, ஆச்சார்யசுவாமி ச்லோகங்கள் முதலியவைகளை மேற்கோளாகக்கொண்டு பேசுவர்.

## விருத்தம்.

அளக்கறியா நிலையமர்ந்த வருளே யுன்னை அறிந்திடவே தான்வேண்டி லகண்டாகார, துளக்கநிலை தனியிருந்து துடித்தா லல்லால் துரியநிலை மேவிடவே தோன்றாதென்றும், வுளக்கமல மனதினிலை வாக்கினாலே யுரைத்துநிதம் புரண்டாலும் விளங்காதென்றும், விளக்கமுறத் தெரிவித்த விண்ணேயுன்னை மேவிடவே வேண்டுகின்றேன் ரமண தேவே.

ஞாலமுள ஜாலமெலா மெங்கே யென்று ஞானமதால் பார்த்திட்டால் நினைவேயாகும், கோலமுள நினைவெங்கே குதித்ததென்று கொடுமுடியை யுள்நோக்கி நின்றுபார்த்தால், மூலமதில் நின்றிலங்கு முண்மை தன்னில் முயன்றிட்டால் முப்பகையுமோடிப்போகும், சீலமுள ரமணமுனி, யென்றனுக்குச் சிறப்பாக வோதியது மிதுவே யாகும்.

தாவுமானென வோடிடும் மனத்தரத்தை யுள்ளநீ கண்டிடில், மேவுறுமலே யுள்ளடங்கியே மேவுஞ் செயலது நின்றிடும், பாவுமாமனப் போக்கில்நின்றிடில் பறக்கும் பஞ்சென வதுவாய், ஓவுதல்நல மென்றெமக்குமுரைத்த [illegible]னிதி ரமணனே.

## விருத்தம்.

வாடிநான் தவம்செய்யும் வகையறியா வெனையே வழி காட்டி யொருசொல்லால் மோனநிலை கூட்டி, மாடிநிலை யேற்றுவித்த மாரமண பதியே மனத்தப்பால் மணக்கின்ற துரியநிலைக் குருவே, பாடியுன்ற னன்புநிலைப் பண்பறி யாப்பேதை பதிபாச பசுநிலையை பகரவொணு தேனே, தேடிநானின்பமுறத் தனித்தநிலை தேராத் தடித்தமன துடையேனை தடுத்தாட் கொண்டாய்.

நிட்டையிலே நின்ருெளிரும் நிதியேஞான நிர்த்த மிடும் குருரமண கோனே காம, வெட்டையிலே யென்று ளும் கலங்கி நாயேன் வெந்தியால் வெந்துருகு மாசா பாசக், குட்டையிலே குணங்கெட்ட வெருமை சென்று குழப்பி சுகம் பெற்றதுபோல் குறித்தே னல்லால், முட்டையிலே கருவிருக்கு முறைமைபோல மோனநிலை யுள்ளுணர்வை யறியேனந்தோ.

போதையினு விருண்மூடிப்போகும்வகை யறியாப் பொய்பேசித்திரிந்திட்ட பாவியனுன் மோக, வாதையினுல் மானெனவே வலையதனில் சிக்கி வருந்திய நான்தன்மை பெற வழி காணும் ஞானச், சூதை யெலாம் வெளியாக்கி சூசனையா மோன சுத்தசிவ பரவெளியின் சத்துநிலை ரம ணன், பாதையெலாம் பார்த்திடவே பட்சமதா லெனக்குப் பாங்காக வளித்திட்டார் பருவநிலை குறித்தே.

## வசனம்.

ஆச்ரமத்தில் பகவானிடம் பேசிக்கொண்டிருக்கும் போது சங்கராசாரியர், மாணிக்கவாசகர், இராமலிங்க சுவாமிகள், இவர்களெல்லாம் தேகம் பூமியில் விழாமல் ஜோதியுட்கலந்தன ரென்று உலகத்தில் ஜனங்கள்

சொல்லுகின்றார்களே, குமாரதேவர் சாஸ்திரம் சுத்த சாதகத்திலும், இச்சடலம் பூமியில் விழுந்தால் மறுபிறவி எடுக்கும் என்பதாகச் சொல்லுகிறதாமே, ஆகவே எப்படியானால் இந்த ஜன்மத்திற்கு மோக்ஷமென்று குருநாதனைக் கேட்டேன்.

வெண்பா.

உருவ மருவ முருவருவ மூன்று
முறுமுத்தி யென்னி லுரைப்ப—னுருவ
மருவ முருவருவ மாயு மகந்தை
யுருவழி தன் முத்தி யுணர். (பகவான்)

என்று சூட்சுமமாகச் சொன்னார். இப்படி சிலமாதமிருந்து, உபதேசப்பகுதியை யுணர்ந்து, மனத்தெளிவடைந்து பின்பு பின்னலூருக்கு வந்தேன், ஜீவவாழ்க்கையின் உண்மையை நோக்கிச் சிந்திக்கலானேன், செல்லும் வரையில் சிந்தையைச் செலுத்தினேன். குருநாதன் ரமண மஹரிஷி சொன்ன விசாரணையிலிறங்கினேன். இச்சரீரம் எவ்வளவு துரும்பாய்ப் போயினும், மரணமாயினும் சரி, எனத்திடங்கொண்டேன், இப்பிறவிவாழ்நாளில், ஒவ்வொரு சிறு காரியத்திலும் மூளையைச்செலுத்தி சாதித்துப் பூர்த்தியானதுபோல, உயிர்வாழ்க்கையின் மிக ஆழ்ந்த ரகஸ்யங்களை அறிய உயர்நலமமைந்த ஞான பூமியைக் கண்டுபிடிக்க ஆசைப்பட்டேன், கொண்ட எண்ணத்தை பூர்த்தியாக அடைய எண்ணி சாதித்தேன்.

ஆசில்லா நெறியிணையே யடைய வேண்டி
அனுதினமு மன்பாலே யனுக வுன்றன்
மாசில்லாத் திவடியை மகிழ்ந்து மென்றன்
மனதிலும் சிரமதிலும் மல்க வைத்து

வாசிநிலை தனிலமரு முண்மை போல
வுருகிநித மமர்ந்திடவு முயரும் ஞான
சூசிகையி னனுபவமே சூழ்ந்து நிற்க
சுத்தசிவ ரமணமுனி செய்து வைத்தீர்.

அப்பியாசம் செய்யுங்காலத்தில் ஓர்நாள், கண்ட விட மெல்லாம் உட்கார்ந்து தியானம் செய்தால், சீக்கிரம் பலன் தராது, ஆனதால் பெரியார்கள் சித்திபெற்ற, திவ்ய ஸ்தலங் களில், தியானம்செய்தால், சீக்கிரம் பலன் தரும். தரிசனம் கைகூடுமென்று நினைத்து, பின்னலூருக்கு சுமார் மூன்று மைல் தூரத்திலுள்ள, மேட்டுக்குப்பம் அதாவது வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் நிருவிகற்ப நிஷ்டை சாதித்த சித்தி விளாகத் திருமாளிகைக்குச் சென்று, பத்திய விரத மாக மூன்றுநா ளிரவுபகல் நிஷ்டை சாதித்தேன். (நிஷ் டையென்பது சங்கற்ப விகற்பமற்று லட்சியத்தில் ஊன்றி நிற்றல்) ஆரம்ப காலத்தில் மணியடிக்கும் கடிகாரம் பக் கத்தில் அமைத்திருந்தேன், ஏனெனில் இரவில் கண்மூடி ஒருமணி நேரம் உட்கார்ந்திருந்தால் மணி ஓசையில்லா விடில் ஒன்பது மணி நேரம் உட்கார்ந்து விட்டதாக மனம் பிரமிக்கின்றது ஆகையால் மனம் மலைக்காதிருக்க மணி யடிக்கும் கடிகாரம் பக்கத்தில் வைத்துக்கொண்டேன். காற்றை ரேசித்துக் கும்பித்துப் பூரிக்கும் வாசியோகம் முதலியவை கூடாதென்பது எனது வைராக்யம், அதனால் ஏதோ சிலருக்கு நன்மையும், சிலருக்கு பிராண ஆபத்தும் நேர்ந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். மனமென் றாலும், ஜீவனென்றாலும், பிராணனென்றாலும், மாயை யென்றாலும், அவித்தையென்றாலும் ஒன்றே. ராஜயோகமே சிறந்ததென விருப்ப முண்டாயது. யோக மில்லாமல் ஞானம்வாராதென்பது நிச்சயம். பின்னர் அந்த யோகமும் வேண்டியதில்லை. தானே நழுவிவிடுமெனத் தெளிந்தேன்.

பட்டினத்தார், பத்திரகிரியார், மௌனஸ்வாமி, இராமலிங்கசுவாமி, தத்துவராயர், ராமகிருஷ்ணபரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், சுவாமி ராமதீர்த்தர், மஸ்தான் ஸாகிப் முதலிய மஹான்களைப் பாவித்து இவர்கள் ஒவ்வொருவரையும் நேரில் தரிசிப்பதுபோல தரிசித்து, எல்லோரும் சேர்ந்து எனக்கு அனுக்கிரஹம் செய்ய வேண்டும், உங்களில்என்னை ஒருவனுக்கொள்ளுங்கள் என்று சுமார் 10-நிமிஷங்கள் பிரார்த்தித்து தியானத்திற் பிரவேசிப்பேன், யான் பிற்காலத்தில் அடைந்த அனுபவத்தில், மேற்கண்ட மஹான்கள் யாவரும் இச்சிறுவன்மேல் கருணைகூர்ந்து பிரார்த்தனைக் கிணங்கி அனுக்கிரஹித்தார் களென்றே நினைக்கிறேன்.

எனது ஆரம்ப அப்பியாச காலத்தில், ஒருதடவை தியானத்திற்கென ஆரம்பித்தால், ஒருமுகூர்த்த காலத்திற்குக் குறைந்து செய்தால் பயன்படாதென அடிக்கடி நினைப்பதுண்டு.

கந்தையுடல் கொடுத்திட்ட கருணைத்தேவே
 கதிபெற நான் கரணநிலை கலந்தேயேற
விந்தையதா யடைத்திடவே விருப்பங்கொண்டால்
 மிகச்செல்லும் பொறிபுலன்கள் மந்தையெல்லாம்
சொந்தமுட னந்தவழி சூதாயேகச்
 சொர்க்கநிலை காணாமல் சுணங்குகின்றேன்
தந்தையனே யென்றனுடைப் புந்திதன்னை
 தளராதுன் னிலைசேர்ப்பாய் ரமணதேவே.

துஷ்ட மிருகங்கள் இரைதேடும்போதும், காமாதுரன் சிற்றின்ப நுகர்ச்சியைத் தேடும்போதும், பசியால் வருந்துவோன் ஆகாரத்தைத் தேடும்போதும், ஜலத்தில்மூழ்கி இறக்கப்போவோன்தான் தப்பிப் பிழைக்க சகாயம் தேடும்

போதும், எவ்வளவுக்கம் உண்டாமோ அவ்வள வூக்கத்துடன் ஆத்மாவைக்காண ஆசைப்பட்டேன். தரிசனம் செய்யப்போகிறேன் என்ற எண்ணத்தையும் விடுத்து அந்தகனைப்போல நிச்சலமான வுணர்வுமாத்திரமாக அநுபவித்துப்பார்த்தேன்.

சிகாரநிலைச் சிற்பரனும் சின்மயனைக்காணச்
 சிந்தையதையோர் நிலையில் சிதறாமல்வைக்கத்
திகழுமனங் கலுக்கெனுமோர் தீயவொலிகேட்கத்
 திருத்தமுறு மவ்வொலியை மாத்திரமாகவுன்றி
வொகாரநிக ரணங்கின்கை யணிவொலியே யென்ன
 வுருவமிகக் கற்பித்தே யுருகிமிக நிற்கும்
பகரவொண வன்மனத்தின் செயலதையேயாளும்
 பார்த்தடக்க முடியாது பார் ரமணதேவே.

எண்ணங்களாகும் மனதையே ஓர் ஸ்மசானமாக்கி, அதிலெழும் என் ஆசாபாசங்களை யெல்லாம் கொளுத்தி சாம்பலாக்க எண்ணங்கொண்டேன்.

உலகெல்லா மொருகணத்தி லோடியாடி
 யுழலுமென் மனதின்வலி யென்னசொல்வேன்
பலவழியு மெனைக்கொண்டு பரவச்செய்து
 பந்தித்தே போர்வழியில் பதியாவண்ணம்
கலகமிகச்செய்கின்ற கள்வன் றனைக்
 கண்டிடவே யுளவுவழி கருணைகூர்ந்து
திலகநிலை சேர்ந்திடவே திசையைக்காட்டித்
 திருத்தியெனை யாட்கொள்ளும் ரமணதேவே.

ஓர் சமயம் கண்மூடி யிருக்கும்போது, என்னென்ன விசித்திரங்கள் நம்முன்னே நடக்கின்றன, நடப்பன நடக்கட்டும், எதுவரையில்நடக்கும் பார்க்கலாமென்று பார்த்துக் கொண்டிருந்தேன்.

மனமென்னு மூடசிகா மணியே யுன்னை
மதித்திடுவோ ரவரிடமே மகிழவேண்டி
வினமுடனீயெப்போது மேகியுன்ற
னின்பமுறும் பேயாட்ட மாடி நிற்க
ஜனனமெனும் பிணியதனைச் சதியேசெய்யச்
சற்குருவா லருள்பெற்றுச் சகசங்கண்டு
கனகநிலை யேறுகின்றேன் காட்சிகாணக்
கருதிடுநின் செயலொன்றும் பலியாதிங்கே.

ஓர் சமயம் பற்களைக் கிட்டிக்கொண்டு அடமாக வருத்தப்பட்டு மனதை நிரோதம் செய்தேன், என்னுடைய நிஷ்டைக்குப் பிரதிபந்தமாக எவ்வளவு நினைவுகள் தோன்றினும் நான் மனதை அவ்வழியே செல்லவொட்டாமல் கம்பு, சோளக்கொல்லைக்கு, பட்சிகள், கிளிகள்வந்து விழாத வண்ணம் காவல் காப்பதுபோலவும், பட்சிகள்வந்தால் துரத்தும் வேலையிலிருப்பதுபோலவும், கண்மூடி ஆங்கு தோன்றும் வெளியாங் கொல்லையில் எண்ணங்களாகிற பட்சிகள் அனுபவமென்னும் தானியத்தை அபகரிக்காமல் ஆன்ம சொரூபமாகிய என்னில் அமர்ந்திருப்பேன்.

மதுவுண்ட மர்க்கடமாம் மனமேகேளு
மதியில்லா வுன்றனையே மதிக்காதுள்ள
விதுரனவ னிடதுகால்விரற் கடையின்
விளிம்பதுவாம் நகமுனையி லொட்டி யுள்ளே
ஒதுங்கியநுண் பொடியினுக்கு மொவ்வாவுன்னை
யுளமதனில் கொண்டவர்க ளுண்மையாக
வெதும்பிமிகத் திரிவதுமே யல்லால் மேலும்
விரிவாகும் நரகிற்கும் துணைவராவார்.

சில சமயம் தியானம் செய்யும்போது வருத்தம் தோன்றுமானல், நாம் சாப்பிடும்போது அதில் அலுப்புத் தோன்றாமலிருக்க நடுவிலே கறி குழம்பு ரசம் பச்சடி

முதலான சேர்த்துக்கொண்டு புசிக்கின்றதைப்போல தியானகாலத்தில் அலுப்புத்தோன்று திருக்க, நடுவில் அதற்கனுகூலமான, குருநாதனைப்பற்றிச் சிந்தித்தல், தியானத்திற்குரிய சாஸ்திர ஆராய்ச்சிசெய்தல், நன்மனதுடன் வெளிச்சென்றுலாவுதல், முதலியனசெய்து திடம்பண்ணி மீண்டும் அப்யசிப்பேன்.

ஆணிப்பொன் னம்பலத்தி லமருகின்ற
அன்புநிலை யதுவாகும் மனதேநீயும்
கேணிநிலை மௌனமதைக் கவரவேண்டிக்
கெட்டிடுநீ செத்திடுநீ கேவலந்தான்
ஏணிநிலை யேறியநீ யேங்காதேக
எண்ணமெலாம் வண்ணமதா யிசையவுன்றன்
காணியதாம் காட்சியதைக் காட்டுவாரே
கருத்திலமர் ரமணமணிக் கடவுளாரே.

சிலசமயம் தியானத்தில் உட்கார்ந்தவுடனே உட்கார்ந்த வேலையை மறந்துபோய் சலிக்கும் பல எண்ணங்களில் ஈடுபட்டு ஆஹா மறந்தோம், மோசமபோனோம், எனத் தெளிந்து மீண்டும் வைராக்யத்தைத் தொடுப்பேன், சில சமயம் உட்கார்ந்த வேலையையே மறந்து ஏமாந்து தூக்கத்தில் ஈடுபடுவது, நாளைக்கு பார்த்துக்கொள்ளுவோமென்று அலுப்புத்தோன்றுவது குப்பென்று நின்றாற்போல இருள் தோன்றுவது நிகழும், பின் நித்திரைபாக்கி, அஜீரணம் அதிகபோஜனம், அலைச்சல், முதலிய அசந்தர்ப்பங்களினால் இவை நிகழ்கின்றனவெனத் தெளிவடைவதுண்டு.

பகரவொணு வைங்தெழுத்தி னலத்தை யோர்ந்து
பண்பாகும் பிரணவத்தின் பாகங் கண்டு
சிகரம்வளர் சோகமதைக் கண்டே பின்னும்
சிறப்பாகும் வாசிநிலை யேறி நின்று

புகழுவொணு சிவராஜ யோகம்பார்த்துப்
புகுந்தேகுஞ் சவிகற்பப் புதுமை கண்டு
ககனநிலை யமர்ந்துகளி கொண்டே நாமும்
கனிந்திடவே யருளியது ரமண னன்றோ.

முயற்சியைப்பொறுத்து சிலர் ஒருவருஷத்திலும் சிலர் பத்துவருஷத்திலும், பயன்பெற்றதாக சாஸ்திரங்களில் பார்த்திருக்கிறேன். எனது அநுபவத்தில் ஒன்றரை வருஷத்தில் தியான ஸித்தியைப் பெற்றேன்.

உந்திரத்தால் வெளியாகு முண்மை காண
வுருகிநிதம் கண்விழித்தே யுரிமை யாக
மந்திரங்கள் மிகசெபித்து மகிழ்வாய் நின்று
மணிமுடியாம் மலைமேலே யேறும் போது
தந்திரத்தால் சத்திகளும் தடையே செய்தார்
தவிர்த்தவரை மென்மேலும் தாண்டிச் சென்று
அந்தரத்தில் நின்றொளிரும் அருளைக் காண
அருணகிரி ரமணமுனி யாண்டு கொண்டார்.

இவனுடைய ஆரம்பதியானகாலத்தில் நீக்கமுடியாத எண்ணங்களாகிய தோற்றங்கள் முன்வந்து நிற்பினும் அதற்காக நீக்க முடிய வில்லையே யென்று வருத்தப்படுவதாவது, விசனப்பட்டுக் கொண்டிருப்பதாவது கிடையாது, கடவுள் துணையிருப்பார், அவரிஷ்டப்படி நடைபெறும் என்பதாகத் தீர்மானித்து எண்ணங்களை யெதிர்த்து நின்றேன், நீக்கமுடியாத ஓர் உருவம் நான் நான் என்று முன்னிற்பதாகவைத்துக் கொள்ளுவோம், தோன்றினால் தோன்றட்டுமே என்று சமாதானத்துடன் அவ்வுருவத்தையே ஜெகன்மாதாவாகப் பார்த்து தியானம் செய்யும் குறுக்கு வழியிலிறங்கி விடுவேன், அந்த மாயாவுருவிற்குமாரி மாயம் மாயம் நிர்க்குணந்தான்,

ஸ்ரீமந் நடராஜப் பெருமான் தரிசனத்தையும், பெரியோர்களுடைய தரிசனத்தையும், சொப்பனத்தில் சந்தேகமறக்காட்டிய நீ உன் உண்மை சொரூபத்தைகாட்டியே தீரவேண்டுமென்று தியானகாலத்தில் மன்றாடிக் கேட்பேன்.

அம்பலத்தே யாடுகின்ற அருமறையி னருளே
அன்பருளம் தங்குகின்ற வின்பநிலை நின்சி
தம்பரத்தே வேறு நிலைதன்னையன்றி யிலதாய்த்
தத்துவமா நடிக்கின்ற தனித்தலைவாவிங்கு
பம்பரம்போல் பறக்குமிகப் பாவி மனம் பண்பாய்
பறவையினு மதிவேக முழூன்று மிகச்சென்று
உம்பரத்தி லடங்குவதைக் கண்காண ஆசை
உத்தமனே சற்குருவே யுண்மை நிலைத்தேவே,

மௌன அப்யாசம் பயிலப்பயில அருள் தோற்றங் கிடைத்தது அந்தர்யோக பூஜை பலப்பட்டது போகப் போகத்தான் திட முண்டாயிற்று.

தொழுதுனையே துணையாகத் துணிந்துகொண்டு
தொல்புவியி னல்லலைதத் தொலைக்க வேண்டி
அழுததுவுங் கொஞ்சமல வரசேயுன்னை
யடைந்திடவே பாடினது மளவேயில்லை
பழுததுவும் வாராமல் பலித்ததை'ய
பண்பறியாப் பேதையெனைப் பார்வைகொண்டு
முழுதிலுமே காத்திடவே வேண்டும் வேண்டும்
முனிரமண குருவுனையே மேவிநின்றேன்.

இராமகிருஷ்ண பரமஹம்சர், உபதேச ரத்னமாலையில் ஓர்வசனம் ஞாபகத்திற்கு வந்தது. அதாவது சுத்தமாயையே யில்லாத ஒருவன், ஒரு முகூர்த்தகாலத்திற்கு மேல் இவ்வுலகில் ஜீவித்திருக்க முடியாது, ஒரு முகூர்த்த

மென்பது மூன்றேமுக்கால்நாழி, மணிக்கணக்கில் ஒன்றரைமணிநேரம் இந்த ஒன்றரைமணி நேரமும் மனதை அசையாமல் வைத்தால் அற்புத மருவுலகம் கிடைக்குமென திடமுண்டாகியது. வடக்கு முகமாக சின் முத்திரையுடன், கண்மூடி புருவமத்தியில், சுத்த நிர்க்குணமான பரவெளி லட்சியமாகப் பார்வைவைத்து ஓம் என்ற பிரணவம் மாத்திரம் 3½ மாத்திரைநீளம் உதடசையாமல் மானசீகமாக உச்சரித்து ஓர் எண்ணமும் எண்ணாமல் மேற்கண்ட ஒரே சிந்தனையுடன் செல்வது ஊசிமுனையில் காலூன்றி நிற்பதுபோலிருந்தது (தேகத்தை கொசு, எறும்பு, முதலியவை கடிப்பினும் பொருள்படுத்தவில்லை) இப்படி நான் பழகும்போது வயிற்றினுள் குடலில் சில சமயம் குடு குடு வென்ற சப்தமும், சில சமயம் சர்ப்பம் தவளையை யுண்ணும்போதுண்டாகும் தவளை கத்தும் சிறு சப்தமும் உண்டாயின:— இது தான் மனமென்னும் தவளையை ஆத்மாவென்னும் சர்ப்பம் சாப்பிடுவதற்கடையாளம். சில சமயம் யோக நித்திரையில் அயர்ந்திருக்கும் போது, எனது மனதின் உதவியை யெதிர்பாராமலே, ஓர் தெய்வீக சக்தி என்னை தூக்கிக்கொண்டு போய், மனிதன் சர்வ சாதாரணமாகச் செல்லக்கூடாத, புழக்க மில்லாத, புதிய வேறு இடத்தில் வைத்திருக்க நினைவு வந்து விழித்துப் பார்த்தேன், நாமிந்த விடத்தில் எப்படி வந்தோம், எப்பொழுது வந்தோமென்று ஆராய்ச்சி செய்தால் அதுவுமோர் தெய்வீக சக்தியின் வேலையென வுணர்ந்து ஆச்சர்யப்பட்டு அடங்கினேன்.

ஓடும்மனதை யுள்ளடக்கி உள்ளேபார்க்க வொன்றதுவே
 ஆடும்கருணை யதுவாகும் அலையாநிலையைக்காண்பித்துப்
பாடும்சிறியேன் பாட்டனைத்தும் பலிக்கக்கருணைபாலித்தாய்
 நீடும் உலகில் நிறைந்திட்ட நிதியே ரமணநித்தியனே.

துய்ஞான வுண்மைநிலைத் துரியமேற
துரைசெய்த கிருபையதை யென்னசொல்வேன்.

சுஷும்னு நாடி திறந்தவுடன் மயிர்க்கால் தோறும் தேள் கொட்டியது போல் விறுவிறென்று பாதையுண்டானது. மேலும் சமுத்திர இரைச்சல் போலுள்ளதையும் மதிக்கவில்லை. இடைகலை பிங்கலை என்று சொல்லக்கூடிய சூரியகலை சந்திரகலையாகிய சுவாச ஓட்டம் கிஞ்சிற்றேனும் கிடையாது. தேகம் பிணவியல்தான். இந்நிலையில் ஒருவர் என்னைப் பார்ப்பின் மரித்த பிணமென்றே கட்டாயம் கொளுத்தி விடுவார். தாயுமானவருக்கு ராமநாதபுரம் காட்டில் நிஷ்டை கூடிவிட்டபடியினால் அங்குள்ளோர் அவரைக்கொளுத்தி அரை குறையாக்கிய கதிதான் வந்து சேரும். நம்முடைய நிலை பக்கத்தி லுள்ளவருக்குத் தெரிந்திருப்பின் பங்கம் வராது. ஐம்புலக்கதவை யடைத்து தத்துவ நிலைகளைக் கடந்தாகிவிட்டது. பூவுலகத்தை விட்டும் ஸ்தூல தேகத்தைவிட்டும் பிரம்மரந்திர அதி ரகஸ்ய பெரிய உலக துரியவெளியில் ஆத்மாவாகிய நான் தனித்திருப்பதைக் கண்டேன். கண்டவனெவனென கருதிடதனித்தேன்........மௌனம்..............................................

உன்செயலா லுண்மைநிலை யுணரவைத்த
ஊன்செய்த புண்ணியந்தா னென்னசொல்வேன்,
தன்மை நிலை யடைந்த தபோதனனேமெத்த
தருமகுண குரு ரமணு தயவுவைத்துப்,
புன்மைநிலை யுடையோனென் புலம்பல்கண்டு
புதுமைநிலை யேற்றிடவே புந்திதன்னில்,
சின்மயனி னனுபவத்தை சிறக்கக்காட்டிச்
சிந்தையினை யோர்நிலையில் சிக்கவைத்தாய்.

சாதாரணமாகத் தூங்குங் காலத்தில் அதாவது கருவி கரணங்களெல்லாம் அடங்கி நிற்கப்பட்ட சுழுத்தியில் பிராணவாயு மாத்திரம் வெளிவந்தும் உட்புகுந்தும் உலாவிக் கொண்டிருக்கிறது. ஏனெனில் உடற்காவலாகும் அப்பிராண வாயுவும் போககு வரத்தின்றி நீங்கி யிருக்குமானால் மரண மடைந்ததென்று உரியபந்துக்கள் தகனம் பண்ணுவதற்கு முன்னமே, நாய் நரி முதலியவை பட்சித்து விடுமென்று உடலைக் காத்துக் கொண்டிருக்கிறது. காவலாக விருக்கும் அப்பிராணவாயுவும் அழிந்து விட்டபடியினால் உடல் பிணக் கட்டையாய் விட்டது.

கடைந்தெடுத்த நவநீதங் கலந்திடுமோ மோரில்
கலவாது மிதந்துவிடுந் தன்மையதா ஞான
மடைந்திட்டேன் பிரமனினிப் பிறப்பிக்க வாகா
னவன்பட்ட குட்டதனை மறப்பானோ பின்னு
மிடைந்திட்டே யுதைபட்ட காலனவ னென்னை
யிறப்பிக்க வல்லவனோ யீதெவரின் சூதால்
முடைந்திட்ட தெனவினவில் மாயையெலாங் கடந்து
மோனகதி நின்றிலங்கு மாரணர் மகிமை.

பராபர வஸ்துவின் தரிசனங்கிடைத்தது. ஒன்றுயிருப தக்காக்ஷி, என்பது வாசலுக்குள் அரண்மனையில் கொலு விருந்த அரசக்காக்ஷி, இதையாவரும் காணலாம். இதைப் பற்றி சொல்ல ஆவல் எனினும் யார் யாரைப்பற்றி சொல்லு வது அப்படி நான் சொல்லிக் கொண்டேபோனால் சொல் வது மாயையின் தொழிலாக வன்றோமுடியும். நான் எந்த ஒன்றை அறிந்ததாக இவ்வனுபவத்தை எழுதுகிறேனோ அது (மாயையினால்) அறியப்படாத தல்லவோ, இதுதான் இரவு பகலற்றவிடம்.

அப்பா அரசே அருணைநிலை
  யையாரமணா அடியேனுள்,
துப்பாயென்றும் விளங்குகிறாய்
  துரையேவுன்னைக் கண்டவனார்,
முப்பாழிற்குள் கண்டவனை
  முனைந்துபேசும் பொருளில்லை,
செப்பாமௌன சிரமதனில்
  செல்வாவுன்ற னருட்பெருக்கே.

பல்லாயிரம் மைலுக்குமேல் ஆகாசவெளியில் ஒருவன் ஸ்தூலசூட்சும தத்துவங்களைக் கடந்து, ஆகாயத்தின் நடுவி லிருக்கப்பட்ட கடம்போல, சின்மாத்ர வடிவமாக மஹாககனத்தில் இருந்துபார்த்தால் எப்படியிருக்கும்? கீழும் ஆகாசம் மேலும் ஆகாசம் சுற்றிலும் ஆகாசம் ஆங்கு கீழ்மே லென்பதில்லை. இருள் என்பது இல்லவேயில்லை. இராப்பகலென்பதில்லை, சுகம் துக்கம் என்பதில்லை, பசி தாகம் என்பதில்லை.

கருணாநிதியே ரமணாவென்
  கண்ணிற் கலந்த பேரொளியே,
அருணாசலத்தி லமர்ந்தருளும்
  அருளே யுன்னை யடைந்திட்டேன்,
இருளா டலகி லினிப்பிறவேன்
  இனிமேலெனக்கு மென்னகுறை,
தருணாவடியேற் கருட்சோதி
  தந்தாயென்முன் வந்தாயே.

எனது வாழ்நாளென்ற பொய்யைக் கடந்த விடம் பூரண புராதனன் இருப்பிடம், சிதாகாசம் எல்லையற்ற பெருவெளி, வெட்டவெளி, அந்தரத்தில் உலகத்தையே கண்ணாகக் கொண்டுள்ள கண்ணால் பார்த்தால் எப்படித்

தானிருக்கும், அந்த இடத்தைப்பற்றி எழுதுவதென்றாலோ மனம் மலங்குகின்றது. மயிர்க்கூச் செறிக்கின்றது. எழுது கோலோ மேற் செல்லவில்லை .... .... ....
அருட்பெருஞ்ஜோதி .... அருட்பெருஞ்ஜோதி .... ....
தனிப்பெருங்கருணை .... தனிப்பெருங்கருணை .... ....
.... .... .... .... .... ....
நான் என்பதைக் காணேன் .... .... .... ஒளி அந்தப் பேரொளிதான் புலப்பட்டது.

கூகாவென் கூச்சலிடுங் கூட்டமதில் கூட்டிக்
கூற்றுவனின் கைதனிலே காட்டாமல் மீட்டி,
சாகாத நிலைதந்தாய் தனிநிலைமை யாகச்
சார்கின்ற பெரும்பதவி யான்தாவி யேற,
ஆகர்வென் சொல்வேன் சூதானவெளிப் பெருமை
யாரறிவார் பஞ்சபுல னடைக்குமுறைசூதால்
போகாத விடந்தனிலே போக்குவித்த ரமணு
புண்ணியனே யின்னுமிகப் போயிடவே
[யருள்வாய்.

இதுதான் சிதகாசப் பெருவெளி சுயம்பிரகாசக் கடவுள் ஆனந்த நடராஜர் நிருத்தம்செய்யுமிடம் இதுதான் தலைவனைத் தரிசனம் செய்யுமிடம். இதுதான் பிரணவப் பொருள். இதுதான் ஞானசபை. இதுதான் சர்வசாக்ஷி. இதுதான் ஆன்மப்ரகாசம். இயன்றவரையில் விவஹரிக்கின்றேன். அவ்வாகாசம் எப்படி இருந்ததெனில் இருளுமல்லாத ஒளியுமல்லாத அதாவது இரவும் பகலும் சந்திக்குமிடமாகிய இரணிய வேளை. ஆகாயத்தைப்போலிருந்தது.

**“ இவ்வாகாயத்தைப் பார்க்கிறவனும் பார்க்கிறவனைப் பார்க்கிறதுந்தான் இங்கு விசேஷம் ”**

எனையறியா வஞ்ஞான விளம்பருவந்தனிலே
எழிலுலக விடைய சுகவூழ்வினையில் மூழ்கித்
தினையளவு முண்மை நிலைத்திறமறியாத் தீயேன்
திறமறியத் திறப்பித்தாய் திருக்கதவை நீயும்
தனையறிய மயங்காமல் களிக்கின்றே நானும்
தயவுடனே தானதுவாயிருந்திடுக பிரிந்தால்
துணையறியே னுண்மையிது நும்மாணைமீட்சத்
துரியநிலைத் தவமுனியே ரமணபதி தேவே.

சாக்கிர காலத்திலும், சொப்பன காலத்திலும், சுழுத்தி காலத்திலும், துரிய காலத்திலும், எவன் இவைகளை அறிந்திருந்தானோ அவனே நானுனேன். (ஆஹா உள்ளது நிலைக்க ஒன்பது தேங்காயுடைக்க வேண்டுமா? என்று என் தகப்பனார் பழமொழி) என்னை நான் பார்ப்பதற்கு இத்தனை பிரயத்தனங்களா சாக்கிர சொப்பன சுழுத்தி துரியம் துரிய வெளியாகிய சிதாகாசத்தில் பார்த்த வெளியையும், அதன் உள்ளொளியையும் கண்டபின்பல்லவோ சந்தேகம் நீங்கி திடப்பிரக்ஞனுனேன். தைரிய மனத்தினன் ஆனேன். இனி என்னை ஒருவரும் மாற்றவோ மறைக்கவோ முடியாது. இனி என்னைப்பற்றி சந்தேகிக்க எனக்கிடமில்லை. அவ்வனுபவத்தால் உலகம் எல்லாம் நானே யானேன். இனி இந்தக்கட்டை எப்படி ஆடினு லும், பாடினுலும் எனக்கென்ன. இனி உலகம் என்னைப் புகழ்ந்தென்ன, இகழ்ந்தென்ன.

ஆங்காரப் புகழுடைய ஐயே யுன்றன்
அடவாதித்தனமெல்லாம் நடவா திங்கே
பாங்காகப் பரிவாரம் பரிந்தேயேகப்
பாக்கியவான் ரமணமுனி பார்க்கவென்னைத்

தேங்காத தெய்வகளை தெளிந்துகண்டேன்
தேசிகனின் றிருவருளைத் தேடிக்கண்டேன்
ஓங்காரப் பிரணவமு முச்சரிக்கா
உயர்நிலையா முண்மைநிலை யுளவுங்கண்டேன்.

மாயைதன் விஷப்பற்கள் பிடுங்கப்பட்ட நல்ல பாம்பைப் போல என்முன் தோன்றினான் வெட்கப்பட்டான். செயலற்ற தனது விசுவரூபத்தைக் காண்பித்தான். தனது உண்மைகளைச் சொன்னான். இனிநான் உங்கள் ஜோலிக்கு வருவதில்லை யென்று உறுதிமொழி கூறினான். இது எனது இயற்கைத் தொழிலென்றான். தனது ஜால சக்யத்தொழிலால் எனக்கு அடிமையானான். அவன் பிறந்த இடத்திற்குப் போனான்.

அளவிலா வுபசாந்த மாகளி
றளவிலாம லுலாவவே
தெளிவிலாமன மென்னுநாயது
செருக்கினால்முன் குரைக்கவே
களிறின் மேலமர் பாகனை
விவேகனந்த ஞமலியி
னொளிரு முன்பலை யுதைத்துதிர்த்திட
வுதிரமோட வழுதமே.

எனது குருநாதன் பகவான் ரமணமஹரிஷி அனுக்கிரஹத்தால் அவருடைய விளக்கத்தால் என்னுடைய அந்தர ஆத்மா வெளிக்கிளம்பிற்று. அவர் என்னை பூரண தசைக்குக் கொண்டுவந்தார், கொண்டுவருகிறார், கொண்டுவருவார். அவர் ஆத்ம அனுபவமென்னும் மழையானது என்மேல் விடாமல் வருஷிக்கின்றது. அது ஓய்வற்றது. அதை யென்றும் தடுக்கமுடியாது. இனி அவரென்னைக் கைவிடமுடியாது.

உன்னிடமு மென்னிடமு மோரிடமா தலினு
லென்னையுந் தன்னையு மேகமதா யாக்கி
சென்னிநிலை யேற்றுவிக்கக் கருவிநிலை காண
சேட்டையெலா மற்றிடவே சித்தியெலாம் பெற்றேன்
உன்னடியே வுறுதியதா யுளமதனிற் கொண்டேன்
உத்தமனே சற்குருவே யுண்மைநிலை ரமணு
சன்மார்க்க சங்கத்து சாதுக்கள் காண
சத்தியமே சொல்கின்றேன் கைவிடவே வேண்டாம்.

.... .... .... ....

.... .... .... ....

நான் என்றும் போகாத இடத்திற்குப் போனேன், காணுதவனைக் கண்டேன், களிகொண்டேன், வெளியில் தூளியாய், நடு நாயகமாய், நின்றதுதான் ஜோதி.

சாதிமத சமயநிலை சார்ந்திடும்வே தாந்த
சகலாகமபுராண விதிகாச கலைகள்
ஆதிநடு முடிவுமிலா ஆண்டவனின் னருளை
அடைந்திடவோர் வழியாகும் அதுவுமொரு சூதே
நீதியதாய் நின்றிடவுள் நிலையதனில் நோக்க
நித்தியமா முக்காலத் துள்ளவனீ யென்று
சோதிநிலை யொளியதனை வெளியதனில் காட்ட
சுகமதுவே யான்மசுக மெனக்கொண்டேன் ரமணு.

.... .... .... ....

இதுதான் துரியவெளி, இதில் அதிகநேரமிருந்தேன். இங்கு ஓமென்று முன் உச்சரித்த ஆள் கிடையாது. கடவுளுடைய அருள் விலாச அதி ரகஸ்ய கண்காட்சி உலகமானதினுலும், இவன் தனித்திருப்பதினுலும், அதிலும் இது முதல்தடவையானபடியினுலும், இதிலேயே எங்கு ஆழ்ந்து

மூழ்கிவிடுவோமோ என்று கிஞ்சித்து சந்தேகமுண்டாகி, அஞ்ஞான தேகத்துள்புகுந்து, ஸ்தூல வுலகிற்குவர ஆசை யுண்டாகிவிட்டது. பாராமல் பார்த்திருந்த ஒன்றுபட்ட வேலை இரண்டுபட்டது, தன்னைவிட்டுத் தலைவனைவிட்டு ஒன்றாயிருப்பதைவிட்டு இரண்டுபட்டேன். எனது அனேக பிறவிகளிலும், இந்த பிறவியிலும், என்றும் கண்டும் கேட்டு மிராத, அதி அற்புத புதிய உலகத்தில், பிரபஞ்சத்தில், எனக்கென்றுள்ள ஸ்தூல தத்துவம், சூட்சும தத்துவம், எல்லாம்போய் நிராதரவாய் நூதனமாகப் புகுந்து நிற்பதால் இங்கே இருந்தபடி இப்படியே இருந்துவிட்டால் என் செய்வது என்னும் ஐயப்பாடுண்டாகிவிட்டது.

களக்கமறப் பொதுநடம் நான் கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக் காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பி யுதிர்ந்திடுமோ
வெம்பாது பழுக்கினும் என் கரத்திலகப்படுமோ
கொளககருது மலமாயைக் குரங்கு கவாந்திடுமோ
குரங்கு கவராதெனது குறிப்பி லகப்படினுங்
துளக்கமற வுண்ணுவனோ தொண்டைவிக்கிக் கொளுமோ
சோதி திருவுளமெதுவோ ஏதுமறிந்திலனே. (அருட்பா)

வெளிவரவேண்டுமென்று விருப்பம் வந்துவிட்டது. ஆனால் முடியவில்லை, வரவே முடியவில்லை, மனிதன் ஸ்தூல சூட்சும தத்துவங்களெல்லாம் இறந்த நிலைமையில் பிராண னற்றுக் கிடக்கும்போது எப்படி வர முடிகின்றது. தெய்வ ப்ரம்ம பிரயத்தனத்தின்மேல் உத்தேசித்த ஒரு மணியான பின்புதான் ஸ்தூல தேகத்தில் சம்பந்தப்பட்டு வெளிவந் துலாவுகின்றேன். ஆனந்தப்பட்டேன். எனது தாயாருக் கும், தம்பிக்கும் உடனே இவ்வாச்சர்யத்தைச்சொன்னேன், அதற்கு தாயார் அருந்தவம் சொன்னதாவது (கண்டவர்

விண்டிலர் கமலவின்பத்தின் காட்சி) என்று பரிகாசம் செய்து (விண்டவர் கண்டிலர்) என்று சொன்னாள். கண்டவர் சொல்லாமல் எப்படி முன்னோர்கள் காட்சியடைந்தார்களென்று கேட்டேன். வடலூர் இராமலிங்க சுவாமி காட்சிக் கண்ணி பாடியிருப்பதின் நோக்கமென்னவென்று கேட்டவுடன் மௌனமாயிருந்துவிட்டு, பின்பு நீ பேச்சுக்காரன், உன்னிடம் பேச முடியாதென்றாள்..................இப்பதவி அடைய சுமார் ஒன்றரை வருடகாலம் இடைவிடாப் பிரம்ம பிரயத்தினம் செய்தேன். தாயுமானார் கேடிலிங்கம் பிள்ளைக்கு முடிவாக உபதேசித்தபோது, கேடிலிங்கம் பிள்ளைக்கு ஐயப்பாடுண்டாகி, நான் அப்படியே ஆழ்ந்து மூழ்கிவிட்டால் என்ன செய்வேன் ? என்று திகைக்க தாயுமானர் - அதற்குத்தான் இவ்வளவு பாடு என்று சொல்லி,

நீயற்ற அந்நிலையே நிஷ்டை—அதில் நீயிலையோ
 வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலும் நீபோகாயென்று முள்ளாய் சும்மா
 வருந்தாதே இன்பமுண்டு வா. (தாயுமானர்)

முன்னம் எனக்குண்டான சந்தேகத்திற்கு வை பாசுரம் பின்னர் திடத்தைத் தந்தது. மேலும் மேலும் அநுபவத்தில்......................மீண்டும் மீண்டும் அநுபவிக்கும் நிலை எனது பிரயத்தன மில்லாமலே......................

அன்பர்குறை முடிக்கின்ற வரசேயுன்னை
 யணைந்துநிதம் சுகிக்கின்றே னடிமைமேலும்
துன்பமறுந் துரியநிலை கண்டுயானும்
 துயர்காணேன் களிக்கின்றேன் துரையேயென்னை
நன்குறவே குருதுரியம் தன்னில் வைத்தால்
 நன்மையது மிகவாகும் ரமணனே யென்
கன்மமெலாம் போகவருள் நோக்கம் வைத்த
 கருணைக்குக் கடைநாயேன் கைம்மாறென்னே.

இவ்வளவெல்லாம் செய்து நீவிர்கண்ட பயன் யாது என்பீரேல்.

குண்டலி சக்தி, உலக வாசனைகளை யெரித்து, தன்னை ஜோதி ரூபமாகப் பார்க்கும்போது, யோசித்தாலும் உலக வஸ்துக்களின் ஞாபகம் வருவதற்கில்லை. உலக மறதியும் மறைதலுமே மனம் நாசம் அடைந்ததற் கடையாளம். முக்காலத்திலும் உள்ளது இந்தப் பிரகாசந்தானென் றுணர்ந்து தன்னைப் பிரகாசரூபமாகக் கண்டதுதான் பலன்.

இனி எனக்குப் பிரணவத்தை உச்சரித்து கண்மூடிப் போகும் யோகம் வேண்டியதில்லை. ஞானமும் வேண்டியதில்லை. போனதுபோக நின்றது அதுவே.

## விருத்தம்.

கண்டவ னெவனெனக் கருத்தி னுடைக்
கண்டவ னின்றிட நின்றது கண்டேன்
கண்டனை னென்றிடக் கருத்தெழ வில்லை
கண்டில னென்றிடக் கருத்தெழு மாறென்
விண்டிது விளக்கிடு விறலுறு வோனர்
விண்டிலை பண்டுநீ விளக்கினையென்றால்
விண்டிடா துன்னிலை விளக்கிட வென்றே
விண்டல மசலமா விளங்கிட நின்றாய். (பகவான்)

## நேரிசை வெண்பா.

புசிப்போஞ் சிவபோகம் பூரணமா யெங்கும்
வசிப்போ மூலகில் வசியோ—முசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோ மெமக்கார்சரி. (பெரியார்)

குறிப்பு :—சகோதர சகோதரிகளே ! உங்களது வாழ் நாளில் எவ்வளவுதான் வாரிவாரிக் கொட்டினாலும் லாப நஷ்டத்தினால், சுக துக்காதிகளினால், இவ்வனித்தியப் பொருளில் கிலேசம் வருத்தியே தீரும். எவருக்கும் மன திற்கு குறைபாடு ஏதோ ஒன்று இருந்து வாட்டியே தீரும். முடிவில் சட்டி சுட்டது ! கைவிட்டது !! என்று போட்டு விட்டு ஓட்டம் பிடிக்கத்தான் வரும். மகுடமண்டல மன்னர் களும் முடிவில் இவ்வுலகில் கொண்டுபோனது ஒன்றையுங் காணேம். ஆகவே காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டியதவசியம். எந்தக் காற்றுள்ளபோதே ? இந்தக் கூட்டிலுள்ள காற்றுள்ளபோதே, எதைத் தூற்றிக்கொள்ள வேண்டும் ? துக்கத்திற்கு காரணமாய் வீணுகச் சலித்து இயங்கிக்கொண்டிருக்கும் பிரயோஜனமற்ற எண்ணங் களாகிய பதரை, அப்பொழுது என்ன மீதிநிற்கும் ? நாம்தான் மீதியாவோம். அதிகம் சொல்வானேன். தன்னி லுள்ள தலைவனைக் காணத்தான் இத்தனைபாடு. இதனை தரிசனம் செய்தவர்க்குதான் தரிசனங் கண்டார்க்கு மறு ஜெனனமில்லை யென்றது.

" சுற்றிச் சுற்றிவந்தாலும் சுங்கன் சாவடியாகத்தான் நுழையவேண்டும் " என்றபடி எத்தனை ஜன்மங்களெடுத் தாலும் எவ்வளவு பிரயத்தனங்கள் செய்தாலும், மனதிற் குப் பரிபூரண திருப்தியும் ஆத்ம சாந்தியுமடையுமிடம் உனக்குள்தான். "கரும்பு தின்ன கைக்கூலியா" இதற்காக நாள் நக்ஷத்திரம் பார்க்கவேண்டாம், இன்றே நன்னாள், அதிலும் இந்த நிமிஷமே சுபம். வாசகர்கள் படிப்பதை நிறுத்தி சில நிமிஷங்கள் அப்படியே நின்று பாருங்கள், எழும்பும் எண்ணங்களை நோக்குங்கள் " நோக்க நோக்கப் பூக்கும் இன்பம் " என்றார் பெரியார். இதற்காக புலித் தோல், யோகதண்டம், தேடவேண்டாம். சுகாசனமே

போதுமானது. உங்களது விவஹாரவேளைபோக மீதி ஓய்வுள்ள நேரங்களில் நடந்துகொண்டிருப்பினும் சரி, உட்கார்ந்துகொண்டிருப்பினும் சரி, படுத்துக்கொண்டிருப்பினுஞ் சரி, மனதை சலிக்கவிடாமல் புருவமத்தியில் நிர்க்குணமாக நாட்டம்வைத்துப் பழகிக்கொண்டிருக்கலாம், கண்விழித்தபடியோ அல்லது மூடினபடியோ சௌகர்யம் போலிருக்கலாம்.

கவி.

மாத்திரைப்போது மரித்து உள்ளே நோக்குபன்
ஆர்த்தபிறவி அகலவிட்டு ஓடுமே.

ஆன்றநற் சனகனாதி நால்வரும் அரன்முகத்தை
மூன்றரைக் கோடிகற்பம் பார்த்தபின் முத்தரானார்
தோன்றி நின்றழியும் இந்தத்தொடுகடல் புவியினுள்ளோர்
ஊன்றிஓர் கணமேனும் பார்த்திடின் உறுவர்முத்தி.

இக்காயம் நீங்கி இனியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி தேடுமின்
எக்காலத் திவ்வுடல்வந்தெமக் கானதென்
றக்கால முன்ன அருள்பெற லாமே. (திருமந்திரம்)

வசனம்.

சொரூபத்தை அதாவது தன்னை மறந்ததே அஞ்ஞானம். அதே இறப்பு பிறப்பு என்னும் மீளாத்துன்பக் கடலில் அழுந்தச்செய்தது. பகிர்முகத்தில் தான் ஜீவன் என்ற பிராந்திவந்து, தேகமே நான், மனதே நான், என் மனைவி, என்மக்கள், என்மனை, என்பூமி என்று தானே தன்னைக் கட்டுப்படுத்தி "எப்படி பெண்கழுதை தன் கால்களினால் அடிக்கடி உதைத்தாலும் ஆண்கழுதை பின்

தொடர்ந்து செல்லுகின்றதோ" அவ்விதமே ஜனங்கள் உலகத்தில் துக்கம், கஷ்டம், வேதனை மிகுந்திருந்தும், அதனை சுகமென்று மதித்து உழன்று அவஸ்தைக் குள்ளாகின்றார்கள். வாயுவால் மேகமண்டலம் சுழல்வதுபோல, மனதால் இந்த ஜகமனைத்தும் பிரமைகொண்டு சுற்றுகின்றது. ஆத்மானாத்ம விசாரத்தால் தன்னைப் பிரித்தறியவேண்டும். பிரித்தறிந்த மஹான்களைப் பாபங்கள் அணுகாவென்றும், நான் பிரம்மம் என்று அறியின் 100-கோடி யுகங்களிற் சம்பாதிக்கப்பட்ட சஞ்சித கருமங்கள், தூக்கத்திலிருந்து விழித்த ஒருவனுடைய சொப்பன கருமங்கள் நாசமடைவதுபோல நாசமடைகின்றன என்றும் பெரியார் சொல்லுகின்றனர்.

பிராரப்த கருமமிருந்தது, வினைப்பயனிருந்தது, ஊழை முயற்சி இருந்தது, அவர்கட்கு அப்பதவி கிடைத்தது, நமக்குக் கிடைக்காது, என்று மருளவைப்பது மனம். நினைக்கும் மனதைநீக்கி மேலே போகவேண்டும். பிராரப்தத்தின் நியதியை விலக்கக்கூடாதென்பது புருஷப்பிரயத்தனமின்றி இருப்பவருக்கேயாம். பிராணயாமாதிகளாலும், ஞானப்பியாசத்தாலும் பிராரப்தமானது ஜபிக்கப்படுகிறது. பகிர்முகத்தில், முற்போக்கில் போய்க்கொண்டிருப்பவர்களைத்தான் பிராரப்த சர்ப்பம் விழுங்குகிறது. பிரார்ப்தமென்பதும் கற்பனாரூபமாக அனுபவிக்கப்பட்டதே. அதற்கும் பிராரப்தம் வேண்டும். என்று வீண் யோசனைபண்ணி மோசம்போகாதீர்கள். மஹான்கள் என்பவர்களும் நம் போன்றே உலக நடையில் சின்னாளிருந்து தானே ஞானத்தை அடைந்திருக்கின்றார்கள். நாமும் அடையலாம் என்ற துணிவு பிறக்கவேண்டும். உள்ளபடி தன்னைத் தான் தேடுவோன் எவ்விதத் தடைகளுக்கு மஞ்சான், தடை என்ற நினைவே பெருந்தடையாகும்.

## விருத்தம்.

அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா
 யழிவிலாப் பரம்பொருளிருக்கப்
பந்தமுற் றவரார் வீடுபெற் றவரார்
 பாவனை விகற்பமே யனைத்துஞ்
சிந்தனை விரிவே பந்தமா மதனைத்
 தீர்ந்திடன் முத்தியா மனத்தின்
றொந்தலீலையினாற் றாரமா மணித்துந்
 தாரமு மண்ணிதாய்த் தோன்றும்.

உலகெது நாமாரென்ன
 வுற்றுநின் றுணருமட்டும்
கலகமார் பிறவிமோகங்
 கங்குல்போல் மூடிநிற்கும்
அலகிலா வுலகும்யாமு
 மழிவில்சிற் சோதியன்றோ
சலனமில் கண்ணார் கண்டோர்
 தத்துவ நிலைமை கண்டோர்.

(வாசிஷ்டம்)

---

## பதினான்கு சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

காயெலாங் கனியெனக் கனிவிக்கு
  மொருபெருங் கருணையமுதே யெனக்குக்
கண்கண்ட தெய்வமே கலிகண்ட
  வற்புதக் காட்சியே கனகமலையே
தாயெலா மனைய வென் றந்தையே
  யொரு தனித்தலைவனே நின் பெருமையைச்
சாற்றிட நினைத்திட மதித்திட
  வறிந்திடச் சார்கின்ற தோறுமந்தோ
வாயெலாந் தித்திக்கு மனமெலாந் தித்திக்கு
  மதியெலாந் தித்திக்கு மென்
மன்னிய வுணர்வெலாந் தித்திக்கு
  மென்னிலதில் வருமின்ப மென் புகலுவேன்
தூயெலாம் பெற்ற நிலைமே லருட்
  சுகமெலாந் தோன்றிட விளங்கு சுடரே
துரியவெளி நடுநின்ற பெரிய பொருளே
  யருட்சோதி நடராச குருவே.

(திருவருட்பா)

ஓம் தத் சத்:

# உயரிய உபதேசங்கள்.

## விருத்தம்.

எதன்கண்ணே நிலையாகி யிருந்திடு
　　மிவ்வுலகமெலா மெதன தெல்லா
மெதனின்றிவ் வனைத்துலகு மெழுமோமற்
　　றிவையாவு மெதன்பொ ருட்டா
மெதனுளிவ் வையமெலா மெழுந்திடுமிவ்
　　வெல்லாமு மெதுவே யாகு
மதுதானே யுளபொருளாஞ் சத்தியமா
　　மச்சொரூப மகத்தில் வைப்பாம்　　(பகவான்)

---

கடவுளையே நம்பு அவருனக்கு வழிகாட்டி உன்னை நடத்திக்கொண்டே போவார். அல்லலுற்ற இந்த சம்சார சாகரத்தில் ஓர் அசைவற்ற மலைபோல உறுதியாக நில். ஆத்மானுபவமுறல் என்பது தனித்த வேலை ஈச்வரானுக்ரஹம் எக்காலமும் தடையின்றி காத்துக்கொண்டேயிருக்கின்றது. அவனுடைய அனுக்ரஹத்தைப் பெறல் அவனவனுடைய சொந்த முயற்சியைப் பொறுத்தது.

ஆண்டவனே உன் ஸாக்ஷாத்காரத்தை எனக்கு அளி. உன்னை நாட எனக்குப் புத்திகொடு என்று கதறு. ஹே பிரபோ உன்னையொழிய வேறெவரையும் சரணம் அடையாத புத்தியை அனுக்ரஹம் பண்ணு என்று இதர பக்தர்களைப்போல் நீயும் தினம் தினம் கதறு.

கடவுள் ஒருவர் உளர் என்பதை உன் மனதில்வை. கடவுளைக்கூப்பிடு. அந்தப் பகவான் உன் பிரார்த்தனைக்கு செவிகொடுப்பார். உனக்கு ஒத்தாசைசெய்ய தன்ஏவலாளனை ஏவுவர். எல்லாம் அவன்செயல் என்னும் உணர்ச்சி ஆத்மானுபவத்தை வளர்க்கும்.

நீ பிரார்த்தனை செய்வது உனக்காக வேண்டாம். உலகமெல்லாம் வாழ பிரார்த்தனை செய்வதில் உனக்கும் வேண்டியது அடங்கியிருக்கிறது. பிரார்த்தனை செய்ய வேண்டுமாகில் இப்படிச்செய் நான் செய்த பிரார்த்தனை இவ்விதந்தான். (திருவருட்பிரகாஸ வள்ளலார்.)

சாமியாகட்டும் பூதமாகட்டும் ஸ்வர்க்கமாகட்டும் நரகமாகட்டும் எதுக்கும் மருளாதே, உன்னைவெல்ல எதாலும் முடியாது. நிர்க்குணத்தில் நாட்டம்வை. பரமாத்மாவே உன் வேலையைச்செய்யக் கடமைப்பட்டிருக்கிறார். சரீரம் நீயல்ல. சித்தம் நீயல்ல, சித்தம் காக்ஷிகாண உபயோகமாகும் ஒரு கருவி, மேலேபோ உன்னை நீ அறிந்துகொள் உனக்குள்ளும் எனக்குள்ளும் ஒரேமாதிரியாய் விளங்குவது அந்த ப்ரஹ்மமே. அந்த ப்ரஹ்மத்தை தரிசனம்செய். இந்தவுடல் உன்னைவிட்டு தனித்த வேறு பொருளென்ற உறுதிகொள். இந்த ஜன்மத்திலேயே அதுவும் இந்த நிமிஷத்திலேயே அடையக்கூடிய ஆத்மானுபவத்தை ஏன் அடுத்த ஜன்மம் வரைக்கும் தள்ளிவைக்கவேண்டும், முத்தி நீ அடைவது நிச்சயம். என்ன நேர்ந்தாலும் நேரட்டும் பிறர் அபிப்ராயத்தைப்பற்றிக் கவலை கொள்ளாதே. பிறரைக் குற்றம் கூறும் இயல்பை ஒழி. பிறரை நம்பினால் உனக்குத் துக்கம் மேலிடும் உன்னைப்பற்றி யாரென்ன சொன்னாலும் சொல்லிக் கொள்ளட்டும். சாவுக்கஞ்சாதே. உன் சரீரம்

ஏற்கனவே ஒழிந்துவிட்டதாக பாவனைகொள். சித்து விளையாட ஆசைகொள்ளாதே. அது அஹம்பாவத்தைப் பெருக்கும். வெறிநாயைக் கண்டஞ்சுவதுபோல அஹம்பாவத்தைக் கண்டு அஞ்சு. உன்னுடைய பூர்வ ஜன்ம கர்மவசத்தால் உன்னால் கடக்கமுடியாத அநேக கஷ்ட சம்பவங்கள் நேரும். உனது எதார்த்த நிலையில் நீ நின்றால் இவைகள் எம்மாத்திரம்.

அவன் கர்மா ஒருவிதம் உன் கர்மா வேறுவிதம் ஆகையால் எதிலும் குற்றங் கண்டு கூறாதே. பரப்ரஹ்ம பதவியின் திருஷ்டி யுண்டானால் ஸகல ஜகத்தும் தேவலோக நந்தவனம் போன்ற சிங்காரத் தோட்டமாகும். அவனது செயல்கள் யாவும் புண்ணியச் செயல்களாகும். "நன்றே நினைமின்" பல விஷயங்களில் மனம் புகும்படி விடாதே; அதனால் அதன் சக்தி சிதறும் விஷய சுகமும் உலக வாழ்வும் அநித்யமானவை. தீய எண்ணங்கள் உன் மனதில் எழாமல் இருக்கும்படி எச்சரிக்கையாக இரு. அவை எழவே அவைகளுடன் போர்புரிந்து அவைகளைத் தொலைக்க முயல். நீயும் உன்னைச்சுற்றி உள்ளவைகளும் அனித்தியமானவை களென இரவும் பகலும் இடைவிடாமல் நினைக்கவேண்டும். இத்தன்மையான முயற்சி உன் மனோதைரியத்தை விருத்தி பண்ணும் இயல்பினது. நான் ஸ்தூல சரீரம் என்ற பிரமையை ஒழித்தலே முதற்கடமை. நீ இந்த சரீரத்தை சொற்பகாலங் குடியிருக்கும் வீடாக மதிக்கவேண்டும். இப்படி மதித்துப் பழகிவரின் பின்பு அதில் ஏவல்களுக்கு உட்படமாட்டாய். இப்படிப் பழகிவரின் திடீர் திடீரென்று சொல்லமுடியாத ஒருவித சூந்ய நிலைமை ஒன்றுமில்லாத வெறுமையை உணர்வாய். அதனால் பயப்படாதே. அதை ஆனந்த ஸ்வரூபியான ஞான சூர்யன் உதிக்கப்போகிறான் என்பதை சூசிப்பிக்கும் சுகிர்தமான முன்னொளியாகநினை.

பயங்கொள்ளாதே. எதுவும் நன்றாகவே முடியும். எதிர் பாராமதே ஸம்ஸ்காரங்கள் உன்னை எங்கே கொண்டு விட்டா லும் விடட்டும். ஏங்காதே. உன் துறவை மனத்துறவாக்கு. உன்னை நீ ஏமாற்றப்பாராதே. உன் வாழ்நாளில் நேர்வதை எல்லாம் சாந்தத்தோடு ஏற்றுக்கொள். பூர்வ கர்மாவின் பலத்தால் நீ யார் யாரோடு கூடிவாழ நேரிடுகின்றதோ யார் யாரோடு நெருங்கி ஸகவாஸம்செய்ய நேரிடுகின்றதோ அதன்படி நடக்கட்டும். உன் சத்ருவைக்கூட நேசி. சத்ரு, மித்ரு என்ற பேதம் மேல் தோற்றமே தவிர வேறில்லை. அபேத புத்தி யடை எந்தெந்த காலத்தில் எந்தெந்த வேலை உனக்கு நேரிடுகிறதோ அதை எல்லாம் செய். ஆனால் பற்றுக்கொள்ளாதே. உன்னைக்கொண்டே நீ கதி பெற வேண்டும். யாரிடத்திலிருந்து எந்தவிடத்திலிருந்து உப தேசம் பெற்றாயோ அவருக்கு அந்த இடத்திற்கு உண்மை பக்தி பாராட்டு. எதுவும் நல்லதாகவே முடியும். என்ற நம்பிக்கையும் அமைதியுங்கொள். வெளிவேஷத்தில் ஒன்று மில்லை. உள்ளுணர்ச்சியாலும் அனுபவத்தாலுந் தான் எல்லாம் உண்டு.

உலகமோ ஒரு சித்திரச்சாலை ஒவ்வொரு உயிர்வாழ்க் கையும் சுவரில் தொங்கும் சித்திரப்படம் போன்றது. ஆதி யில் அந்தத்தில் நடுவில் எப்பொழுதும் தீரத்தை மேற் கொள். பின் திரும்பிப் பாராமற் செல். சென்று கொண்டே யிரு. லக்ஷியத்தையடைய முயற்சிக்கும் பொழுது இடை யூறுகள் அடிக்கடி சம்பவிக்கும் அவைகளுடன் போராடியே முடிக்கவேண்டும். உயர்ந்தலக்ஷ்யத்தை அடையப் போகி றோமே என்று இறுமாப்புக்கொள்ளாதே. ஒருவனுடைய லக்ஷியம் உயர் நலமுள்ளதாக இருந்து அதை நோக்கிச் செல்லும் முயற்சியும் உண்மையாக இருக்குமாகில் இருமாப் புக்கொள்ளுதற்கு இடமே யில்லை.

ஜீவாத்மாவுக்குள்ள சக்தி அளவற்றது. அளவற்ற சக்தி நீ ஸ்மரித்த மாத்திரத்தில் உனக்கு லபிக்கும். ஆத்மா நித்தியன் பந்த மற்றவன். நீ வருகிறுயென்றும் நீ போகிறுயென்றும் நீ செய்கிறுய் செய்யவில்லையென்றும் சொல்வதெல்லாம் வாழ்நாளென்ற ஒரு பெரிய ஸ்வப்னத்தினுடைய விளக்கதைகள்.

வாழ்நாளோ மோசம் என்று உணரும்போதும், யமன் பிரத்திபக்ஷமாகும்போதும், மனம் மரணாவஸ்தையடையும்போதும் இதற்கு மேற்பட்ட துக்க சம்பவமில்லை. என்னும்படியாய் துக்கம் நேரிடும்போதும் இந்த அவஸ்தைகளெல்லாம் தேகத்துக்கே ஆத்மாவுக்கல்ல. ஆத்மரூபமான உனக்கல்ல என்பதை மனதில்வை. இந்தப்படி உன் வாழ்நாளில் பிரதிதினமும் பிரதி நிமிஷமும் ஜபம் பண்ணு.

இன்புறுத்துவது பயமுறுத்துவது என்பது சரீரம் ஆத்மா என்னும் எண்ணங் கொண்டவனுக்குத்தான் ஆவதும் அழிவதும் எண்ணங்களாலேயே ஆகையால் நல்ல எண்ணங்களைக்கொள்வது எவ்வளவு அவசியம் என்பதை உணர் இதுதான் காலம் இதுதான் தருணம். மனம் தளராதே, திகிலடையாதே, ஊக்கங்கொள், காலதாமதம்செய்யாதே விருதா வார்த்தையில் பொழுது போக்காதே அதனுல் உனக்கு ஒரு பிரயோஜனமுமில்லை. ஒருதுளி அனுபவத்திற் கீடாகாது. ஒரு வண்டிப்பேச்சு. தைரியம் காட்டி அலைந்து திரிகிற புலியை யொத்த சிங்கத்தையொத்த தைர்யம்வேண்டும். பஞ்சகோசத்துக்குள் புகுந்துபோ மாயையை நீதுறந்தால் அந்த மாயையே தன் நிஜ ஸ்வரூபத்தை உனக்கு வெளியிடும்.

புத்திக்கூர்மையும் நிலை நீங்கா மனவுறுதியும் சோர்வற்ற முயற்சியும்வேண்டும். எங்கெங்கே ஏதேது தோன்

றினுலும் அங்கங்கும் இவற்றைக் காண்பவன்யார் என்று விசாரி. அவை அங்கங்கே நாசமுறும். சர்வநினைவுகளும் எங்கிருந்து உதிக்கின்றனவோ சர்வ நினைவுகளும் எவ்விடத்து ஒடுங்குகின்றனவோ அவ்விடந்தான் உனது யதார்த்தஇடம். எதுவரையில் முன்னின்று நானென்று எண்ணந்தோன்றிக் கொண்டிருக்கிறதோ அதுவரையில் ஆத்மாவைக்காணமுடியாது. நானென்பது அற்று எதுமிஞ்சி தானுய்நிற்குமோ அதுதான் உனது நிஜஸ்வரூபம். இந்த ஆத்மா இருந்தஇடத்திலேயே அடையத்தக்கது. (பகவான் ரமண மஹரிஷி).

அருளென்பது எல்லா சக்திகளுக்கும் மேலான சக்தி. அதன்பலத்தால் அந்த அருள்வடிவான ஈச்வரனை நமது கண்ணுக்குத் தோன்றுமல் மறைக்கும் எல்லாத் திரைகளையும் பிய்த்தெரியலாம். சித்தசுத்தி கொள் துக்க நாசம் சுகப்பிராப்தியாம், சிரத்தைவேண்டும். அஞ்ஞானம் நிவிருத்தியாகிற வரையில் சம்சாரபந்தம் நிவிருத்தியாக மாட்டாது. மனம் என்னும் பெயருள்ள ஓர் துஷ்டப்புலி விஷயங்களென்கிற பெரியகாட்டில் எப்பொழுதும் சஞ்சரிக்கின்றது ஆகவே நீ அக்காட்டின் வழியே ஒருபோதும் போகாதே. (ஓர் பெரியார்)

வேதாந்தப்படி மனிதனே இப்பூமியிலுள்ள சகல வஸ்துக்களிலும் சிரேஷ்டன். இந்த பூலோகம்தான் முக்தியடையக்கூடிய சிலாக்யமான விடம்.

மனிதனுக்கு ஞானம் உண்டான வுடனே அவன் இவ்வுலகத்தில் இரண்டு பொருளில்லை யென்றும் தானே உலகமென்றும் அறிந்து கொள்ளுகிறுன். மண்ணிலிருந்து கடம் உண்டாகி கடம் மண்மயமாய் இருப்பது போல

தேகமும் சின்மயமானது. காலம் தன்க்குள்ளிருக்கிறது காலத்திற்குள் தானில்லை, சுவர்க்கங்கள் தனக்குள்ளிருக்கின்றன. தான் சொர்க்கத்திற்குள்ளில்லை.

ஸர்வ சித்தியை யுடையகடவுள் ஒருவர் உண்டென்றும், அவர் ஒருவரே என்றும், அவரை உண்மை யன்பால் வழிபாடு செய்யவேண்டும். அதாவது கடவுளது புகழை விசாரித்தல், ஆன்மாவின் உண்மையை விசாரித்தல் தனது சிறுமையை கடவுளிடத்தில் விண்ணப்பித்தல்.

பக்தி என்பது மன நிகழ்ச்சி உருக்கம், அன்பு என்பது ஆன்ம நிகழ்ச்சி உருக்கம், வார்த்தை, ஆகாரம், நித்திரை, மைதுனம், பயம் இவைகளில் அதிக ஜாக்ரதையாயிருக்கவேண்டும். உலகியலில் செல்லுங்கால் ஊர்வழி போகும் போது எத்தனைபேர் எதிர் வந்தாலும் கண்ணால் பார்த்தாலும் அவர்களைப்பற்றிச் சிந்தனையின்றிச் செல்லுவதுபோல அப்பியாசி நடக்கவேண்டும்.

ஜீவன்முக்தி நிலையாவது ஜீவித்துக் கொண்டிருக்கும்போதே ஜீவத்வம் விட்டுநிற்பது. யான் எனது என்னும் பற்றுடன் செய்யுங்காரியம் அனைத்தும் ஜீவத்வமாகும். மனிதனுக்கு இந்த சம்சாரபந்தம் மனக்கற்பிதமன்றி உண்மையில் பவபந்தமில்லை.

மூவாசைகளில் விசேஷப்பற்றுள்ளவர்களாகிய தயையில்லாத கடின சித்தமுள்ளவர்கள் தான் சந்நியாசம் பெற்றுக் கொள்ள வேண்டும். மேற்படி குற்றங்களை, ஒழித்தவர்கள் துறக்க வேண்டுவதில்லை.

முன்னம் வாக்கை மனத்திலும், மனத்தை புத்தியிலும், அப்புத்தியை சாக்ஷியிலும், அடக்கி பரிபூரணமிருவி

கற்ப ப்ரஹ்மமாக* அறிந்துநில் பரமசாந்தி கிடைக்கும். சங்கல்ப விகல்பமற்று சுத்தமனதாக நாம் நஷ்டமடைய மாட்டோமென்று உள்ளழுந்தி நிச்சயித்தலே உண்மை லக்ஷியமாகும், எப்படிச் செய்தாலும் சரி. உன்னுள் அடங்கி அழுந்திக் கிடக்கும் ஆத்ம ஸ்வரூபத்தை உணர்.

பிராரப்தத்தின் நியதியை விலக்கக் கூடாதென்பது புருஷப் பிரயத்னமின்றி இருப்பவருக்கேயாம். பிராணுயாமாதிகளாலும் ஞானப்பியாசத்தாலும் பிராரப்தமானது ஜயிக்கப் படுகிறது. (திருவருட் பிரகாச வள்ளல்)

ஆன்மா இருட்டும் பிரகாசமுமல்லாத சுயஞ் ஜோதியாய் தன்மயமாய் தனக்குத்தானே பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. அது இப்படியென்றும் அப்படியென்றும் பாவித்தல் கூடாது. பாவிக்கும் நினைப்பே பந்தமாக முடியும், ஆதலின் ஞப்தி மாத்திரமாக சங்கற்ப விகற்ப மற்று பார

நீ ஆத்மானுபவம் அடைந்தால் பயம் என்பதையே அறியமாட்டாய். சரீரம் போய்விட்டதுபோல் மிருந்த அனுபவத்தில் தோன்றும். சரீரம்போனால் போகட்டுமே அதைப் பற்றிக்கொண்டு அவஸ்தைபடாதே. உன்னை நடத்துபவனைக்காண முயற்சிசெய். இரண்டொரு தடவைகளில் அபஜயமடைந்தால் என்ன மோசம், அச்சமும் குற்றமும் சரீரத்தின் கூறுகள் என்று உணர். ஒருதரம் உன் நிஜஸ்வரூபத்தை தரிசித்தால் போதுமானது. அந்தப்ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஒரு க்ஷணப் போதாவது அடைவாயா? அடைந்தால் "அதுதான் நீ" 'ஆய்விட்டாய் அதுதான் ஆத்மா, சிற்றணுவடிவு, கோடி சூர்யப் பிரகாசம் உடையது.

## ஜனகன் வாக்கியம்.

"இந்தப் பெரிதான சம்சாரமாகிய விருக்ஷத்திற்கு மனதொன்றே வேர் அந்த மனது சங்கற்ப ரூபமானதாற் சங்கற்ப நாசத்தாலே விருக்ஷம் இருந்த இடம் தெரியாமற் போய் விடும்."

---

வெண்பா.

சித்தஞ் சிறிதசையச் சம்சார நிச்சலமாச்
சித்தநிலை நிற்கமுத்தி சித்தமிது—சித்தந்
திரமாக்க வேவேண்டு மாதலினாற் றீமான்
பரமாம் பிரஞ்ஞையினாற் பார்.

---

நானென் றெழுமிட மேதென நாடவுண்
ணான்றலை சாயுமென் றுந்தீபற
ஞானவி சாரமி துந்தீபற.

---

உதித்த விடத்தி லொடுங்கி யிருந்த
லது கன்மம் பத்தியு முந்தீபற
வது யோக ஞானமு முந்தீபற

---

மனத்தி னுருவை மறவா துசாவ
மனமென வொன்றிலை யுந்தீபற
மார்க்கநே ரார்க்குமி துந்தீபற

(பகவான் ரமணமஹரிஷி)

## பிரகதாரண்ணியகோபநிஷத்.

சிருஷ்டிக்கு முந்தி இந்தப் பிரபஞ்சமானது பிரம்ம மாகவே யிருந்தது. அது தன்னை பிரம்மமாகவே அறிந் தது. அதினிடத்தி லிருந்து இந்தப் பிரபஞ்ச மெல்லா முண்டாயிற்று. அதை தேவதைகளிலும் ரிஷிகளிலும் மனி தர்களிலும் எவனெவ னறிந்தானோ அவன் அதாகவே ஆய் விட்டான். இவ்வாத்மாவை அறிந்த வாமதேவ ரிஷியானவர் "நான் மனுவானேன் சூரியனானேன்" என்றார் (சகலத் தையும் தன் ஆத்மாவாக பார்த்தா ரென்பது கருத்து) இக் காலத்திலும் இப்படி நான் பிரம்மமா யிருக்கிறே னென்று எவன் அறிகிறானோ அவன் இந்த சகலமுமாயாகிறான். அவ னுக்கு விரோதஞ் செய்ய தேவதைகளும் சக்தர்களல்ல. ஏனென்றால் அவர்களுக்கு அவன் ஆத்மாவாகிறதினாலே தான்.

## மைத்திரேயோபநிஷத்.

தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. அதிலிருக்கிற ஜீவனானவன் சிவனே. அஞ்ஞானமாகிற நிர் மாலியத்தைத் தள்ளி "அவன் நான்" என்கிற பாவனையி னாலே பூஜிக்கவேண்டியது. அபேதமாய்ப் பார்ப்பதுதான் ஞானம். மனது விஷயத்தை விட்டிருப்பதுதான் தியானம். சகல பாவனையையும் தள்ளி மிச்சமான தெதுவோ அதாக அந்த பிரம்மமாக ஆகக்கடவாய். பார்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிறவஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளி விட்டு விளங்குகிற சிரேஷ்டமான ஆத்மாவையே பஜி.

ஓம் தத் ஸத்.

# அரிய ஞான ரகஸ்யம்.

## விருத்தம்.

உலகுகண் ணாடியூர்நே ருறத்தனுளஞ்ஞா னத்தா
வெளியினிற் றயிற்க ளுப்போல் விளங்கிடக் கண்டு
நிலையுறு நேரந்தன்னை யொருவனு யெவனோர் காண்பன்
றலையுறு குருவாமந்த தக்ஷிணாமூர்த்தி போற்றி (பகவான்)

---

உலகமானது கண்ணாடியிற் காணப்படும் பட்டணம் போலத் தனக்குள்ளாகவே யிருந்தும் தன் அறியாமையால் நித்திரையாற் கனவுபோல வெளியிலிருப்பதாகப் பார்த்து (விழித்ததும் தன்னையே காண்பதுபோலத்) தன்னை யறியும்போது தானொருவனே யிருப்பதாக யார் பார்க்கின்றாரோ ஆதிகுருவான அந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

---

எங்கும் வியாபகமாயும், நடு நாயகமாயும், சர்வ சாக்ஷியாயும், சிதாகாச நடனனாயும், யாவருள்ளத்தும் திருவிளையாடல் புரிகின்றவனாயும் உள்ள ஸ்வயம் ப்ரகாச அதீத வஸ்து எதுவோ அதுவே கடவுள்.

இவ்வியாபக வஸ்துவை மனிதனானவன் "நான்யார்" என்று தனது ஸ்தூதல தேகத்தை நீக்கி, வாக்கு மனங் கடந்து, தத்துவத்திற் காப்பாற்றப்பட்டு, அதற்குள் அதி சூட்சுமமாக இலங்கும் உயிர் மனைக்குட் புகுந்து, சங்கற்ப மனக் கதவை நிருவிகற்ப மென்னுங் கோடரியாற் பிளந்து, உண்முகத்தில் தன்னை நடத்தியவன் இன்னானெனத் தெரிந்து, சிற்சபையிலுள்ள ரகஸ்ய நடனனை தரிசித்து,

தரிசித்தவன் எவனெனத் தெளிந்து, நாமரூபமற்று, நிருவாண நிலையாய்த் தோன்றும் இவ்வுண்மைப் பொருளைக் கண்டவர்களே தன்னையுணர்ந்தவர்களும், கடவுளைக் கண்டவர்களு மாவார்கள். இவர்களைத்தான் பரமஹம்ஸர்களென்றும், சித்தர்களென்றும், ஞானிகளென்றும், மஹரிஷிகளென்றும், கூறுவர்.

கல்கத்தா நகரில் ஸ்வாமி விவேகானந்தரின் குரு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சராக அவதாரம்செய்ததுபோல, நம் தமிழ் நாட்டிற்கு திருவண்ணாமலையில் பகவான் தனது பிரதிநிதியாக எனது குருநாதராகிய ஸ்ரீ ரமண மஹரிஷியவர்களை அனுப்பியிருக்கின்றார். இப்பெரியாரிடந்தான் ஆத்மவித்தையை அதாவது "ஞான ரகஸ்யத்தை" பல்லாயிரக் கணக்கில் ஜனங்கள் தினம் தினம் வந்து கேட்டுத் தெளிந்து அனுஷ்டித்து ஆத்மானந்தத்தைப் பெற்றார்கள், பெறுகிறார்கள், பெறப்போகின்றார்கள். அப்பெரிய ஆரிய ரமணவித்தையை அன்பர்கள் அனுபவமாய்க் கொள்ள வேண்டி இந்த ஞான ரகஸ்யத்தை எழுதத் துணிந்தனன்.

மனதால் சிந்திக்கக் கூடாததாயும், யுக்தியில் அடங்காததாயும், உண்மைப்பொருளை மறைத்துப் பிரபஞ்ச நாடகத்தை காட்டுவதாயும், அகடிதகடிதம் பண்ணுவதுமான மாயை என்னும் சக்தி உண்மைப் பொருளை யாச்ரயித்து புருஷர் சமுகத்தில் ஸ்திரீக்கு இன்பம் ஜெனித்தாற் போலும், காந்தத்தின் எதிரில் ஊசி யசைதல்போலும், இயங்கி ஜாலக்காரனைப்போல பிரபஞ்ச வேடிக்கையைக் காண்பித்து ஜீவர்கட்கு சுகம், துக்கம், லாபம், நஷ்டம், நன்மை, தீமை, அருந்தல், பொருந்தல், பிறத்தல், இறத்தல் முதலிய ஜாலமிருந்த உலகத்தைத் தோற்றுவிக்கின்றது. இப்படிச் செய்வது அதற்கொரு லீலையேயாகும். ஆதியில்

விதையிலிருந்து மரம் முளைத்ததா? அல்லது மரத்தி லிருந்து விதை உண்டாயிற்று? என்றால் அதைக் கண்டு பிடிக்க ஒருவராலுமாகாது, அதுபோல ஜீவன் எப்பொழுது உற்பத்தியானது? மாயை எப்பொழுது உற்பத்தியானது? என்றால், அது உண்டானகாலத்தை யாராலும் ஒருநாளும் சொல்லமுடியாது.

ஓரிடத்தில் இரண்டு போட்டோ படங்களிருந்தன அதில் நம்முடைய படம் ஒன்று, அன்னியனுடைய படம் ஒன்று. அன்னியனுடைய படத்தை ஒருவன் தீயில் கொளுத்தினன் அன்னியனுடைய படம் எரியும்போது நமக்கு அவ்வளவாக விசனம் வரவில்லை. நம்முடைய படத் தைப் பின்பு தீயில் கொளுத்தினன், நம்முடைய படம் எரியும்போது உண்டான விசனத்திற்கோ ஓர் அளவில்லை. ஏன்? என்னுடைய படம் என்ற அபிமானத்தால் துக்கம் வந்தது, ஆனதால் என்னுடையது என்பதை மனதிலிருந்து நீக்கிவிட்டால் துக்கம் வருவதற்கில்லை.

உலகத்தில் புருஷர்களால் ஸ்திரீகளும், ஸ்திரீகளால் புருஷர்களும் கெட்டுப்போகின்றனர். இதனுல் சில புருஷர் கள் ஸ்திரீகளின் முகத்தில் விழிக்காமல் தனியாக ஓர் மடங் கட்டிக்கொண்டு காலங்கழிக்கின்றனர். சில ஸ்திரீகள் புருஷர்கள் முகத்தில் விழிக்காமல் கன்னிகாமடத்தில் வசித் துக்கொண்டு ஆயுளைக் கழிக்கின்றனர். இப்படிச்செய்வதை விட வேறொரு சுலபமான உபாயமுண்டு. அதாவது ஒவ் வொரு ஸ்திரீயும் இதர புருஷர்களைப் பார்க்கும்போது தன்னில் வயது குறைந்தவர்களை தனது வயிற்றில் பிறந்த வர்கள்போலவும், தன்னில் வயது மூத்தோர்களை தன்னைப் பெற்ற தகப்பன்மார்களைப்போலவும், அம்மாதிரியே ஒவ் வொரு மனுஷியனும் தன்னில் வயதுகுறைந்த ஸ்திரீயை

தனது மகளைப்போலவும், தன்னில் வயது முதிர்ந்த ஸ்திரீயைப் பெற்ற தாயைப்போலவும், எண்ணிக்கொண்டால் ஏன் கெட்டுப்போவார்கள். (சுவாமி விவேகாநந்தர்)

சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் ஒருவன் பந்தமில்லாமலிருக்கலாம், கிழிந்த துணிகளை உடுத்திக்கொண்டு வரும் ஒருவன் பந்தத்தோடிருக்கலாம், பந்தமென்பது பார்வையில் தோற்றும் உருவத்தைப்பொறுத்தல்ல, மனதைப் பொறுத்தது.

காண்பனவெல்லாம் சொற்பனம்போலக் கண்டுகொண்டவன் ஞானி. மனதினால் எண்ணித் தானே வந்தது இவ்வுலகம் என்று தெளிந்ததே ஆறறிவு பெற்றதின் பயன்.

நாம் நமது மனம், பஞ்சபூதவுடல், உலகம், யாவும் ஜாலவினோத மாயாகாரியப் பொய்த்தோற்றமெனக் கண்டு தெளியவேண்டும், நீங்கள் சந்தேகிக்கலாம், தர்க்கிக்கலாம், எதைக்கொண்டு? மாயாகாரிய மனத்தைக்கொண்டு. ஊன்றிப் பார்த்தால் உண்மை விளங்கும். அதற்கு நன்றாக விளங்கும்படி திருஷ்டாந்தங்கூறுகிறேன். இப்பொழுது எப்படி இருக்கின்றோம்? எனது நிலம், எனது வீடு, எனது மனைவி, எனது மக்கள், எனது பொருள், என்று நாமே நமது பாசத்தால் கண்டுண்டிருக்கிறோம். ஐந்து வயதில் எப்படியிருந்தோம், எந்தப்பாசம் நம்மை கட்டுப்படுத்தியது? பந்தமற்ற, அறிவு விளங்கப்பெறாத, உருவமாக இருந்தோம், ஒருவயதில் ஒன்றுமறியாத குழந்தையாக இருந்தோம். தாயாருடைய பத்துமாத கருப்பத்தில், கண், காது, மூக்கு முதலிய அவயவங்களுடன் கூடி குழவி வடிவமானோம், ஆறுமாத கருப்பத்தில் உருவம் பதிந்தும் பதியாமலும் இருந்தோம். ஒருமாத கருப்பத்தில் பிண்ட வடிவ

மாக இருந்தோம். அதற்கு முன்னால் தாய் தகப்பன் சுரோணித சுக்கில வடிவமாக பனித்துளியிற் பாதி பண்டியிற் ஜலவடிவமாக இருந்தோம். அந்தப் பனித்துளியிற் பாதியாகவுள்ள ஜலவடிவம் இப்பொழுது எனது மனைவி, எனது மக்கள், எனது பொருள், என்று கூத்தாடுகின்றது. எப்படி யெனில்? மாயாகாரிய ஜாலக்காரன் மாங்கொட்டையை பூமியிற் புதைத்து ஜலம்விட்டு அதன்மேல் கூடையால்மூடி அடுத்த நிமிஷத்தில் கூடையைத்திறந்து மாம் பழமும், காயும், பிஞ்சும், பூவும், தளிரும் இலையுங்கூடிய செடியைக் காண்பிப்பதுபோல, ஜலவடிவத்தை மாதாவின் கருப்பமென்ற கூடையுள்வைத்து, கண், காது, மூக்கு, வாய், கை, கால் முதலிய அவயவங்கள் அமைத்து வேஷம் கட்டி வெளியில் தள்ளிவிட்டான் அந்தோ. கொடுமை! கொடுமை!! நம் உருவமே உண்மையையாகப் பொய்த் தோற்றமல்லவா? அதிகம் சொல்வானேன். இவ்வளவும் மனதினால் விளைந்த மாயாகாரிய தீச்செயல்.

இவ்விதமாக மயக்குகிறவன் மகேசுவரனே. அவன் சர்வலோகங்கட்கும் கர்த்தாவானபடியினால் அவனால் எல்லோரும் மோகிக்கப்பப்பட்டிருக்கின்றனர். சொற்ப வித்தையையுடைய ஒருவன் சிலபேரைமாத்திரம் தன் வித்தையினால் மயக்குகிறான், அப்படிப்பட்ட அற்ப வித்தையையுடைய ஜாலக்காரனையே ஜனங்களால் ஜயிக்க முடியவில்லையே; மகா மாயாவியான அவனை எப்படி வெல்லமுடியும்.

சொப்பனத்திலிருந்து விழித்துக் கொண்டவனும், இந்திர ஜாலக்காரனது உளவு தெரிந்தவர்களும், எவ்வாறு மயங்கமாட்டார்களோ, மயங்குவாரைப் பார்த்துப் பரிகாசமும் செய்வார்களோ, அவ்வாறே ஆத்மாவை அறிந்தவர்கள்

மாயையினின்று விடுபட்டவர்களாகி ஒருபோதும் விசனப்படமாட்டார்கள், மாயையில் நின்று விசனப்படு வோர்களைப் பார்த்து சிரித்துக்கொண்டு பரிகாசமும் செய்வார்கள்.

உலகத்தில் எவர்கட்கு அற்பமாயைக்குத் தகுந்த பிரதி வித்தை தெரியுமோ அவர்கள் அந்த மோகத்தி லிருந்தும் விடுபட்டு சுகமடைந்தவர்கள் அவர்கள்தான் ஞானிகள்.

எப்படி பாலர்கள் நிலைக்கண்ணாடியில் தோற்றும் பிரதி பிம்பத்தைமாத்திரம் பார்த்து திருப்தியடைந்து அதற் காதாரமான கண்ணாடியைக் கவனியாமல் களிக்கின்றார் களோ அதைப்போல மூடர்கள் உலகத்தை அறிந்திருந்தும் அதற்காதாரமான அறிவை அறிகிறதில்லை.

ஆத்மாவை அறிவது சுலபமும் கஷ்டமும்தான். அந்தர்முக திருஷ்டியையுடையவனுக்கு சுலபமும் பகிர்முக திருஷ்டியையுடையவனுக்கு துர்லபமும் ஆகும்.

ஒரே பிரபஞ்சத்தை ஞானிகள் இல்லவே இல்லை என்கிறார்கள். முமுட்சுக்கள் இன்னபடியென்று சொல்ல முடியாத அநிர்வசனீயம் என்கிறார்கள். அஞ்ஞானிகள் பிரபஞ்சத்தை சத்தியம் என்று நிச்சயம் செய்கிறார்கள்.

ஒரே சூரியனை பிறவிக்குருடன் இல்லை யென்கிறான். காமாலைக் கண்ணன் பல சூரியரென்கிறான். சுத்தமான கண்ணுள்ளவன் ஒரே சூரியன் என்கிறான்.

நமக்கும் பகவானுக்கும் வெகுதூரமிருப்பதாக அஞ் ஞானிகள் நினைக்கின்றார்கள். சிறிது தூரமிருக்கிறதாக பக்தர்கள் சொல்லுகின்றார்கள். யோகிகள் அவரவர் சரீரங்

களிலிருப்பதாகச் சொல்லுகின்றார்கள். ஞானிகள் தானே என்கின்றார்கள். எல்லாம் முடிந்தவர்கள் ஒன்றும் பேசாது தனக்கன்னியமாக ஒன்றும் இல்லையென்று ஆன்ம திருஷ்டியில் ஆழ்ந்து மஹாமௌனத்திலிருந்து விடுகிறார்கள்.

மூடன் கடஜலத்தில் தோன்றும் சூரியப் பிரதிபிம்பத்தை சூரியனென்பன். விவேகி கடம்ஜலம் பிரதிபிம்பம் இவற்றைவிட்டு ஆகாசத்தில் ஏகமாய்த் தாக்கற்று இம்மூன்றையும் பிரகாசிப்பித்து சுயம்பிரகாசித்துக்கொண்டிருக்கும் சூரியனை உள்ளபடி அறிவான். அதுபோல அஞ்ஞானமுள்ள மூடன் பிராந்தியால் தேகத்தின்கண் புத்தி உபாதியால் ஆத்மபிரதிபிம்ப ஜீவனை அஹமென்றெண்ணுவான். விவேக ஞானமுள்ளவனோ தேகம், புத்தி, சிதாபாசம், இவற்றைவிட்டு ஹிருதய ஆகாசத்தில் ஏகமாய் இவையாவும் அறிந்துகொண்டு, நித்தியமாய் சர்வத்திலும் மறைந்து, அச்சர்வத்தையும் பிரகாசிப்பித்து, சூட்சுமமாய், வியாபகமாய், உள்வெளியின்றி, சுயம்பிரகாசித்துக்கொண்டிருக்கும் அகண்ட ஞான சொரூபமான தன் நிஜஸ்வரூப ஆத்மாவை உள்ளபடி அறிவான்.

எப்பொழுதும் உள்ளபொருளை இரவில் ஒருவன் கை வெளிச்சத்தைக்கொண்டு கண்டு தெளிவடைவதுபோல, ஞானப்யாசி நிருவிகற்ப மனதென்னும் தீபத்தைக்கொண்டு மாயாப் பிராந்தி யென்ற உலக இருட்டைப்போக்கி முக்காலத்திலுமுள்ள வஸ்து தானெனக்கண்டு தெளிவடைகிறான்.

தீபத்தைக்கொண்டு இருளைத்தேடினால் எப்படி கிடைக்காதோ அதுபோல் ஞானிக்கு முன் மாயையின் தொழிற் செல்லாது பறந்துபோய்விடும், உண்மையில் உண்மையைக் கண்டவர்கள் எதற்கும் கலங்கார்கள். அஞ்சாத தீரரா

யிருப்பர். மித்தையாகிய பிரபஞ்சத்தைக்கண்டு கொஞ்சமும் பிரமிக்கிறதில்லை. சோகிக்கிறதுமில்லை. மோகிக்கிறதுமில்லை. இப்படிப்பட்ட ஞானியின் தரிசனமே, மும்மூர்த்திகளின் தரிசனத்திற்கு மேலான தரிசனம்.

ஒரே சூரியன் ஜலமுள்ள பலபாத்திரங்களிலும் தோற்றுவதுபோல, ஒரே பரம்பொருள் பலஜீவர்களின் அந்தக்கரணங்களிலும் தோற்றுகின்றது, எந்த அந்தக் கரணத்திலுள்ள அஞ்ஞானம் ஞானத்தால் நிவிருத்தியாகின்றதோ அந்த அந்தக் கரணத்துடன்கூடிய ஜீவன் முத்தனாகிறான். இந்தப் பரம்பொருளை திட விசாரணையால் அறியலாம். அதாவது "நானார்" என்று விசாரித்தல். எப்படி யெனில்? இவ்வுடலுமல்ல, விடும் மூச்சுமல்ல, நினைக்கும் நினைப்புமல்ல, இவற்றையெல்லாம் தாண்டி " நான் நான் " என்று தானாய்ப்பேசி ஒளிரும் தனிப்பொருளாம். அதுவே தானாய் முடியும். (பகவான் ரமண மஹரிஷி)

தாமரை இலையில்தங்கும் நீர்த்துளிபோலவும், புளியம் பழமும் அதன் ஓடுபோலவும், கடைந்தெடுத்த வெண்ணை மோரில் மிதப்பதுபோலவும், ஞானிகள் உலகத்தில் பற்றற்றுக் கடந்துபோன விஷயங்களைக் கருதாமலும், நாளை நடக்கவேண்டியதைப்பற்றிச் சிந்திக்காமலும், எப்படிப் பட்ட அதிசயங்கள் தோன்றினும் தனக்கன்னியமாக ஒன்றில்லையெனத் தெளிந்து, நல்லது கெட்டது ஒன்றும் நினையாமல், தன் முன்னே நடப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பார்.

சிலர் வைகுண்டம், கைலாசம், பிரம்மலோகம் முதலிய இவற்றை அடைவதுதான் மோக்ஷமென்கிறார்கள். அது வேத விரோதமும் அஞ்ஞானத் தன்மையுமாகும். ஆகாயத்திலாவது, பின் பக்கத்திலாவது, பாதாளத்தி

லாவது, பூதலத்திலாவது, மோக்ஷம் என்பது இல்லை. சங்கற்பத்தை ஒழிப்பதனால் சுத்தமான சொரூபத்தின் உணர்வே மோக்ஷம்.

வேதாந்திகள் பாப புண்ணிய கருமங்கள் நமக்கில்லை நாம் சர்வ சாக்ஷி என்கிறார்களே அஃதென்னவெனில், தேக வாசனை, இந்திரியவாசனை, கரணவாசனை, பிராணவாயுவின் செயற்கையாலுண்டாகும் மாறுபாடுகளில் சலிப்பற்று, ஆகாரம், நித்திரை, பயம் முதலியவைகளில் சலித்தல் சோர்தல், திடுக்கிடல், இல்லாமல் நிவாத தீபம்போல் விளங்கும் ஜீவன்முக்தர்கள் சமுகத்தில் பாவகிருத்தியங்கள் நடவாது புண்ணிய கருமங்களும் பிரயோஜனம்பற்றிச் செய்யார்கள் பொன்னும் ஓடும் சரியாகக் காண்பார்கள், அத்தன்மையுடைய நித்திய முக்த சுத்த ஞான தேகிகட்கு பாவபுண்ணியமில்லை. அவர்கள் சொல்லாமலே நமக்கே தெரியும். (அருட்பெருஞ் சித்தர்)

நெல்லை ஒருமுறை வருத்த மாத்திரத்தில் எப்படி முளைக்கு உபயோகமில்லையோ அதைப்போல ஒருமுறை ஜீவனை தபஸாகிய நெருப்பினால் வருத்தால் அவித்தை நாச மான பிறகு (சொரூப தெரிசனம் சித்தியானபின்பு) மீண்டும் ஜன்மாதியில்லை. பிரம்மாகார விருத்தி ஜீவன் முக்தியின் விலக்ஷணானந்தத்தின் பொருட்டு விடாதிருப் பதால் பிரம்மாகார விருத்தியின் ஆவிர்த்தியைச் செய்ய வேண்டுமென்ற நியமமில்லை. வித்துவானை பிரேரேபிக்கும் பிரமாணவடிவ விதியுமில்லை. அவர்கள் விரும்பினும், விருப்பாவிடினும், முக்தர்களே அக்கினியானது தெரிந்து தொடினும், தெரியாமற் தொடினும் சுடுமேயன்றி சும்மா இராது. அதுபோல பிரம்ம நிச்சயம் பெற்ற ஞானிகள் மீண்டும் பிறப்பதே இல்லை. இதில் சிறிதும் சந்தேகமில்லை.

அத்யயனம் செய்யப்பட்ட புருஷன் அத்யயனம் செய்யும்போதும், செய்யாதபோதும், அச்சக்தி அவனிடம் லீனப்பட்டிருப்பதுபோல, தேக தருமத்தை அனுசரித்து மரணகாலத்தில் ஐயோ, அப்பா, என்றலறிக்கொண்டு சன்னிபாத ஜ்வரங்களினால் பிராணனை விட்டபோதிலும், ஓம் என்ற பிரணவ அனுசந்தானத்துடன் பிரம்மநிஷ்டா பரனாய் பிராணன் லீனமானாலும், முக்தன் முக்தனே.

கர்மமோ ஆரம்பம், ஞானமோ முடிவு, கர்மமோ பகிர் முகவேலை, ஞானமோ அந்தர்முகவேலை, கர்மமோ பேதம், ஞானமோ அபேதம், கர்மமோ துக்கம், ஞானமோ சுகம், கர்மமோ கண்டம், ஞானமோ அகண்டம்.

உண்மை ஞானம் வரும்வரையில், சருவ பந்தங்களை யும் கடக்கும்வரையில், தன்னுடைய யதார்த்தநிலை தெரி யும் வரையில், எங்கும் ஒரே சமபாவனை வரும்வரையில், இருதயத்திலுள்ள துக்கம் நீங்கும்வரையில், இருதயம் சுத்தமாகும் வரையில், சொரூப நாட்டத்தை விடக்கூடாது.

கட்டிற் கடங்காது ஓடித்திரியும் மாட்டைப் பிடித்துக் கட்டுமிடத்தில் தினம் கட்டிவந்தால் நாளா வட்டத்தில் பழக்கத்தினால் கட்டுமிடம் வந்து படுத்துறங்குவதுபோல அனுபவத்தில் மனம் தானாகவே வந்தடங்கும்.

வீட்டிற்குள் இருப்பவன் வெளியில் இருப்பவனைப் பார்க்கவேண்டுமாயின் ஜன்னல் கதவுகளைத் திறந்துபார்க்க வேண்டியதவசியம். ஆனால் வீட்டிற்குள்ளிருப்பவன் தன் னைப் பார்ப்பதற்கு யாதொரு உதவியும் வேண்டியதில்லை. அதைப்போல தனது ஆத்மாவைக்காண உதவி ஒன்றும் வேண்டியதில்லை.

நாடக மேடையில் ஸ்திரீவேஷம் தரித்து நடிக்கின்றவனை ஸ்திரீ என்றறிந்தவர்கள் மயங்குகின்றார்கள், அவனைப் புருஷன் என்று உணர்ந்தவர்கள் மயங்கார்கள், அதைப்போல பிரபஞ்ச விஷயங்களின் உண்மையை உணர்ந்த ஞானிகளை பிரபஞ்ச விஷயாதிகள் பாதிக்காது, அஞ்ஞானிகளை பாதிக்கவே செய்யும்.

பிராம்மணன் தோட்டி வேடம்பூண்டு ஆடினாலும் பிராம்மணன் பிராம்மணனே. நான் பிராம்மணன் என்று அவன் நினைத்தாலும் நினைக்காவிட்டாலும் எப்படி பிராம்மணனே யாவனோ, அதைப்போல தன்னையுணர்ந்த ஞானியும் உலக விவகாரங்களில் மிக்க உழன்றாலும், சொரூப தியானம் இருந்தாலும், இல்லாவிட்டாலும், அவன் ஞானியே. ஜீவன் முக்தனே.

நமது மனமானது ஒவ்வொரு நிமிஷமும் உலகத்தை நோக்கியே பகிர்முகத்தில் சென்றுகொண்டிருக்குமானால் உண்மையை உணரவேமுடியாது. நமது அலையும் மனத்தை ஆண்டவனிடம் ஒப்புவித்து உண்முகத்தில் செலுத்தினால் உண்மையை உணரலாம். வலது பக்கத்தில் காரணமாயுள்ள இருதயத்தை வெட்டவெளியாகப் பார்த்து சித்துப் பொருளில் தெளிந்தவனே மஹாசித்தனும் கடவுளுமாவான். மனம் தெளியத் தெளிய நமக்குத் தெரியாததும் அனுபவமில்லாததுமான பல பல அரிய ரகஸ்யத் தோற்றங்களும், சாஸ்திர உண்மைகளும், வலுவிலேயே தோற்றும். இவ்வனுபவமுள்ளவன் மனது சங்கற்ப விகற்பமற்றிருப்பதால் சகஜ நிஷ்டையுடன்கூடி யாவருடனும் சகஜமாகவே பேசியும், உண்டும், உடுத்தும், உறங்கியும், செத்தாரைப்போலவே திரிவான். இவ்வனுபவமுள்ள ஞானிக்கு பிராரப்தங்கிடையாதென்னில் இதைவிட வேறென்ன வேண்டும்?

இப்படிச் சொன்னால் எப்படி பிராரப்தங்கூட இல்லையென்று சந்தேகம் உதிக்கலாம். அதற்கு நன்றாக விளங்கும்படி திருஷ்டாந்தங் கூறுகிறேன். ஜீவன் முக்தன் ஞான சம காலத்திலேயே அஞ்ஞானசம்பந்தமானசஞ்சிதம்,ப்ராரப்தம், ஆகாம்யம் மூன்றும் ஒழிந்து ஜீவன்முக்தி விதேகமுக்தி இவ்விரண்டையும் அடையப்பெற்றானென்பது சாஸ்திர சம்மதம்.

மழை நன்றாகப் பெய்யும்போது இரண்டு மனிதர்கள் மழையில் நடக்கின்றார்கள், அதில் ஒருவன் பலமான குடைபிடித்துக்கொண்டு நடக்கிறான், ஒருவன் குடையின்றி நடக்கிறான், ஆக இரண்டுபேர்கட்கும் மழை பெய்தேதீரும். ஆனால் குடையிருக்கிறவன்மீது மழைபடுகிறதில்லை, மழை குடையில் வீழ்ந்துபோகிறது, குடையில்லாதவனுக்கு மேலே விழுகிறது:—இதுபோல இரண்டு மனிதர்கள் உலக சுக துக்கமென்னும் மழையில் நடக்கிறார்கள். அதில் ஒருவன் சுவானுபவமென்னும் குடை பிடித்துக்கொண்டு நடக்கிறான், ஆதலால் அவன்மீது பிராரப்தமழை விழுகிறதில்லை. ஆனதால் பிராரப்தமில்லையென்றே சொல்லவேண்டும். பார்ப்பவருக்கு மழைபெய்கிறதுபோலவே தோற்றும். ஆனால் அவன்மேலே படுகிறதில்லை, குடையுள்ளவன் ஞானி. குடையில்லாதவன் அஞ்ஞானி. ஞானி பிராரப்தத்திற்கும், அஞ்ஞானி பிராரப்தத்திற்கும் பேதமிதுவாம்.

இல்லற ஞானியும் பிராரப்தானுசாரமாக நிகழும் தனது குடும்ப காரியங்களில் மனதிற் சலனமற்றுத் தாக்கற்றுப் பலகாரியங்கள் செய்தல்கூடும். எப்படியெனில் தாலுகா ஆபீசில் பொக்கிஷதாரியாகவுள்ளவன் (கஜானா சிரஸ்தார்.)

நாள்முழுவதும் கவர்ன்மெண்ட் பணத்தை பொறுப்பு சிரத்தையுடன் கையாளுவதாகப் பிறர் கண்ணுக்குத்தோன் றினும், பொக்கிஷதாரி இந்தப் பணத்திற்கும் நமக்கும் சம்பந்தமில்லையென்று பற்றற்று எப்படி வியவஹாரத்தில் ஈடுபட்டிருப்பாரோ அம்மாதிரியே இல்லற ஞானியு மிருப்பான்.

இப்படி சொல்லப்பட்ட ஞானிகளில், சிலர் சாஸ் திரங்களில் கூறியபடி அந்தந்தக் காலங்களில் கருமங்களைச் செய்துக்கொண்டிருப்பார்கள். சிலர் ஆத்ம விசாரணையி லிருப்பார்கள். சிலர் இந்திரியங்களை அடக்கி சமாதியிலிருப் பார்கள். சிலர் தங்கள் சீடர்கட்கு ஸ்பஷ்டமாக விளங்கும் படி உபதேசம் செய்துகொண்டிருப்பார்கள். சிலர் நீதி தவறாமல் சிம்மாசனத்தில் வீற்றிருந்து அரசாண்டு கொண் டிருப்பார்கள். சிலர் சாஸ்திரங்கள் செய்துகொண்டிருப் பார்கள். சிலர் வியாபாரம் செய்துகொண்டிருப்பார்கள். சிலர் குடும்பத்திலிருந்துகொண்டிருப்பார்கள். சிலர் பித்தர் களைப்போலத் திரிந்துகொண்டிருப்பார்கள், ஆகவே ஞானி இன்னநிலைமையிலிருக்கவேண்டுமென்ற நியதி இல்லை. இதற் கத்தாக்ஷி வசிஷ்டர் புரோகிதராக விளங்கினார். கிருஷ்ணர் போகத்திலிருந்தார், சுகர் போகத் தியாகியானார், ஜனகர் ராமர் ராஜ்யபாரம் செய்தார்கள், குசேலர் 27 பிள்ளை களுடன் குடும்பத்திலிருந்தார். திருவள்ளுவர் மனைவியுடன் குடும்பத்திலிருந்து நெய்தற்றொழில் செய்தார், இப்படி ஞானிகள் புறத்தொழில்களாகிய பிராரப்தங்கள் பலவென் றாலும் முத்தியும் ஞானமும் சமமே.

உலர்ந்த அரசஞ்சருகுகள் காற்றில் அங்கும் இங்கும் ஓடுவதுபோல எஞ்சிய பிராரப்தத்தால் ஞானிகள் போவ தும் வருவதும்போலத் தென்படுகிறார்கள். அவனை

விவகாரங்கட்கு அவனுடைய பிராரப்தமே காரணம் இவன் செயல் ஒன்றுமில்லை.

மரத்தின் பழுத்த இலை, நதி, வாய்க்கால், வீதி, சிவாலயம் முதலிய எங்கு விழுந்தாலும் சுபா சுபம் மரத்திற் கில்லாததுபோல முன்னமே ஞானுக்கினியால் தகிக்கப் பட்ட ஞானியின் தேகம் எவ்விடத்தில் விழுந்தாலும் அவனுக்குக் கெடுதல் ஒன்றுமில்லை.

ஈசனுக்கு திருவருள் என்றதோர் பெயருண்டு ஏனெனில் நிரந்தரம் அனுக்ரஹத்தையே சொரூபமாக வுடைய ஈச்வரனுக்கு அனுக்ரஹம் என்பதோர் வேலையில்லை. ஆகவே அனுக்ரஹத்திற்கென ஓர் காலமுமில்லை, எப்பொழுதும் அனுக்ரஹம் பண்ணிக்கொண்டுதானிருக்கிறார். (பகவான் ரமண மஹரிஷி)

சதா சந்தோஷத்தோடு எதிரிட்ட ஜீவர்கட்கும் திருப்தியாக சந்தோஷிப்பித்து தான் அதிசயமின்றி நிற்றல் ஆனந்தம். (அருட்பெருஞ் சித்தர்.)

இவன் மஹரிஷியினிடம் இருக்கும்போது ஓர் பெரியார் வந்து பகவான் ரமணன் சந்நிதானத்தில் நமஸ்கரித்து தனக்குள்ள குறைபாடுகளை அதாவது தன் மனம் படுத்தும் பாட்டையும், சுக துக்க கஷ்ட நஷ்ட துன்பங்களையும் எடுத்துக்கூறி, மனம் அடங்க ஓர் உபாயங் கூற வேண்டுமென்று விண்ணப்பித்து நின்றார். அதற்கு பகவான் ரமண மஹரிஷியவர்கள் கூறியதாவது "**மனம் எந்த இடத்தில் உதிக்கின்றதோ அந்த இடத்தைப்பார்த்து நிற்க அடங்கிவிடும்**" இதுதான் சுலபமானமுறை என்று தனது ஆத்ம அனுபவத்தை எடுத்துக்கூறினார்.

ஒருவரை ஆகாசம் என்றால் என்னவென்று கேட்போமானால், அவர் ஆகாசம என்றால் வெறுமையான வெளி என்பார். அதுசரியன்று. பிரஹ்ம வித்தையை உபதேசித்த நம் பெரியோர்கள் வெறுமையான வெளியென்று ஆகாசத்தை எண்ணினரில்லை; ஆனால் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் பூர்ணவஸ்து என்றே கருதினார்கள். ஆகவே ஆகாசம் என்பது எல்லாவற்றிற்கும் நிலயம். அதில் இல்லாத ஒரு மஹிமையும் காட்சியில் இல்லை. பிருஹதாரண்யக் உபநிஷத்தில் நான்காவது அத்யாயத்தில் ஜநக மஹாராஜாவானவர் தான் உபதேசம் பெற்ற அநேகங்களை பிரஹ்ம வடிவுகள் என்று சொல்ல, அவைகளுக்கெல்லாம் நிலயம் யாது என்று யாக்ஞவல்க்ய மஹரிஷி கேட்டார். ஜநகர் தனக்குத் தெரியாதென்று சொன்னார். அவைகளுக்கெல்லாம் ஆகாசமே நிலயம் என்று யாக்ஞவல்க்யர் சொன்னார்.

## விருத்தம்.

ஞானனந்த மெங்ஙனென ஞானியொருவ ரெனைக்கேட்க
வூனனந்த முணருமிட வுளவையறிந்து சொல்வீரேற்
றேனனந்தம் பொழிநிலையைத் தெரிந்தவரையிற் [சொல்வனென்றே
னனரென்று நிலைகண்டார் நகைத்து மௌனமானாரே.

(பின்னலூர் இராமலிங்கம்)

---

பிறர் மெச்சுவதற்கு தெய்வத்தை பூஜை செய்தால் அது சிறிதும் பயன்படாது.

ஜனமற்ற விடங்களுக்கு அப்போதப்போது போவதும் பகவானைக் குறித்து சந்தோஷமாகப் பாடுவதும் தியானிப்பதுமா யிருக்கவேண்டும்.

மனச் சுத்தி கிடைத்து பகவானை நினைக்கிறவனுக்குத் தெய்வம் தப்பாமல் கருணை செய்யும்.

பக்தியுடையவனுக்கு எப்போதாவது பகவானுடைய உண்மை வடிவம் காணப்படாமற் போகாது.

கடவுளிடத்து உண்மையான உறுதியான பக்தி விஸ்வாஸங்களிருக்குமாயின் எவ்வித ஆபத்தாயினும் அது நீங்கிவிடும்.

அஞ்ஞானத்தோடு நூறுவருஷம் வாழ்ந்திருப்பதைவிட, ஞானத்தோடு ஒருநாளாகிலும் வாழ்வது நலம்.

சுடுகாட்டு அக்நி பிணங்களை மாத்திரமே கொளுத்தும்.மனக்கவலை பிழைத்திருக்கும் மனுஷ்யனையுங் கொளுத்தும்.

பொறுமை யுள்ளவனே பலமுள்ளவன்.

மேற்கூறையில்லாத வீட்டில் மழை யெப்படிப் பெய்யுமோ, அப்படி ஜாக்கிரதை யில்லாத மனத்தே கெட்டகுணங்கள் புகும்.

அநேக பூமிகளை வென்று அரசாட்சி செய்பவன் வீரன் ஆவான். ஆனல் தன்னிந்திரியங்களை மட்டும் வென்றவன் பிரம்மாண்ட முழுவதையும் வென்ற வீரனுவான்.

இந்திரியங்களையும் மனத்தையும் பழக்கத்தால் வெல்லவேண்டும்; வென்றுவிட்டால் அதன் பயனோ இணையற்றது.

டம்பவேஷங்களைத் தரிக்காதே.

மௌனம் கலகமற்றது. பாபத்தை போக்குவது, லோபத்தைச் சங்கரிப்பது.

பாலர்களுக்குச் சம்சாரசுகம் ருசிக்காததுபோல்,பிரபஞ்சசுகத்தில் ரமிப்பவர்களுக்குப் பிரம்மானந்தம் ருசிக்காது.

இப்பிறவிலேயே முத்தி கிடைக்குமாறு மிக்க பிரயாசையைச் செய்யுங்கள். (பெரியார்மொழி.)

ஓம் தத் ஸத்:

ஓம்

தத் ஸத்:

# ஞானமுண்டாக்கும்

# அற்புதக் கதைகள்



சென்னை கார்ப்பொரேஷனுக்கு சமீபத்திலுள்ள (My Ladys Garden) முகப்பில் மனதைக்கவரத்தக்க விசாலமான தோட்டத்தில், அநேக விதமான பெஞ்சுகளும், உல்லாசமான மேடைகளும், எலக்ட்ரிக் விளக்கு ஸ்தம்பங்களும், அழகிய நானாவிதமான புஷ்பங்களடர்ந்த குரோட்டன்ஸ் செடிகளும், முக்கோணம் நாற்கோணம் ஐங்கோணம் அறுகோணம் வட்டம் பிறைவட்டம் முதலிய மாதிரி, பாகம் பாகமாக செடிகளுற்பத்தி செய்து கத்தரித்து சிங்காரித்தும், சிங்காரவனத்தின் மத்தியில் உயரிய மேடையில் கந்தர்வ விக்கிரகமமைத்து அதன் கைகளில் (வாட்டர் ஸ்ப்ரே) ஜலம் பீறிட்டு மேலே எழும்புவதும், சுற்றிச்சுற்றிச் சக்கரவாணம்போலச் சுழற்றியடிக்கும் கோலாகலத்தைப் பார்த்தால் அதிகம்சொல்வானேன். கண்காட்சியையும் மன வமைதியையும் பெற மகா தபஸ்விகளும் தங்கிவிடுவார்களென்றால், அறிவிலியாகிய என்னைப் பற்றி அதிகம் சொல்லவேண்டுவதில்லை. மாலை நான்கு மணிக்கு அவ்விடத்தைச் சுற்றி உலாவிவரும்போது ஓர் பெஞ்சில் அதிரூபலாவண்ய யௌவன லேடி ஒருவள் வீற்றிருந்தாள். கண்டதும் மனம் மயக்கமடைந்துவிட்டது. அந்த சுந்தராங்கியின் கயல் விழியைக் கண்டவுடன் மயங்கி இவள் நேத்திரத்தினாலே ஒரு தரம் கடாக்ஷம் பண்ணி நம்மை

தன்னியனுகப் பண்ணுவாளா? என்று எண்ணினேன். இன்னம் ஒருதரம் பாரோமா வென்றும், திருஷ்டிக்கு மிகுந்த பிரியமா யிருக்கின்ற இவள் ஒருதரமாகிலும் நம்மைப் பார்க்கமாட்டாளா? நாம் இப் பெண்ணணங்கின் சுகத்தை யடையும் படியான சுகிருதம் பண்ணியிருப்போமா? எனவும் எண்ணினேன். அப்புறம் செல்வதற்கில்லை. ஓர் அடிகூட எடுத்து வைக்கமுடியவில்லை. மயங்கினேன் தயங்கினேன், உள்ளம் குழப்பமடைந்து அச்சம் ஒரு பக்கம் தடுக்க, ஆவல் ஒரு பக்க மிழுக்க, சற்று மனதை தைரியம் செய்துகொண்டு, அந்த லேடி உட்கார்ந்திருந்த அப் பெஞ்சின் மற்ரோர் பாகத்தில் உட்கார்ந்தேன். தாங்கள் எந்தவூர், பெயர், தங்கியிருக்கும் இடம் எது வென்று இங்கிலீஷில் பேசினேன். தானிருப்பது பர்மா தேசமென்றும், பெயர் லோகசுந்தரி யென்றும், எக்மூர் கின்னெட் லேனிலுள்ள மோகன விலாச பங்களாவி லிருப்பதாகவும் கூறினுள். காமக்குறிப்புள்ள பார்வை வசனங்களிலிருந்து எனது விருப்பத்தை எடுத்துக் கூறினேன். அதற்கு அம் மாது ஓர் இரவு தன்னுடனிருக்க வேண்டுமானல் ரூ. 250 தரவேண்டுமென்று சொன்னுள். எனக்குப் பணம் லட்சிய மில்லை ஆகையால் ரூ. 250 நோட்டாக அவளிடம் தந்து மேல் விலாசம் தெரிந்து சாவதானமாக இருவரும் பேசிக் கொண்டிருந்தோம். இந்த சமயத்தில் பூம்பூம் என்று மோட்டார் சத்தங்கேட்டது, அவள் சினிமா பார்க்கக் குறிப்பிட்டிருந்தபடி டிரைவர் மோட்டாரைக்கொண்டுவந்து நிறுத்தினுன். என் முன்னிருந்த மின்னுள் தனது இடது கையின் மணிக்கட்டில் அணிந்துள்ள ரிஸ்ட்டு வாட்ச்சைப் பார்த்தாள், மணி ஆறு, அலோ மைடியர், சினிமாகாக்ஷி **(TRUTH OF SOUL) ஆன்மாவின் உண்மைதத்துவம்.** ஆரம்பமாகு மென்றும் விசேஷமான இந்த சினிமாபடக்

காக்ஷியைத்தாங்களும் கட்டாயம் பார்க்கவேண்டு மென்றும், என்னை துரிதப் படுத்த மனமொப்பி சம்மதித்தேன். இருவரும் காரில் அமர்ந்தோம். கார் புறப்பட்டு ஜெகன்மோஹன ஞானவிலாச சினிமா போய் நின்றது. இருவரும் 10. ரூ. ப்ஸ்ட் கிளாஸ் டிக்கெட்பெற்று உட்சென்றோம். கீழரங்கத்தில் ஜனக்கூட்டம் அதிகம். ஜனநெருக்கம் அதிக மில்லாத மேலரங்கத்தில் காம்பினேஷன் சோபாவில் இருவரும் அமர்ந்தோம்.

பட்டப் பகலையும் தோற்கச் செய்யும் எலக்ட்ரிக் பல்ப் கொத்து வெளிச்சங்களும், கலர் பல்ப் வெளிச்சங்களும், காணக் கண்கள் கூசின. கொட்டகை நிறைந்த எலக்ட்ரிக் விசிறிகள் கிறுகிறென்று சுழன்று மிக்க சுகத்தைத் தந்து கொண்டிருந்தன. கட்டட அமைப்பும் அங்கு எங்கும் எழிலாய்க் கண்ணைக் கவர்ந்த சிங்காரிப்பை நேரில் அனுபவித்தவர்கட்கன்றோ தெரியும். இங்கு விவரிப்பதெனின் மிகையாகும். மேற்செல்லுகிறேன். தேவசபையென மனதை ரமிக்கச் செய்தது இப்படியிருக்கும்போது திடீரென்று ஓர் இருள் கப்பியது. எதிர்பாராத விதமாக இவ்விருளைக் கண்டதும் மனம் பீதியடைந்தது. தேவசபையைக் காணோம். சற்று நேரத்திற்கெல்லாம், சதுரமான வெண்மைப்படுதாவில் கண்கள் கூசும்படி வெண்மை ஒளி தோன்றிற்று. இவ்வொளி எங்கிருந்து வருகிறதென அறியவில்லை. ஆங்கு சீனில் கண்ட இங்கிலீஷ்பதங்களைத் தமிழில் வரைந்து விடுகிறேன் வாசகர்கள் உச்சரிப்பு ஒலிமாறும் விஷயம் குற்றம்பாராமல் மேல் நோக்கிச் செல்லுவார்களென நம்புகிறேன்.

---

# மஹாத்மா அஸோஸியேஷன்
## பிலிம் கம்பெனி திருச்சுழி

---

## தி இண்டியன் செல்ப் கவர்ண்மெண்ட் சினிமா கார்ப்பரேஷன்

1879ஞ டிஸம்பர்மீ 30உ ஆக்ட்டுபடி இது ரிஜிஸ்டர் செய்யப்பட்டது

---

## " ஆத்மாவின் உண்மை தத்துவம் "

கதை தயாரித்தவர்—பின்னலூர் இராமலிங்கம்

பிலிம் எடுத்தவர்—திருவேங்கடரமணன்

பிலிம் டெவெலப்பர்—வடலூர் வள்ளலார்

ஆக்டர்ஸ்—தக்ஷிணாமூர்த்தி, ஜனகாதி நால்வர்.

புரோப்ரைட்டர்ஸ் } மாணிக்கவாசகன், சிவானந்தன்

ஆப்பரேட்டர்—நிரஞ்சனானந்தன்

---

# PART 1.

காதிற் கவச குண்டலமும், மேனியில் திருவெண்ணீறு ருத்திராக்ஷமும் அணிந்து, சடைமுடி தரித்து, கையில் ஜபமாலை புஸ்தகத்துடன் நான்கு பெரியார்கள் வந்து தோன்றினர். இவர்கள் யாரையோ எதையோ குறிப்பிட்டுத் தேடுவதுபோல் தோன்றியது.

பழமும், காயும், இலையும், தளிரும் நிறைந்த இருண்ட காடுபோலுள்ள ஓர் பெரிய ஆலவிருக்ஷம் கணக்கிலா விழுது

களுடன்கூடித் தோன்றிற்று. அவ்விருக்ஷத்தினடியிலுள்ள உயரிய மேடையில் ஓர் பெரியார் மிக்க சாவதானமாக அசைவற்று அமர்ந்திருந்தார்.

மேற்கண்ட நால்வரும் தேடிய பெரியாரை காணப் பெற்று சந்தோஷமடைந்து நமஸ்கரித்து உட்கார்ந்து ஏதோ சில விஷயம் கேட்டுக்கொண்டிருந்தனர். பின்பு அப்பெரியார் **சொல்லாமற் சொல்லி இருந்ததனை இருந்தபடி இருந்து சின்முத்திரையால் காட்டிக்கொண்டிருந்தார்.** குரு காட்டியபடி அந்நால்வரும் பாராமல் பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

**குறிப்பு:—"சிவஞான போதம்" உணர்த்தியது.**

# PART 2.

ஓர் பெரிய ராஜ தர்ப்பார் தோன்றியது. அதில் ஓர் ராஜன் மந்திரியுடன் சிம்மாசனத்தில் தோன்றினன். இருவரும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியாக ராஜ்யத்திற்கு அரேபியன் குதிரைகள் தேவை யென்று அவைகளை வாங்கிவரச் சொல்லி லட்சம் பவுன் நிறைந்த பைகளை மந்திரியிடம் ஒப்புவித்தான்.

குதிரைகள் வாங்கப் பணப்பையுடன் சென்ற மந்திரி வந்த வேலையை மறந்து சொந்தவேலையிற் பிரவேசித்தான். அதாவது ஓர் பெரிய கோயில் ஒன்று கட்டி, அதற்குக் கும்பாபிஷேகம் முதலியன செய்து, பணத்தைச் செல வழித்துக் களித்திருந்தான்.

ராஜன் குறிப்பிட்டபடி காலக்கிரமத்தில் அரேபியன் குதிரைகள் வராததைக் கண்டு, ராஜன் தேடிச்சென்று,

மந்திரியைக்கண்டு பிடித்து, குதிரைகள் எங்கே என்று கேட்டான். மந்திரி சற்றுநேரம் மிரள மிரள விழித்து ஏதேதோ யோசனைகள் செய்து **(தனது சங்கற்பத்தைக் கடவுளிடம் ஒப்புவித்து)** சில குதிரைகளுக்குப் பூராத் தொகை கொடுத்தாகிவிட்டது,பணம் போதாமல் நல்ல குதிரைகள் தவறிவிடுமே யென்று சிலவற்றிற்கு அட்வான்ஸ் பண்ணியிருக்கிறேன், குதிரைகள் நாளை காலை 8-மணிக்கு உங்களது குதிரை லாயத்திற்கு வந்து சேரும். நீங்கள் போகலாம், நான் குதிரையுடன் வந்து சேருகிறேன் என்று ராஜனை அனுப்பிவிட்டான். மந்திரி மறுநாள் காலை 7-மணி வரையில் பார்த்தார், வழி ஒன்று மில்லை. கடவுளைப்பிரார்த்தனை பண்ணியபடி நிற்கிறார்.

பகவான் பார்த்தார், அதேநிமிஷமே பரமபக்தனுக்குத் தனது திருவிளையாடலைக் காட்டவேண்டி அங்கு காடுகளிலுள்ள நரியைப் பரியாக்கி, ராஜசம்ஸ்தான லாயத்திற்கு அனுப்பிவிட்டார்.

பகவான் மந்திரிக்கு நீ அஞ்சாதே! குதிரைகள் முன்னமே சம்ஸ்தானத்திற்கு அனுப்பிவிட்டேன், நீ போய் அவைகளை ஒப்புவி என்றார்.

பின்பு லாயத்தில் குதிரைகளைக் கண்டு சந்தோஷமுற்றமந்திரி, ராஜனை அழைத்துவந்து, பஞ்சகல்யாணிப் புரவிகளையும், வெண்மைப் புரவிகளையும் காட்ட, ராஜன் அகமகிழ்ந்து, பரவசப்பட்டுத் திரும்பி விட்டான்.

இரவு மணி 8-ஆக குதிரைலாயத்தில் ஏராளமான நரிகள் ஊளையிட்டசத்தம் ராஜன் காதில் விழுந்தது. ராஜன் ஆச்சர்யப்பட்டு லாயத்தின் கதவைத்திறக்க, நரிகூட்டங்கள் எல்லாம் ராஜன்மேல் பாய்ந்து பாய்ந்து, விட்டது போதுமென்று ஓட்டம் பிடித்தன.

இராஜன் உட்சென்று குதிரைகளைப் பார்த்தான். காணும், ஆச்சர்யப்பட்டு இது மந்திரியின் சூழ்தெனக் கோபங்கொண்டான். உடனே பகவான் ஓர் பெரியார் உருவ மெடுத்து ராஜனிடம் மந்திரி யெனது பரமபக்தன், இது வெனது மாயவேலை என்று அவர்கள் இருவருக்கும் அனுக்கிரஹம்பண்ணி மறைந்தார்.

குறிப்பு:—மணிவாசகர் காக்ஷி பெற்றது.

---

# PART 3.

1. ஓர் அகண்ட வெளி தோன்றியது. தோன்றியதற்குக் காரணம் பிரபையுள் பிரகாசம் தோன்றியது.

2. அப்பிரகாசத்தினின்று ஓர் ராஜன் தோன்றினான்; புறப்பட்டான், அந்தப்புரம் வந்து மனைவியுடன் சுகித்து சிலநேரமிருந்தான்; மீண்டும் தனிப்பட்டான்.

3. அந்தராஜன் மனைவி மக்களுடன் வீட்டில் கொஞ்சிக் குலாவினான்.

4. அந்தராஜன், ராஜதர்பாருக்கு வந்து சிம்மாசனத்தி லமர்ந்து, மந்திரி பிரதானி முதலிய 25 பேர் சகிதம் தர்பார் நடத்தினான்.

5. அந்தராஜன் வேட்டையாட விருப்பங்கொண்டு 35 பேர்கள் கொண்ட சைனியத்துடன் வேட்டையாடி, வீட்டிற்கு வந்து தன்னிருப்பிடம் சேர்ந்தான்.

குறிப்பு:—**ஆத்மசக்தி, விரிந்தோங்கும் மாக்ஷி.**

---

# PART 4.

ஒரு விசாலமான மரத்தடியில், தண்டு கமண்டலத்துடன் ரிஷி ஒருவர் வீற்றிருந்தார்.

சிஷ்யபாவனையில் அவரெதிரே ஒரு மனிதன் தனக்கு உபதேசம் செய்யவேண்டுமென்று கேட்கும் பாவனையில் நின்று கொண்டிருந்தான்.

ரிஷி அவனைப் பார்த்து நீ முதலில் இதோ அருகிலுள்ள குளத்தில் சென்று உன்முகத்தில் தோன்றும் கருப்பை (கரியை) ஜலப்பிரதிபிம்பத்தில் பார்த்து அழுக்கை சுத்தம் செய்து கொண்டுவா உனக்குப் பின்பு உபதேசிக்கிறேன் என்றார். போய்ப்பார்த்தான்! அக்குளம் நெடுநாளாய் பாசியடர்ந்து, பாசியால் பூராவாக மூடப்பட்டிருப்பதால், ஜலத்தையே கண்டுபிடிக்க முடியவில்லை, என்ன செய்வான்? உபதேசம் கேட்கவேண்டிய தவசரம், ஜலத்தின்மேலுள்ள பாசியை ஒரு கையால் ஒதுக்கிப்பார்த்தான், உடனே வந்து மூடிக் கொள்ளுகிறது, இரண்டு கைகளினாலும் ஒதுக்கிப்பார்த்தான், மீண்டும் வந்து கவிந்து கொள்ளும் நிலைமையிலேயே இருந்தது. இப்படி 10 நிமிஷம் செய்துபார்த்தும் முகம் பார்க்கப் பயன்படவில்லை. குருவினிடம் வந்து உபதேசத்திற்கு நின்றான். உன்முகத்திலுள்ள கரியைப்போக்கிக் கொள்ளாததால், உனக்கு உபதேசங் கிடையாது போ, போ, என்று வெருட்டினார்.

மறுபடியும் அக்குளத்திற்கு வந்தான் சிறு முயற்சி போதாதென்று பெரும்முயற்சி யெடுத்து, இரண்டு முகூர்த்த காலம் விடாமல் ஜலத்தை இருகையினாலும் ஒதுக்கி ஒதுக்கி மேலும் மேலும் செய்யச் செய்ய, அவ்வலைகளினால் பாசி ஒதுங்கப்பெற்று, வெகு விசாலமாக பாசி இல்லாமல்

தோன்ற, அதில் அலையற்ற சமயம், தன் பிரதி பிம்பத்தைக் கண்டு தரிசித்தான். (உண்மையில் அழுக் கென்பதில்லை) பின்பு குருவிடம் சென்றான். உனக்கு முன்னமே உபதேசமாய் விட்டது ; வைராக்பமும், பொறுமையும் கொண்டு, உன்னை தரிசித்ததால் உன்னுருவத்தை ஜலத்தில் பார்த்தவன் தான் நீ ; நீ அவனைப்பார்த்துக் கொண்டிரு, போகலாம் என்றார்.

---

# PART 5.

கூரைமேல் சுரைகள் படர்ந்த சிறு சிறு குடிசைகளும், நீசர்களும் நிறைந்த பரைச்சேரி ஒன்று தோன்றியது. அதில் தங்களான் கூட்டங்களுடன் குடிவெறியின் களியாட்டம், தப்பட்டை வாத்தியத்துடன் தாண்டவமாடுதல் முதலியன நடந்தன.

“சேரியில் வில்வமரம் முளைத்தாற்போல” அக் கூட்டத்திலொருவன் பரம பக்திமானாகவும், ஒழுக்க சீலனாகவும், விபூதி ருத்திராக்ஷ மணிந்து ஆனந்தபரவசனாய் விளங்கினதுடன் அங்குள்ள கூட்டங்களையும் தன் போலாக்க முயல்கிறான், அக்கூட்டத்துடன் எங்கேயோ போய், கோயில் முகப்பில் நின்று, வழியை மறைத்திருக்கும் மிருகத்தால் மனம் வருந்தினான். அக்கோயிற் றெய்வமும் பனமுவந்து விலகச்செய்து காக்ஷிதர, தரிசித்தா ” ஆங்கு நடந்த கால் தூக்கியாடுந் தெய்வ கதா கால க்ஷேப மகிமையை யாவருங்கேட்டு அதினால் கூத்தாடிதெய்வத்தைக்காண அவாமேலிட்டுத், தன் சிற்றார் சேர்ந்து, தன்னை அடிமைப் கொண்ட ஆண்டையினிடம் காலைத் தூக்கியாடும் தெய்வத்தைக் காணப் போக விடைகேட்க, அதற்கவர் மறுக்க, கருணையுள்ள கால்தூக்கி நிர்த்தனம் செய்யும் கடவுள், தன்

னேவலால் நாற்பதுவேலி பூமியை ஜாலக்காரனைப்போல மறுகணத்தில் விளைவித்துவைக்க, அதைப்பரம பக்தன் தன் ஆண்டைக்கு காண்பிக்கப், பார்த்து ப்ரமித்து விடை கொடுத்தும், தனக்கு உபதேசஞ் செய்யும் படியும், தான் வேலைக்காரனை வேண்ட, அதன்படி உண்மையை உபதேசிக்கப் பெற்று, வேதியராகிய ஆண்டை ஞானப் பொன் மலை யடைந்து, சத்திவடிவ ஞானம்பா ளென்னும் மாதினை மணந்து, இகபர சாதனத்திற்குறிய சிவானந்த னென்னும் பிள்ளையையும், இராஜலட்சுமி, ஞானசரஸ்வதி, என்னும் சக்திகளையும் பெற்று, பரம அனுபவசாதனத்தி லிருந்தார். நிற்க விடைபெற்ற சேரி பரமபக்தன் காதல் கொண்ட சிதம்பரத்திற்கு செல்ல, கால்தூக்கியாடும் தெய்வமும் கருணையோடு இவரையழைத்து, தனது ஜோதிப் பிரகாசத்தில் இரண்டறக்கலக்கும்படி செய்தது. பகவான் கருணை இருந்தவாறென்னே?

**குறிப்பு:-பரம பக்த நந்தன், திருநாளைப்போவார்.**



# PART 6.

மழைக்காலம். பெரிய ஆறு ஒன்றுதோன்றி அதில் நிறைய வெள்ளம் நுங்கும் நுரையுமாய்ப் போய்க்கொண்டிருக்கிறது. அவ்வாற்றின் கரை ஓரமாக இருவர் நடந்து கொண்டிருந்தனர். அவ்வெள்ளத்தில் கருப்புக் கம்பளி மூட்டை ஒன்று மிதந்து போனது. அக்கரை ஓரமாக நடந்து கொண்டிருந்த அண்ணன் தம்பிகள், வெள்ளத்தில் போகும் கம்பளி மூட்டையைக் கண்டனர். அண்ணன் சொல்வதாவது:—அந்தக்கம்பளி மூட்டையைக் கொண்டு வந்தால், இக் குளிர் காலத்திற்குப் போர்த்துக் கொள்ளலாம் என்றான். இதைக்கேட்ட தம்பி உடனே வெள்ளத்தில் குதித்து நீந்தி (குளிரில் பசியால்வாடி பெருவெள்ளத்தில் புரண்டு மிதந்துவரும் கருப்புக்கரடி என்றறியான்) நடு ஆற்றில் சென்று மூட்டையைக் கைப்பற்றினன். அந்தோ! ஓர் பிடியு மில்லாமல் அனுதரவாக மிதந்து உருண்டு போகுங் கரடி, ஓர் உதவி கிடைத்ததாக வெண்ணி இவனைக் கெட்டியாய்ப் பிடித்தது. ஆகவே கரடியும் தம்பியும் ஒருவரை யொருவர் விடாமல் கெட்டியாய்ப் பற்றி மேலுங் கீழுமாக உருண்டு மிதந்து போய்க்கொண்டிருக்கின்றனர். இவன் விட்டாலும் கரடி விடுவதைக் காணோம்.

கரைமேல் தொடர்ந்து வந்து கொண்டிருந்த அண்ணன் சொன்னதாவது:—தம்பி ஏன் தாமதம் சீக்கிரம் மூட்டையை இழுத்துக் கொண்டுவா என்றான்.

தண்ணீரில் போகும் தம்பி சொன்னதாவது:—அண்ணா நான் விட்டாலும் கம்பிளிமூட்டை என்னைவிட மாட்டேனென்கிறது. என்னை எதிர் பார்க்காதே போய் வருகிறேன் என்று வெள்ளத்தில் இறந்தான்.

குறிப்பு:—இக்கதையினால் என்ன விளங்குகிறதென்றால் மாயை முதலில் மனிதனை பிடிக்கிறதில்லை என்றும், பிரபஞ்சத்தில் மனிதன் தான் முதலில் மாயையைப்பற்றிக் கொண்டு கரடிக்கதையாய், கம்பளி மூட்டைக்கதையாய், மாய்கிறான் என்பது.

---

# PART 7.

ஓர் சிங்கார அமைப்புள்ள வீடு தோன்றிற்று. அவ்வீட்டின் கதவு தாளிடப்பட்டிருந்தது. வீதிவழியாய் வந்த ஒருவன், வீட்டின் அழகைக்கண்டு இவ்வீட்டிற்குள் பொருளிருக்கும், தலைவன் இருப்பான் என ஊகித்து, மந்திரக்காரனை தால் மந்திரத்தினால் கதவைத்திறக்கச்செய்து, உள்ளேயுள்ளவனைக் கண்டுபிடித்து, அவன் மூலமாக வேண்டிய பொருளையும் கைக்கொள்ளலாமெனத் தீர்மானித்து, அவ்வாசற்படிக்கெதிர் நோக்கி உட்கார்ந்து 'ஓம் சிவாய நம' என்று இரண்டு முகூர்த்த நேரம்போல ஒரே உறுதியாகக் கண்மூடி, புருவமத்தியில் லட்சியம் வைத்து 3½ மாத்திரை நீளம் ஓம் என்ற பிரணவத்தால் நீட்டி, குறித்த கதவில் தாக்கியும் சிவாய நம வென்று திரும்பிவந்து, இடைவிடாமல் தாக்கினான். மந்திரக்காரனின் மந்திர சக்தியால், உள்ளிருந்த மனுஷியன் கதவின் தாளைத் திறந்தான். கதவு படீரென்று திறக்கப்பட்டது. மந்திரக்காரன் இதுதான் சமயமென்று வீட்டினுள் சென்று சுற்றிச் சுற்றிப்பார்த்தான். வெறும் வெட்ட வெளியாகத் தானிருந்தது. இவ்வெளிக்காதார புருஷன் யாரென நோக்கினான், அதைக் காணும் தானாகவே யிருந்தான், தனக் கன்னியமாக அந்த வெளியில்லை யென வுணர்ந்தான். முன்னிருந்த மலமூட்டையைக் காணோம், மந்திரம் செபித்தவனையுங் காணோம்.

குறிப்பு:—இதனாலென்ன விளங்குகிறதெனில் ஆகாய வடிவத்தின் ரகஸ்யமும், குண்டலிசக்தி வழிவிடுதலும், சுஷும்ன நாடிவழியாய்ப் போய் தலைவனை தரிசிக்கும் உண்மையும் மந்திரத்தின் பெருமையுமாம்.

---

# PART 8.

ஓர் சமுத்திரம் அலைகளால் கொந்தளித்துக் கொண்டிருந்த ஸீன் ஒன்று தோன்றியது. அச்சமுத்திரத்தின் நடுவில் தீபஸ்தம்பம் போலும், பெருமாள் கோயிலின் முன்னதாக விருக்கும் துவஜ ஸ்தம்பம் போலும், தங்கமயமாக ஸ்தம்பம் தோன்றிற்று. அந்த ஸ்தம்பத்தின் உச்சியில், சிங்கார விமானம் போல அழகிய கட்டடம் ஒன்று தோன்றியது. மிக்க வழவழப்பாகவுள்ள அந்த ஸ்தம்பத்தின் உயரம் 995 அடியிருக்கலாம். ஸ்தம்பத்தின் அடியில் 20 × 20, சதுர அடியுள்ளதும். 5 அடி உயரங்கொண்டதுமான மேடை ஒன்றிருந்தது.

தங்கத்தைப்போல தகதகவென மின்னக்கூடிய ஓர் பெரியமலை போன்ற உருவம் தோன்றிற்று. அதின் நடுவில் வீதி ஒன்று தோன்றியது. அவ்வீதி நடுவில் ஆறடி உயரமுள்ள சாண்டோ போன்ற கம்பீரமான புருஷன் ஒருவன் தோன்றினான். அவன் தனக்கு உலக சம்சாரபந்தம் நிர்வகிக்க முடியாத கஷ்டநிலையாயிருக்கிறதென்றும், அதற்காக அத்துன்பத்தை யொழிக்க உலகத்திலுள்ள பந்து மித்திர ஜனங்கள் ஒருவர் கண்ணிலுமகப்படாமல் தான் ஏகாந்தமாயிருக்கவேண்டுமென்றும், ஸ்தம்பத்தடியில் தோன்றும் அம்மேடையில் ஏறினான்; மேல் நோக்கி உச்சியிலுள்ள கலசத்தைப்பார்த்தான்; அது பளிங்குபோலும், வைரம் போலும் ஓர் பிரபை வீசிற்று. பதினைந்தடி குறுக்களவுள்ள

கமலம்போலுள்ள அப்பிரபையை உற்றுநோக்க வைரத்திற்குரிய பச்சை, மஞ்சள், சிகப்பு, வெண்மை, நீலம், பொன்மை முதலியகலர்கள் காட்டியது. மீண்டும் பார்க்கிறுகிறென்று சுழன்றது. மீண்டும் பார்க்கப் படிக நிறமாக மாறினது.

இப்படிப் பார்த்தவன் உபசாந்தத்தைப் பெறத், தென்னை மரத்தில் ஏறுவதுபோல ஸ்தம்பத்தை அணைந்து சுமார் நான்கடி ஏறினன். அப்போது அவனது மனைவி, மக்கள், உறவின் முறையார், பலர் கூட்டங்கூடி இவனைக் காணுமல் தேடி ஓட்டமாகவந்து, நாங்களெல்லோரும் உன்னை நம்பியிருக்கிறோம், எங்களுக்கு வழி சொல்லிவிட்டு உன் வழியைப்பார் என்று துவஜத்தம்பத்தடியில் கூடி விட்டார்கள். வழவழுப்பாகவுள்ள ஸ்தம்பத்தில், நான்கடி ஏறியவனை மனைவியும் மக்களும் காலைப்பிடித்து இழுத்து கீழேதள்ளி விட்டார்கள். ஆகவே இவன் ஏறவும், அவர்கள் காலைப்பிடித்துக் கீழேதள்ளவும், இப்படி ஒரு முகூர்த்த காலம் சரியாய்ப் போயிற்று. இதேது தொந்தரவாயிருக்கின்றதெனத் தீர்மானித்து, அம்மேடையை விட்டிறங்கினன். இவனைத் தொடர்ந்த கூட்டங்களும் மேடையை விட்டிறங்கின ; வீட்டை நோக்கி போக்குகாட்ட ஓட்டம் பிடித்தான்; எல்லோரும் பின்தொடர்ந்து ஓடிவந்தனர். இந்த சமயத்தில் சாண்டோ திரும்பி ஒரே ஓட்டம் பிடித்து வந்து தாவி மேடைமேலேறி ஸ்தம்பத்தில் நூறடி ஏறி அங்குள்ள சவணையில் களைப்பாறினன். அந்த ஸ்தம்பத்திற்கு நூறடிக்கு ஒருதிரணை, பூண் போன்ற கவணையுண்டு. முன்னம் காலைப் பிடித்திழுத்தவர்கள் ஓடோடியும் வந்து பார்த்து ஏமாந்தனர். ஏறியவன் முறையே 200 அடி. 300 அடி. இப்படி 700 அடி. ஏறினன். அங்கு ஏரோபிளானில் தேவர்கள் வந்து நீ அங்கு செல்வது தகுதியல்ல, இறங்கு,

போகாதே, என்று ஸ்தம்பத்தை சுற்றிச் சுற்றிப் பறந்து பிடித்திழுத்துப் பார்த்தனர். இவன் பிராணன் போனாலும் சரி இறங்கமாட்டேன், நீங்கள் சொல்கிறபடி கேட்கவுமாட்டேன், என்று ஸ்தம்பத்தை ஒரே பிடியாய் பிடித்துக் கொண்டான். இவனைப் பிடித்தால், தமக்கும், ஏரோபிளானுக்கு, ஆபத்து வருமென்றெண்ணி இவன் வைராக்யக் காரனெனத் தீர்மானித்து விட்டுப்போயினர். மீண்டும் 800 அடி, 900 அடி, ஏறி மயங்காமல் தைரியமாக 1000 அடியும் தாண்டி, உச்சியில் 1008 மாற்றுள்ள தங்க விமானக் கட்டிடத்தைக் கிட்டிப் பிடித்து, மேலேறிக் கூசாமல் உள்ளே செல்லும்போது, இத்தனை பாடுபட்டுப்போயும் காவற்காரன் நீயாரென்றான் அவனையும் கவனிக்காதது போலக்கடக்க மற்றொரு காவற்காரன் இவ்வழியே போவென்று வழிகாட்ட, அதற்கப்பாற் சென்றான். பெண் ஆண் இருவரிருந்து இதற்குமேல் சந்நிதிக்குப்போ வென்றார்கள். மேற் சென்றான். ஆனந்தவல்லி அம்மனைக் கண்டு தரிசனம் பெற்றான். அன்னவள் ஞானப்பாலளித்தாள். ஆனந்தமாகச் சாப்பிட்டான். பின் ஆனந்தவல்லி சமிக்ஞையால் உள்ளேபோ வென்று குறித்தாள். இன்னமுமா உள்ளே போக வேண்டியிருக்கின்றது என்று உள்ளே சென்றான். துணிவுடன் போன ஆளைக்காணோம், பெரு வெளியில் நடராஜர் சந்நிதி தெரிந்தது போன ஆள் நடராஜருக்குள் புகுந்து விட்டானா? அல்லது நடராஜராகி விட்டானா? ஒன்றும் தெரியவில்லை.

**குறிப்பு:—யோககாக்ஷியின் மாக்ஷிமை.**

---

# PART 9.

அஷ்டகோணம் பொருந்திய, நவத்துவாரம் அமைந்த, பெரிய சபைக்கட்டடம் ஒன்று தோன்றிற்று. அங்கே டங்கா, டமாரம், மணி முதலிய பல இன்னொலிகள் நிகழ்ந்து கொண்டிருந்தன. பின்பு அவ்வொலி நின்று, சபையின் வாயிற் கதவு படாரென்று திறக்கப்பட்டது.

1. கருப்புத்திரை ஒன்று தோன்றியது, அதில் 'மாமாயை' என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.
2. நீலத்திரை ஒன்று தோன்றியது, அதில் "மாயாசக்தி" என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.
3. பச்சைத்திரை ஒன்று தோன்றியது, அதில் "கிரியா சக்தி" என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.
4. சிகப்புத்திரை ஒன்று தோன்றியது, அதில் "பரா சக்தி" என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.
5. பொன்மைக்கலருள்ள திரை ஒன்று தோன்றிற்று, அதில், "இச்சா சக்தி" என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.
6. வெண்மைத்திரை ஒன்று தோன்றியது, அதில் "ஞான சக்தி" என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.
7. பலகலருள்ள திரை ஒன்று தோன்றிற்று, அதில் "ஆதிசக்தி" என்றும் கமலம் போன்றும் நடுவிருந்தது, அதுவும் மறைந்தது. முறையே இந்த ஏழுதிரையும் போய், இருளும் ஒளியுமல்லாத, இரவும் பகலுமல்லாத பிரகாசவடிவம் தோன்றிற்று. அதுதான் ஜோதி ஸ்வரூபம்.

குறிப்பு:—இது வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் தனக்குள் அகமுகத்தில் கண்ட ஆன்ம தரிசனத்தைக் கருணை பேலீட்டிஞலே, பகிர்முகத்தில் ஜீவர்கள் எளிதிலுணர்ந்து கொள்ளின், பின்பு அவர்கள் அகமுகத்தில் ஆண்டவனைத் தரிசிப்பது சுலபமென்பதாக ஸ்தாபித்த ஞான சபை போலும்.

---

# PART 10.

ஓர் கிராமக் காக்ஷிபோல் தோன்றியது. அவ்வூரின் நடுவில் திடீரென ஓர் வாலிபன் தோன்றினன். அவன் முகத்தில் சோகம், மோக , ரௌத்திரம், வீரம், சிருங்கார முதலிய அநேக மெய்ப்பாடுகள் தோன்றித் தோன்றி மறைந்தன. இதைப் பார்க்குமிடத்து அவன் சுகம், துக்கம், லாபம், நஷ்டம், வெப்பம், குளிர்ச்சி இவைகளால் பாதிக்கப்பட்டவன்போல் தோன்றினன். பிறகு இவைகளைச் சகிக்கமாட்டாமல் வெறுப்படைந்து மலை, காடு, ஊர், பாலைவனம் முதலிய விடங்களெல்லாம் ஓடி ஆடித்திரிந்த சமயத்தில், மலையின்மேல் அவனிலும் மிக்க ஓர் பைத்தியக்காரனைச் சந்தித்து, அலுத்துக் களைத்து அமர்ந்தான், இருவரும் ஏதேதோ பேசினர்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் முகத்தில் முன்னிருந்த பரபரப்புத் தோன்றவில்லை, அதனல் அவன் அகத்தின் அசைவாகிய பரபரப்பு நின்றபிறகே முகத்தில் சாந்தம் தோன்றியிருக்கலாமென நினைத்தேன். இப்படி சாந்தமும் சமாதானமுமடைந்து சாவதானமாக இருந்தவன் தன்னிருப்பிடம் வந்தான். வந்தவன் கிழக்குமுகமாகத்திரும்பி நோக்கினன். அங்கு மெஷீன் சக்கரம் கிறுகிறென்று சுழல ஆரம்பித்துச்

சுற்றியது. தெற்கு முகமாகத் திரும்பினான் அங்கே சக்கரம் இறுகிறென்று சுழன்றது. மேற்குமுகமாக திரும்பினான் அத்திசையிலும் சக்கரம் சுழன்றது. வடக் முகமாகத் திரும்பினான் அங்கும் சக்கரம் சுழன்றுகொ டிருந்தது. ஆகவே இவ்விஷயங்களைக் கூர்ந்துநோக்கி மலைமேல் சந்தித்த மந்திரங்கற்றப் பயித்தியக்காரக் கிழவ தான் அவ்வாலிபனின் மனோவேகத்தை வாங்கி, அவ் கத்தை இரும்புச் சக்கரங்களில் தனது மந்திர சக்தியின புகுத்தி வாலிபன் சலிப்பற்றிருக்கவேண்டுமென ஏவிவிட் விஷம வேலையினால்தான் இப்படி நாற்றிசையும் சக்கரங்க சுழன்றுகொண்டிருந்தனவென்றும், அவ்வாலிபன் இ விநோதத்தைப் பார்த்து இவை மாயாகாரிய ஜாலவேடிக்கை யென்று மதித்தானென்றும், அப்படி மதித்ததின் பயனு ஓடும் சக்கரம் என்றும் ஓடாதென்றும், ஓர் சமயம் நின்றே தீருமென்ற திடத்துடன் லாப நஷ்டத்திற்குட்படாம ஒன்றுமில்லாத ஒன்றைப்பற்றிப் பார்த்துக்கொண்டு ஒ மைப்பாட்டுடன் குதூகலித்திருக்கிறானென்றும் எண்ண இடமுண்டாகின்றது. திருவருட்காக்ஷியின் மாக்ஷிமைத னென்னே !

# END

# GOOD NIGHT.

இப்படி நடைபெற்ற 10 ரீல்ஸ்களும் முடிவுபெற்றன, உடனே நாங்களிருவரும் கண்டகாக்ஷிக்குக் காரணத்தைக் கண்டுபிடிக்க புரொஜெக்டர் ரூம் சென்ருேம். அங்குள்ள கார்பன் வெளிச்சம் காணக் கண்கள் கூசின. பாக்க முடிய வில்லை. சுருணை சுற்றும் யந்திரம், பிலிம், ரோல்கள், லென்ஸ், ஆப்பரேட்டர், டயனமோ, ஸ்விச் போர்டு முத லியவைகளைப்பார்த்துத் தெளிந்து லேடியும் நானும் வெளி வந்து எங்களுக் கென்று காத்திருந்த மோட்டார்காரி லமர்ந்து கின்னெட்லேன் மோஹன விலாஸ் பங்களாவிற்குச் சென்ருேம். சென்றதும் அலோ மைடியர்என்று தனது படுக்கை யறைக்கு அழைத்துக் கொண்டுபோய் உட்கார வைத்து, தாம்பூலம் மடித்துக்கொடுத்து இன்னிசைக் கரு வியில், பலமோகப் பாட்டுக்களைப்பாடி சந்தோஷத்தை யுண் டாக்கி கடைசியில் தன் ஆபரணங்களைக் களைந்து, தலையி லுள்ள சுருள் நிறைந்த கறள்டோப்பா மயிரைக் கூடாகக் கழற்றி வைத்தாள். (தலை மொட்டை வழுக்கைத் தலை) பின்பு வலது கையினுதவியால் இடதுகையைக்கழற்றி வைத்தாள், எனக்கு ஆச்சர்ய முண்டாயிற்று, இவளுக்குத் தலைமொட்டையென்றும், ஒருகைதான் உண்டென்றும், மற் ெறாரு கை போலிக்கையென்றும், எனக்கு முன்னமே தெரி யாது. பிறகு, அம்மாது ஒரு காலைக்கழற்றிவைத்தாள், என்மனது பீதி அடைந்தது. டைடி லேடி தனது ஒரு கண் ணைப்பெயர்த்து வைத்தாள். வாயைத் திறந்து இரண்டு தந்த வரிசைகளையும் கூடாகக் கழற்றி மேஜையின்பேரில் வைத்தாள். பார்த்தேன், பிரமித்தேன். உரித்துவிட்ட கோழியைப் போல தலை மொட்டை, கண்பொட்டை பொக்கை வாய், ஒருகை, ஒரு காலில்லா முண்டம் இதைக் கண்ணால் பார்ப்பதே கஷ்டம். பார்த்தும் எவ்விதம் இவ ளைச் சேர மனம்வரும்? ஐயையோ இந்த முண்டத்தின்

பேரில் ஆசைவைத்தேனே யென்ற துக்கம் அதிகமாகி ஒரே ஓட்டமாக ஓடி யிருப்பிடம் போய்ச் சேர்ந்தேன். தூக்கம் வரவில்லை. அப்போது அடடா என்ன இப்படி மோசம் போனேனே! இணையில்லாத இந்திரபோகம் அநுபவிக்க வல்லோ போனேன். வெளிப்பகட்டைக் கண்டு ஏமாந்து ரூ. 250 நோட்டு கொடுத்தேனே, பகுத்தறிவில்லாத தோஷத்தால் இத்தனை கஷ்டமுண்டாயிற்று, என்று எண்ணி எண்ணி துக்கப்பட்டேன். இந்த பர்மா லேடியிடம் நான் ஆசைப்பட்டது தலைமயிருக்கா, கழற்றி வைத்த கண்ணு ம் க் கண்ணுக்கா, மெஷினால் செய்த பீங்கான் பல்லுக்கா, உள் மரத்துண்டும் பஞ்சினாலுமமைத்த கைக்கா, காலுக்கா, அவள் சிவப்பாகயிருக்கிறாள், தோல் கனத்து மிருதுவா யிருக்கிறது, என்று தோலைகூர்ந்து நினைத்தேனல்லவா? ஹா! ஹா!! நல்லதோல், கருப்புத்தோல், சிவப்புத்தோல், கனத்ததோல், மிருதுவானதோல்? என்று கூர்ந்து பார்ப்பது சக்கிலியினுடைய வேலையல்லவோ, அந்த சக்கிலி புத்தி எனக்கிருந்த படியினால் இந்நிலைக்கு வந்தேன். மாமிசத்தினால் பூசப்பட்டதும், உதிரம் நிறைந்ததும், நாடிகளால் கட்டப்பட்டதும், தோலினால் மூடப்பட்டதும், அஸ்திக்கூடானதும், ரோமம் முளைத்திருப்பதும், பித்த கபங்களுடன் கூடியதும், மல மூத்திரங்களின் பெட்டியானதும், சுக்கில சுரோணிதங்களிலிருந்து உண்டாகியதும், மூத்திரத் துவாரத்திலிருந்து ஜனித்ததுமான வஸ்துவை, பிரஜைகள் பிரபஞ்சத்தில் ஏதோ சுகமுண்டென்று நினைத்து வீண் பிரயாசைப்படுகின்றனர். அந்தோ! கூறு கூறாக ஆராய்ந்து பார்க்கவேண்டாமா? போனது போகட்டும் என்று, சற்று அயர்ந்து தூங்கலாமென நினைத்தேன், சினிமாவில் கண்ட ஒவ்வொரு விஷயங்களும், நான் கண்மூடிப் படுத்திருக்கும் போதே என் கண்முன்னால் நடப்பதாகவே தோன்றுகின்

றதே, இதென்ன, "தின்ற ஆகாரத்தை மாடானது மீட்டும் வாயில் கொண்டு வந்து அசை போடுவது" போல இப்படி மனம் கண்டதைக் கொண்டு வந்து காட்டுகின்றதே, இப்படியே மனதிற்கு இடங்கொடுத்தால் மனது தனதிஷ்டப்படி சற்று நேரத்திற்கு முன் மோஹன விலாஸ பங்களாவில் நிகழ்ந்த கதையிலும் கொண்டுபோய் விடும்போலிருக்கிறது. மனதைச்சற்று நிதானித்துக் கண்களை மூடி ஊன்றிப் பார்ப்போம். "ஊன்றிப் பார்த்தால் மனமென்று ஒருபொருளைக் காணேமே", ஒன்றுமில்லாத பாழடைந்த இடம்போலல்லவோ தெரிகின்றது. சரிதான், சரிதான் சினிமா படுதாவில் அனேகவித உருவங்கள் இயற்கையாகவும், செயற்கையாகவும், இயற்கைக்கு மாறுபாடாக (விரோதமாக) வும் சிலசில இடங்களில் ஒன்றிற்கொன்று சம்பந்தமில்லாமலும், சில விடங்களில் பிலிம் தயாரிப்போர் தமது கற்பனாசக்திக்குத் தக்கபடி இஷ்டம் போலும், மனம் வாக்குக்கெட்டாத அளவு கடந்த விதமாகக் கண்டேனல்லவா. அந்தப்படிதான் மனதின் இயற்கை போலிருக்கிறது. ஆகவே மனதின் எண்ணத்தை எடுத்துவிட்டுப் பார்த்த இடமும், சினிமாவில் பிலிம் உருவங்கள் ஓடாமல் கார்பன் லைட்டைக் கொண்டு படுதா வெண்மையாக தெரிந்தவிடமும், ஒன்றுதான் போலிருக்கிறது. சினிமாபடுதாவிலுள்ள வெண்மை வெளிச்சத்தை பிலிம் நாடாவிலுள்ள உருவங்கள் ஆபாசப்படுத்தி உருவம் வேலை செய்வது போல், மனதின் ரூபமும் கற்பனா வடிவம் போலிருக்கிறது. எப்படி ஜெகன் மோஹன ஞானவிலாச சினிமாவில், காக்ஷிகளை கண்டவுடன் காரணத்தைக் கண்டு பிடிக்க முயற்சி யெடுத்து, புரொஜெக்டர், ஆபரேட்டர், ரோல்பிலிம், லென்ஸ், கார்பன் லைட், டைனமோ, ஸ்விச் போர்டு முதலியவைகளைக் கண்டுபிடித்தது போல கவனிக்கிறேன். மனதில் எண்ணங்களுடன் கூடின இடத்தையும்

(அசுத்தமனது) பாழடைந்ததைப் போலுள்ள எண்ணங்களற்ற சும்மா இருந்த இடத்தையும் (சுத்தமனது) எது தெரியச் செய்ததோ அதுதான் "ஜோதி" அது தான் "ஆன்மா" ரோல்பிலிம் சுற்றும் வரையில் திரையில் உருவங்கள் தோன்றினது போல, அந்தக்கரணத்தில் வாசனையுள்ள வரையில் ஜாக்ர ஸ்வப்னங்களில் நானுவிசித்திரங்களாகத் தோன்றிநிற்கும் படுதாவில் உருவங்கள் விளங்கிய போதும், உருவ ஓட்டமில்லாமல் சுத்த வெண்மையாகத் தோன்றிய போதும், கார்பன் லைட் எல்லாவற்றையும் விளங்கவைத்து, தான் அசைவற்றிருந்தது போல, ஆன்மாவும், மனம், தேகம், ஜகம் முதலியவைகளை தோற்றுவித்தும், தான் இருந்தபடி இருக்கிறது.

நான் இத்தனைநாளும் எனக்குள்புகுந்து பார்க்காமல், ஜகத்துள் புகுந்துபார்த்தல்லவோ, உண்மையுணராமல் இத்தனை அல்லற்குட்பட்டேன். போதும், போதும், சென்னைக்குவந்து "சித்துப் பொருளைக் கண்டதும்" சென்னைக்கு வந்து "சிவனைக் கண்டதும்" என்று பிரலாபித்துக் கொண்டிருந்த சமயம் நான்கு மணிக்கு விழிக்கவேண்டுமென்று அலாரம்கொடுத்து வைத்திருந்த Big Ben டைம்பீஸ் டிற்-ற்....ற்....ற்....ற்....ற் என்று ஒரே சப்தம் சப்திக்க ஆரம்பித்தது. கண்களை விழித்துப்பார்க்கவே யான் படுத்திருந்த ஸ்பிரிங் கட்டில் தவிர வேறொன்றையுங் கண்டேனில்லை. காக்ஷிகளனைத்தும் பொய்யாய்ப் பழங்கதையாய் வெறுங்கனவாய்ப் போயின.

---

ஜீவர்கள் நிமிஷத்தைப் பவுனாக மதிக்கக்கூடியதும், ஒரு சாண் குக்ஷிக்காக ஓயாமல் பட்சிகளைப் போல பறந்து உழைப்பதும், மன அமைதி என்பதையே காண முடியாததும், ஜனநெருக்கமும், இடையிடையே சைகிள், மோட்டார் சைகிள், மோட்டார் யமன், ரிக்ஷா, ஜட்கா முதலிய ஆரவாரிப்புமுடைய சென்னையம் பதியில், இரவு நான்கு மணிமுதல், இரவு பத்துமணி வரையில், உழல்வதைப் பார்த்தால் மோக்ஷகாலம் மிஞ்சிப் போகிறதாகவே தோன்றும்.

அங்கு பிராட்வே லோன்ஸ்குயர் (Sri Ramulu Naidu Park) என்ற சதுர விசாலமான இடம் ஒன்றிருந்தது. அந்தக் கண்காக்ஷித் தோட்டத்தின் மத்தியில் உயரியபெரிய ரவுண்டு மேடையும், அதைச்சுற்றிலும் நானாவித பெஞ்சுகளின் அமைப்பும், விவித குரோட்டன்ஸ் செடிகளும், லட்சணமாயமைத்த கமுகு மரங்களும், அங்குள்ள அரசு, வேம்பு நிழலும், அக்தோட்டத்திற்கு நான்கு வாசற்படி அமைப்பும், மனதை ரஞ்சிப்பிக்கும். அவ்விடத்தைப் பார்த்தவுடன் இங்குதான் சிறிதளவு மனவமைதி கிடைக்குமென பெஞ்சிலமர்ந்தேன். எதிர்பாராத விதமாக சற்று நேரத்திற்கெல்லாம் நடந்த காக்ஷிகளாவன:—

ஓர் யுவனும், யுவதியும், என் பக்கத்திலுள்ள பெஞ்சில் வந்தமர்ந்தார்கள்.

1. அவர்களிருவரும் இரதியும், மன்மதனுமெனக் 'கண்களை வசீகரிக்கும் வண்ணம் தோன்றினார்கள்.

2. அங்குள்ள குரோட்டன்ஸ் செடிகளிலுள்ள புஷ்பத்தின் வாசனையும், பக்கலிலமர்ந்துள்ள மின்னளின் தலையிலணிந்துள்ள ரோஜாப் புஷ்பத்தின் நறுமணமும், அவள் கட்டழகன் கைக்குட்டையில் போட்டி

ருந்த பிரஞ்சு கோடெட்ரோஸ் செண்ட் மணமும் இயற்கை சேர்க்கை எல்லா மணமும் சேர்ந்து எனது "நாசி" யைத்துளைத்தது.

3. அக்கட்டழகனுடன் இருந்த வசீகரி அவனது வேண்டு கோளுக்கிணங்கி, தாயுமானவர் பாடலில், **இன்னமுது கனிபாகு** என ஸ்ரீராகத்தில் குயிலைப்பழிக்கும் தனது இனிய தொனியால், குரலோ, குழலோ, கோட்டு வாத்தியமோ, யாழோ, பாகோ, தேனோ, என இனிக்கு மாறு கர்ணாமிருதமாகப் பாடினாள். அத்தொனியைக் கேட்பதற்கு என்னிரு "சேவியும்" போதாதே.

4. இப்படி யிருக்கும்போது ஆங்கு பெஞ்சில் அமர்ந் திருந்த ஓர் மகம்மதியக்கிழவ ரொருவர் பாத்தியா ஓதியதென்று சர்க்கரையை எல்லாருக்குங் கொடுத்து எனக்குங் கொடுத்தார், "நாக்கு" ருசியறிந்ததை என் னென்று சொல்லுவேன்.

5. இவ்வளவு அமர்க்களத்திலும் கீழ்த்திரையினின்றும் குளிர்ந்த மந்த மாருதம் "தேகத்தில்" தாக்கி ஜிலீர் ஜிலீரென்று உணர்ச்சி யுறுத்துகின்றது. இவ்வெல்லா வுணர்ச்சியும் சேர்ந்து நாம் பூலோகத்தில் இருக்கி ரோமா, அல்லது தேவலோகத்திலிருக்கிறோமா வென மயங்கச் செய்தது என்றாலும், பாகிய விஷயத்தில் பொழுது போக்கிற்காகச் சென்னைவந்தவனல்ல. வந்த வேலை, சந்தர்ப்பம், காலம், இவைகளை நோக்கின், அவனிஷ்டப்படி வந்ததாகும். அதை இப்பொழுது எழுதுகோல் முனையில் சொல்லிக் கொண்டிருத்தற் கில்லை.

இவைகளை யெல்லாம் எது அறிகின்றதென்பதை சற்று ஊன்றி ஆராயும் வேலையிற் பிரவேசிப்போம். தென்

பட்ட உருவம் கண் கண்டதும், இனியபாசுரங்களை கேட்டதும், மிகுந்த நறுமணத்தை நாசி முகர்ந்ததும், சர்க்கரையை நாக்கு ருசித்ததும், ஜிலீரென்று காற்றை உணர்ந்ததும், பகிரங்கத்தில் தோன்றும் பஞ்சேந்திரியங்களாயுள்ள கண், காது, மூக்கு, நாக்கு, தேகம் என்னும் இவைகள் ஒவ்வோர் கருவிகளேயாகும்.

இவ்வைந்து யந்திரக் கருவிகள் ஒவ்வொன்றிற்கும் சம்மந்தப்பட்ட ஓர் தனிநாடி இருக்கின்றது. அந் நாடிகள் ஐந்தும் தலையிலுள்ள மூளை யென்னும் ஸ்டேஷன் ஆபீஸ் ரூமிற்குள் பிணைக்கப்பட்டிருக்கின்றன.

ஷை சம்மந்தப்பட்ட நாடி அமைப்பில்லாதிருப்பின் ஒருவனுக்கு 1000 கண்களிருப்பினும் பயன்படமாட்டாது.

அந்த மூளை யென்னும் ஸ்டேஷன் ஆபீஸ் ரூமில் "மனது" என்னும் டெலிபோன் மாஸ்டர் இருக்கிறார்.

வேண்டுமானால் ஏககாலத்தில் பஞ்சேந்திரியர்களாகிய ஐந்து பேரும் அனுப்பும் தந்தியை ஒரேகாலத்தில் அஷ்டாவதானிபோல அதிதீவிரத்தில் மனமென்னும் டெலிபோன் மாஸ்டர் வாங்கியறியும் சக்தியுண்டு. ஷை ஐவரில் ஒருவர் அனுப்பும் தந்தியைமாத்திரம் ஓர் சமயம் டெலிபோன் மாஸ்டர் மிக்க ஊக்கமாய் ஆழ்ந்து கவனித்துக் கொண்டிருக்கும் பட்சத்தில், அந்தசமயம் மற்ற நால்வரும் எத்தனைதரம் எத்தனை விதமாய்க் கூக்குரல் போட்டு தந்தியடித்தாலும் டெலிபோன் மாஸ்டர் வேறு வேலையிலாழ்ந்திருப்பதால் கவனிப்பதற்கில்லை.

ஒருவிஷயத்தில் மனதைச் செலுத்தியிருக்கும்போது எதிரில் ஆள்வந்து போயிருக்கினும், காதில் மணியோசை கேட்டிருப்பினும், தோன்றாதிருந்ததை அதாவது ஒன்றை ஊன்றி கிரஹிக்கும்போது மற்றொன்று கிரஹிக்க முடியாததை உங்களனுபவத்தில் கண்டிருப்பீர்கள்.

அந்த ஸ்டேஷன் அறையில் தலைமை அதிகாரி அதாவது ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவரிருக்கிறார் அவர்தான் "புத்தி" என்பது மனமென்னும் டெலிபோன் மாஸ்டர் வாங்கும் தந்தியை புத்தி யென்னும் ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுத்து, அவர் கவனித்து அவரால் முடிவாக்கப் படும் தீர்மானத்தைக் கலந்து செய்யும் வேலையே உத்தமமாகவும் ஒழுங்காகவும் முடியும்.

அல்லது ஒரோர்சமயம் டெலிபோன் மாஸ்டரே தான் தோன்றித் தம்பிரானாக விருந்து, ஸ்டேஷன் மாஸ்டரிடம் கலக்காமல் விஷயத்தை ஓர் முடிவுக்கு கொண்டு வருவதுமுண்டு, அப்படிச் செய்யப்படும் காரியம் அனர்த்தமாகவே முடியும்.

ஒருவன் இன்றிரவு நடராஜர் தரிசனத்திற்குப் போகலாமா? அல்லது தாஸி சுந்தரம் வீட்டிற்குப்போகலாமா? என நினைக்கிறான். இதுதான் மனத்தின் காரியம். பிறகு சிலநேரத்திற் கெல்லாம் தாஸி வீட்டிற்குப் போனால் பொருள் நஷ்டம், தேக அசௌகர்யம், மேலும் தீயதாகிய பாவச்செயல், ஆகவே புண்ணியத்திற் கேதுவாகவுள்ள நடராஜர் தரிசனம் பண்ணப் போவோம். என நிச்சயிக்கிறான். இதுதான் புத்தியின் காரியம்.

பகிரங்கத் தோற்றம் பஞ்ச இந்திரியக்கருவியிற் பட்டு, அதிற் சம்பந்தப்பட்ட நாடிவழியாகச் சென்று, மனதிற்றாக்கி, மனம் புத்தியிடத்திற் கொடுக்க, புத்தி வாங்கின அவ்வுணர்ச்சிகள் எல்லாவற்றையும் அசையவொட்டாமல் ஓரிடத்தில் ஸ்டாக்காகச் சேர்த்துவைக்கின்றது. அந்த இடம் தான் ஓர் சப் ரிஜிஸ்தர் ஆபீஸ், எனவைத்துக் கொள்ளுங்கள். அந்த சப் ரிஜிஸ்தராபீஸில் நீங்கள் பிறந்தநாள் முதற் பதிவுசெய்தகாப்பி நகல்கள் பூராவும் உள அதாவது உங்களது வாழ்நாளில் கண்டு, கேட்டு, உண்டு உடுத்து,

அநுபவித்த, சுகங்கள் பூராவிற்கும் கொடுத்தபடி வேண்டு மானபோது நகல் எடுத்துக் கொள்ளலாம். அந்த இடமோ என்றைக்கும் அழிவில்லாதது, அப்படிப்பட்ட அகண்ட மான ஓர் வஸ்து வில்லாவிட்டால் வெளியிலிருந்து உள்ளே கொண்டுபோன உணர்ச்சிகள் ஒருபோதும் நிலைக்கமாட்டா. அந்த அகண்டமாகிய வஸ்துதான் 'ஆத்மா' அதுதான் நாம் அவர்தான் ஸ்டேஷன் மாஸ்டர் அவரை அறிந்தோமானால் மற்றவைகளை எல்லாம் அறிவது வெகு சுலபம்.

---

இவ்வுலகில் மண், பெண், பொன் என்னும் மூவாசை யிலுண்டாகும் சுகதுக்க லாப நஷ்டங்களில் அடிபட்டு என்றும் இதில் நிலைத்து நிற்பது மரணத்தருவாய் வரை யில் துன்பமே யென்று பகுத்தறிவினால் ஆராய்ந்துணர்ந்து விசாரப்பட்டுக் கொண்டிருப்பவன் ஆயிரத்திலொருவனே யாகும். இப்படி விசாரப்பட்டுக் கொண்டிருக்கும் ஆயிரத்தி லொருவன்தான் இதற்கு நிவிருத்தி மார்க்கம் தேடுவான். இப்படி நிவிருத்திமார்க்கம் தேடும் ஆயிரத்திலொருவன் தான் மெய்ஞ்ஞானசாஸ்திர ஆராய்ச்சிசெய்யவிருப்பங்கொள் வான், இப்படி சாஸ்திர வாராய்ச்சி செய்யும் ஆயிரத்தி லொருவன்தான் அதிலுள்ள சந்தேகங்களைப் பெரியார் வாயி லாகக் கேள்விகள் கேட்டுத்தெளிந்து திடம்பண்ணிக்கொள் வான். இப்படித்தெளிந்து திடம்பண்ணிக்கொண்ட ஆயி ரத்திலொருவன் தான் இச்சையை விடுவான். இப்படி இச் சையைவிட்ட ஆயிரத்திலொருவன் தான் தக்க ஆசானைத் தேடுவான், இப்படித் தக்க ஆசானைத்தேடும் ஆயிரத்தி லொருவன்தான் சற்குருவைக்கண்டு பிடிப்பான், இப்படி சற்குருவைக்கண்டு பிடித்த ஆயிரத்திலொருவன் தான் ஆத்மாட்சக உபதேசம் பெறுவான், இப்படி உபதேசம் பெற்ற ஆயிரத்திலொருவன் தான் அவர்சொன்னபடி இடை

விடாது அனுஷ்டிப்பான், இப்படி அனுஷ்டிக்கும் ஆயிரத்தி லொருவன் தான் அதிதீவிரமாக வாசாஞானம், கைஞான மெல்லாம் விடுத்து உண்மை நிலைமையைக் கண்டுபிடிப்பான். இப்படி உண்மைநிலையைக்கண்டு பிடித்த ஆயிரத்திலொரு வன்தான் வாக்குமௌனம், மனோமௌனம், காயமௌனம் முதலியசாதனத்திலிருப்பான். இப்படிசாதனத்திலிருக்கும் ஆயிரத்திலொருவன் தான் பிறவிப் பிணியை யொழித்து முக்காலத்திலுமுள்ளவன் தானே யென வுணர்ந்து விசார மில்லாத ஆனந்தாதீத மகா மௌன துரிய துரியா தீத அருட்பெருஞ் ஜோதியிற் கலந்து நிற்பான். இதேது இதற் கும் நமக்கும் வெகுதூரமென்று நினைப்பவர்கட்கு வெகு தூரமே, மேற்சொன்ன ஆயிரத்திலொருவன் நாமேயெனத் துணிந்து ஞான வாரிதியிலிறங்கினால் வெகு சமீபமே நம்மை மயங்க வைப்பது மனதின் தன்மை, இன்று புத்த கத்தில் 50-பக்கம் படித்தோம், நாளை 51-வது பக்கப் படிப் போம், அதுபோல இன்று கூடுமான வரையில் அந்தவேலை யைச் செய்வோம், நாளை பாக்கி வேலையைச் செய்யலாம், ஒரே நிமிஷத்தில் அல்லது ஒரேநாளில் யாரும் ஒரு காரி யத்தை சாதித்து விடவில்லை அவரவர்களும் நாளடைவில் தான் காரியத்தை பூர்த்தி செய்துகொண்டார்கள், ஆனதால் நாளை நாளையென்று நாளைப்போக்குவதைவிட, இன்றே இப்பொழுதே நற்காரியத்தில் பிரவேசியுங்கள். நல்ல தையே செய்யுங்கள் நலமேயடைவீர்கள்.



ஓர் அமாவாசை நள்ளிரவு, சென்னையிலுள்ள சிந்தாத் திரிப்பேட்டையில் கொள்ளைக் கூட்டத்தார் 12-பெயர் கூடி இன்றிரவு எங்கே கொள்ளையடிக்கலாமென் றுலோசித்து, அதிலொருவன், மவுண்ட்ரோட்டிலுள்ள போயார் அண்டு

சன்ஸ் கம்பெனிதான் பிரபலமாக வியாபாரம் நடந்துவருகின்றது, இன்று போனால் ஏராளமாக பவுன்கள், டாலர்கள், வைரம், கோமேதகம் முதலிய அமைந்த உயர்தர நகைகள் கொள்ளையடிக்கலாமெனச் சொல்ல, அதிலொருவன், மிக்க பந்தோபஸ்தாயிருக்கின்ற விடமாயிற்றே, எப்படி கொள்ளையடிக்கக் கூடுமெனக் கேட்க, மற்றொருவன் எனக்கு மிகுந்த சாமர்த்திய முண்டு (உளவனில்லாமல் களவாட முடியாது) அந்தக் கம்பெனியின் வாயிற் காவல்காரன், அஸன்கானுளவுகண்டு, பின்பு கொள்ளையடிக்கலாமென்று சொல்லி அஸன்கானைக்கண்டுபிடித்து 50-பவுனை முன்னதாக அவன் கையிற்கொடுத்து, உளவறிந்து, பின்னர் யாவருமொன்று கூடி கம்பெனிக்கு வந்து, ஒருவன் கதவின் நிலையின் மேலுள்ள ஓர் பட்டனை அழுத்தினன், திடீரென்று கதவு படீரென்று திறக்கப்பட்டது. யாவரும் ஒன்று கூடி காணப்பட்ட ரூமில் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டார்கள். அதிலொருவன் அங்குள்ள பட்டனை அழுத்தினன், அந்த அறையோடு அங்குள்ளவர்களையெல்லாம் மேலே சரேலென்று (எலக்ட்ரிக்சக்தி) ககனமார்க்கமாக 7-வது மாடியில் கொண்டு நிறுத்தினது. இவர்கள் போன ரூம் திறக்க அந்த நிலைக்குச் சென்றுபார்த்துத் தாக்குத் தகவலில்லாமல் (எலக்டரிக் ஸ்விச்)போர்டிலுள்ளபட்டனை ஒருவன் அழுத்திவிட்டான். பட்டனை அழுத்தியதால் புரோப்ரைட்டர்இருக்குமிடத்திற்குப் போய் காலிங்பெல் அடித்துக்கொண்டிருந்தது, ஏற்கனவே 250 வால்ட்பவர் எலெக்ட்ரிக் லைட் வெளிச்சம் அடித்துக்கொண்டிருந்தது. கண்ணாடி பீரோவிலுள்ள பொருள்களையும் பெட்டி பேழைமுதலிய பொருளிருக்குமிடத்தையும் கண்டுபிடித்தார்கள். எலெக்ட்ரிக்பவர் வெளிச்சம் இவர்கள் கண்களைத் திகைக்கச் செய்தன, அதிலொருவன் அவ்வெளிச்சத்தைப் பாரைத்தடியினலடித்து

உடைத்து நிறுத்தினான். அவர்கள் கையிலுள்ள சிறிய செர்ச்லைட்டைக் கொண்டு பார்த்து பீரோ பெட்டி பேழை முதலியவைகளை திறந்தெடுக்க காலதாமதமாகுமென்று தூக்கித் தூக்கிப்போட்டுடைத்து தூள் தூளாக்கினார்கள். வேண்டிய பொருள்களை பொறுக்கிக்கொண்டு வழிதெரியாமல் படிக்கட்டின் மார்க்கமாகவே இறங்கி ஓடிவருகின்றார்கள். நித்திரையிலிருக்கும் புரோப்ரைட்டர் ஓயாமலடிக்கும் காலிங்பெல் சத்தம் கேட்டு, நித்திரை தெளிந்தெழுந்து, இந்நள்ளிரவில் கம்பெனி ஸ்டாக்கிலிருந்து, காலிங்பெல் அடிக்கவேண்டிய காரணமென்ன ஏதோ மோசம் நடக்கின்றதெனத்தெளிந்து, ஓடோடியும் வந்து, கதவைத்திறக்க திருடர்கள் இவரைக் கீழே தள்ளி மேலேமிதித்து ஓட்டம் பிடித்தார்கள். துரை எழுந்து மிக்க நடுக்கமுற்று, உட்சென்று பார்த்து வயிற்றிலும் வாயிலுமடித்துக்கொண்டு, ரவுண்ட் டாணாவில் வந்து நின்று, இச்சென்னையில் இப்படியும் அதிக்கிரமமுண்டாவென ஹோவென்று அழுது சத்தம் போட்டு, நீதியில்லையா ? நெறியில்லையா ? ஓ ஜவான்களே எங்கே தூங்குகின்றீர்கள் ? ஓடிப்பிடிக்க மாட்டீர்களா ? நானலறுவது உங்கள் காதில் கேட்கவில்லையா ? ஓ பராபரக் கடவுளே ? என்று புலம்பிநின்றார்.

---

## இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா.

மாயை யெனுமிரவில் என்மனையகத்தே விடய வாதனையெனுங் கள்வர்தாம்வந்து மன வடிமையை யெழுப்பி அவனைத் தமது வசமாக வுளவுகண்டு, மேயமதியெனுமொரு விளக்கினை யவித்து எனது மெய்நிலைச் சாளிகையெலாம்

வேறுற வுடைத்து உள்ள பொருளெலாங் கொள்ளைகொள மிக நடுக்குற்று நினையே, நேயமுற வோவாது கூவுகின்றேன் சற்று நின் செவிக்கேறவிலையோ நீதியிலையோ தருமநெறியு மிலையோ வருளினிறைவுமிலையோ என்செய் கேன், ஆயமறை முடிநின்ற தில்லையம்பதி மருவும் அண்ணலார் மகிழுமணியே அகி லாண்டமும் சராசரமு மீன்றருள் பரசிவானந்த வல்லியுமையே.

அமாவாசை நள்ளிரவில், சென்னையம்பதி சிந்தாத் திரிப்பேட்டையிலுள்ள 12 திருடர்கள் மவுண்ட்ரோடு போயார் அண்டு சன்ஸ் கம்பெனி வாசற் காவற்காரனுல் எப்படி உளவு கண்டுபிடித்தார்களோ, அதைப்போல வடலூர் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளும், தனது ஆரம்ப நிஷ்டானுபவத்திலிருக்கும்போது, அந்தரங்க இருதய மனையில், மயக்கத்தைத் தரக்கூடிய மாயையென்னும் சக்தி மறைப்பின் சந்தர்ப்பத்தில், இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மத்சரம், டம்பம், தர்ப்பம், ஈரிஷை, அசூயை யென்னும் 12 திருடர்களும், அடிமை மனம் என்பவனுல் உளவு கண்டு, துணைபிடித்து— கம்பெனியிலுள்ள மிக்க பிரகாசம் பொருந்திய எலெக்ட்ரிக் வெளிச்சம் திருடர்களின் கண்பார்வையை மறைத்துக் கெடுத்துவிடுகிறதென நினைத்து உடைத்து அணைத்து, பீரோ பெட்டி பேழை முதலியவைகளையெல்லாம் தூக்கிப் போட்டு உடைத்து, சின்னுபின்னப்படுத்தி, அதில் கிடைத்த வைர நகைகள், டாலர்கள், பவுன்கள் எல்லா வற்றையும் வாரிக் கொள்ளைகொண்டுபோக, கம்பெனி புரோப்ரைட்டர் பார்த்து, மிக்க நடுக்கமுற்று, எப்படி

அவஸ்தைப்பட்டாரோ, அதைப்போல, இராமலிங்க சுவாமிகளும், தன்னைபறியும் ஆன்மப்பிரகாசத்தை விஷயவாசனைத் திருடர்கள் தெரியவொட்டாமல் தடுத்து, மேலும் ஈவு, இரக்கம், தயை, தாக்ஷண்யம், ஜீவகாருண்யம், உண்மை நிலை யென்னும் பொக்கிஷ சாலிகையை பஞ்சமா பாதகர்கள் உடைத்து, நாசமாக்கி, அதிலுள்ள புண்ணியப் பொருள் களையெல்லாம் கொள்ளைகொண்டுபோக, உளம்பதறி நடுக்க முற்று—கம்பெனிதுரை மவுண்ட்ரோடு ரவுண்டாணாவில் வந்து வயிற்றிலும், வாயிலுமடித்துக்கொண்டு ஹோவென்று சத்தம்போட்டு அழுது போலீஸ் டாணைக்காரர்களை தூங்கி விட்டீர்களா? நான் அலறுவது உங்கள் காதில் கேட்க வில்லையா? என்ன அநியாயம், நீதி யி ல் லை யா? தரும மில்லையா? அந்தோ! என்செய்வேன், ஓ பராபரக்கடவுளே! என்றழுததைப்போல, இராமலிங்க சுவாமிகளும், ஸ்ரீமந் நடராஜப்பெருமானைக் குறித்து, அடிக்கடி எத்தனைமுறை ஓயாது கூவியும் நின்செவி கேட்கவில்லையோ? நீதி யில்லையோ? தருமநெறியுமில்லையோ? வேதத்தின் முடிவாக நின்று படைத்தல், காத்தல், அழித்தல், திரோபவம், அனுக்கிரஹம், என்னு மைந்தொழிலையும் நினது சந்நிதான விசேஷ வல்லபத்தால் நடத்தும் சிவசுகாதீத அகண்டப் பெருவெளியில் ஆனந்த நிருத்தமிடும் ஹே! ஸ்ரீமந் நடராஜப்பெருமானே! என்று ஓலமிடுகிறார். நமது வள்ளற் பெருமான், ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள், இத்தகைய கருத்தை யொருங்கே யமைத்து, தமது அருட்பாவில், "மாயையெனுமிரவில்" என்னும் பாசுரத்தை யமைத்தார் போலும்.

———:(o):———

இருண்டு அடர்ந்த, மரம், செடி, புதர்கள் நிறைந்த மலையடி ராஜ்யத் திருவண்ணாமலையில், மிகவும் அகண்டப்

பெருவெளி நிலம், தரிசாக விருப்பதாக மதுரையம்பதி யைச்சேர்ந்த, திருச்சுழியில், சுந்தரமய்யர் குமாரர் திரு வேங்கிடரமணய்யர் கேள்விப்பட்டு, தர்க்காஸ்து விண்ணப் பம் போட்டு, சுதந்தரப்படுத்திக் கீழைத்தூர் குருமூர்த்த மென்னுமிடத்திலமர்ந்திருந்து, காடுவெட்டும் கூலியாட் களைக்கொண்டு அக்காட்டை வேறறவெட்டி, மண்வெட்டும் ஒட்டர்களைக்கொண்டு மேடுபள்ளங்களை சமமாக்கும்போது, தடையாக விருந்த அதிலுள்ள சிறு சிறு கற்பாறைகளை அடிகாண அதிர்வெடி மருந்துவைத்து உடைத்து, வெளிப் படுத்தி பூமியை சமமாக்கி உழுது, திருத்தி, உயர்தர நல்ல பலன் தரும் தானிய விதைகளைப் பதித்து, பக்கத்தின் மலை யின்மேல் ஒன்றரை மைல் உயரத்திலிருந்து வரும் நீர் வீழ்ச்சியை சமநிலங்களில் வாய்க்கால்வெட்டி, அவ்வகண்டப் பெருவெளி நிலத்தில் பாய்ச்சி, விதைகள் முளைவிட்டுப் பயிர் கள் சுபிட்சமாகக் கிளம்பி, காலக்கிரமத்தில் பூவிட்டுக் கதிர் வாங்கி, முற்றி வருவதை (நாளைக்கு வேண்டுமென்றபேட் சிக்காது அன்று பசியை மாத்திரம் தணித்துக்கொள்ளும்) அழகிய பஞ்சவர்ணச் சிட்டுகளும், மற்றும் சிற்றின பட்சி ஜாலங்களும், நாகணவாய்ப்புட்களும், பச்சைக் கிளிகளும், கூட்டங் கூட்டமாக தினந் தினம் வந்து விழுந்து சாப்பிட்டு ஒழிக்க வாரம்பித்தன, பலன்செய்த திருவேங்கிடரமணய்யர் பார்த்து, ஐயஹோ! அநேக நூறுமைல்களுக்கப்பா லிருந்து கஷ்டப்பட்டு வந்துபட்ட பிரயாசையின் பலன் களெல்லாம் வீணாய்ப் போகிறதே, என்று அவ்வகண்ட வெளியில் நாற்புறமும் பரணிட்டு, பறவைகளணுகாத வண்ணம் கவணெறிந்து, காத்து தானியக் கதிர்களைப் பக்குவ காலத்திலறுத்து அறுவடை செய்து, பக்குவப்படுத்தி, பாலிதீர்த்தக் கரையிலமைந்த, அரண்மனையிலுள்ள குதிரில் கொட்டிப் பண்படுத்தி, பிரம்மானந்தமாக, சாதி, சமய

குலங் கோத்திர வித்தியாசமின்றி, சமரச பந்திவைத்து சாப்பிட்டுக்கொண்டிருக்கும் சாப்பாட்டிற்கு சிவப்பிரகாசம் பிள்ளை, இராமலிங்கம் பிள்ளை, ராமசாமி பிள்ளை, ராம கிருஷ்ணசாமி, மாதவசாமி, குஞ்சுசாமி, ரெங்கசாமி, சுப்ர மண்யசாமி, ராமானந்தசாமி, அனுமந்தசாமி, அண்ணாமலை சாமி, நிரஞ்ஜனானந்தர் மற்றும் வருவார் போவார் யாவரும் வயிறாரவுண்டு சோம்பேறிகளாகக் காலங் கழிப்பதற்காக, எங்குநிறைந்த பரமானந்த அருணாசலேசுவரரை வேண் டிச் சுற்றிக்கொண்டிருக்கிறார்கள் போலும்

---

## ஸ்ரீ தாயுமானவர் பாடல்.

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக் கண்டகங்காரமென்னும் கல்லைப் பிளந்து நெஞ் சகமான பூமிவெளிகாணத் திருத்தி மென்மேல், பாராதி யறியாத மோனமாம் வித்தைப் பதித் தன்பு நீராகவே பாய்ச்சியது பயிராகுமட்டு மாமாயை வன்பறவை யணுகாதவண்ணம், நேராக நின்று விளை போகம் புசித்துய்ந்த நின்னன்பர் கூட்டமெய்த நினைவின்படிக்கு நீ முன்னின்று காப்பதே நின்னருட் பாரமென் றும், ஆராரு மறியாத சூதான வெளியில் வெளி யாகின்ற துரிய மயமே அண்டபகி ரண்டமு மடங்க வொரு நிறைவாகி யானந்தமான பரமே.

திருவண்ணாமலையில், திருவேங்கிடரமணய்யர் தனது தரிசு நிலத்தில் இருண்டு அடர்ந்த மரம், செடி, புதர் களுள்ள காட்டை அடியோடு வேறறவெட்டி, அதிலுள்ள கற்பாறைகளைப் பிளந்து, வெளிப்படுத்தியதைப்போல்

ரமனடியார்கள், மயக்கத்தைத் தரும் கரிய ஆணவமாகிய ரட்டைப்போக்கி, இல்லாமற் செய்தும், அகங்காரமாகிய ல்லைப் பிளந்தெரிந்தும், சங்கல்ப விகல்பம் தரும் மனமாகிய பூமி வெளியாகும்படி, மேலும் மேலும் பண்படத் திருத்தி—திருவேங்கிடரமணய்யர் திருத்திய நிலத்தில், நல்ல பலன் தரும் உயர்தர விதைகளைப் பதித்து, மலைமேலிருந்துவரும் நீர்வீழ்ச்சியை வாய்க்கால் வெட்டிக்கொண்டுவந்து, பாய்ச்சிப் பயிரானதைப் பறவைக்கூட்டங்கள் அணுகாத வண்ணம் காத்ததைப்போல—பரமனடியார்கள், அதில் யாரும் அறியாத மகாமௌன மென்னும் விதையை வித்தி, அன்புநீர் பாய்ச்சி, அப்பயிர் நன்கு வளரும்வரை, பெரிய மாயையாகிய வலிய பறவை வந்து அழிக்காமல், ஒழுங்காகக் காத்து—திருவேங்கிடரமணய்யர் தாங்கள் கதிர்களை அறுவடை செய்து, பக்குவப்படுத்தி, தனது அரண்மனையின் குதிரில் கொட்டி பிரம்மானந்தமாக சாப்பிட்டுக்கொண்டிருக்கும் சாப்பாட்டிற்கு, அய்யரின் உறவினர்கள் ஸ்ரீ அருணாசலேச்வரரை ஸ்தோத்திரம் பண்ணிச்சாப்பிட விரும்பப்படுவது போல—பரமனடியார்கள், பின்னர் விளையும் பேரின்பமாகிய போகத்தை யனுபவித்து, உஜ்ஜீவனமடைந்து உன்னுடைய மெய்யன்பர் திருக்கூட்டத்தை, ஸ்ரீமத் தாயுமானசுவாமிகள் அடைய தனதெண்ணப்படி, எத்தகைய நுண்ணறிவுடையாரும் காணாத, அநிர்வசனீயமான ஞான ஆகாயத்தில் தோன்றுகின்ற துரியவடிவே, பரம்பொருளே, காட்சியளித்துக் காத்தல் நினது திருவருட்கடமையாகுமென்று, தனது பாடலில், "காராருமாணவக் காட்டை" என்று உறுவகப் படுத்தினார்போலும்.



சித்திரை மீ நல்லவெய்யிலில், பகல் 12-மணி நேரமிருக்கும். மணல்வெளியின் மத்தியில், ஓர் அழகிய யௌவன மாது, மிக்க பசி, தாகம், களைப்புடன், ஒருகால் பொடி ஒருகாலிலொட்ட, உஷ்ணம் தாங்கமுடியாமல் தத்தளித்து ஓடும்போது, நெடுந்தூரம் பார்க்க, ஓர் சிறு மாமரம் தோன்ற, ஓடோடியும் சென்று, பட்டகஷ்டத்தினால் மாமரத்துக்குளிர்ந்த நிழலில் தன்னையறியாமல் வந்து வீழ்ந்து சற்றுநேரம் தணிந்து, களை தெளிந்து, சுகம் தோன்ற, பார்க்கும்போது பக்கத்தில் உல்லாசமாகச் சாய்ந்து அமரும் மேடை ஒன்றிருக்கக் கண்டு, அதிலவள் ஓய்யாரமாகக் கால்நீட்டிச் சாய்ந்து அமர, மேலேயுள்ள இளந்தளிர்களின் மெல்லிய பூங்காற்றுவீச, ஆனந்தமுற்றிருக்கும் சமயம், பக்கத்தில் கவனித்துப்பார்க்க, ஊற்று நீரோடை ஒன்றுதோன்ற, அதில் அவள் சென்று மதுரங் கனிந்த தீஞ்சுவைத் தண்ணீரை யுளமகிழவுண்டு, தண்ணீர் வரும்வழியை எறிட்டுப் பார்க்க, அங்கு அழகிய பெரிய மிகுந்த சுகந்த வாசனையுடன் பரிமளித்துக்கொண்டு ஓர் புஷ்பம் மிதந்து தோன்ற, அவள் மனதை ரஞ்சிப்பித்த அப்புஷ்பத்தினைத் தன் தலையின் ஜடையில் சூட்டி, ஆனந்த பரவசமுற்றிருக்கும் சமயம், வெய்யிலின் வெப்பந் தணிந்து, மாலை 3-மணியானபின்பு அம்மணற்பாங்கைக் கடந்து, வீடுவந்து, உப்பரிகையின்மேல் உல்லாசமாக உலாவிக் கொண்டிருக்கும்போது, வீதியில் மோட்டாரில் பாண்டுவாத்தியத்துடன், நோட்டீஸ் கொடுத்துக்கொண்டு போனார்கள். அவள் தோழியை நோக்கி, நோட்டீஸ் வாங்கிக்கொண்டு வரச்சொன்னாள், நோட்டீஸைப் பார்த்தாள். அதாவது, சிதம்பரம் தில்லையம்மன் தியேட்டரில், இரவு $9\frac{1}{2}$-மணிக்கு ஆனந்தாதீத அருள்விலாச பால 'ஸ்ரீ வள்ளிதிருமணம்'

ஜராஜ ஸ்ரீ நடராஜன் ராஜபார்ட், சுந்தராம்பாள் ஸ்த்ரீ
ர்ட் என்றிருந்தது. திருமணம் பார்க்க ஆவல்கொண்டாள்.
ன் ஸீட் ரிசர்வ்பண்ண ஆர்டர்கொடுத்து, நாடகத்திற்குச்
சன்று, முன் ஸீட்டிலமர்ந்து, நாடகம் நிகழ்ந்து கொண்
ருக்கிறது. அவனுடைய அதிரூபலாவண்யமான விநோத
சித்ர கோலாகலங்களை எண்ணி, அவள் மனம் ஸ்ரீமந்
டராஜனிடத்தில் தாவ, அவனுமிவளை யுளமகிழ்ந்து கருணை
நாக்கத்துடன் பார்க்க, இருவர் பார்வையு மொன்று பட்டு
விட்டது. ஸ்ரீ வள்ளியை மணக்கவேண்டிய சந்தர்ப்பம்,
ஸ்ரீராஜ ராஜ ஸ்ரீநடராஜன் தனது ஸ்வய புத்தியினாலோ,
ாமப்பயித்தியத்தினாலோ, மோக ஆசைமேலீட்டினாலே, தன்
ழுத்திலணிந்திருந்த ரமணீய சுகந்த மிகுந்த, ரோஜா மலர்
மாலையை, மேடைமேலிருந்தபடி, ரிஸர்வட்சேர் முன் ஸீட்டி
லிருந்த லேடி யௌவனமாதின் கழுத்திலணிந்து, பலரு
மறிய அவள் கையைப்பிடித்திழுத்து உள்ளே சென்று,
அங்கு தயாராகவிருந்த மோட்டாரிலேறி, வீடு சென்று,
ஏழடுக்கு உப்பரிகையின்மேல் ரதிகேளி விலாச சயன அறை
யில் இருவரும் ஒன்று பட்டுப்போனார்கள். ஹாஹா! என்ன
ஆச்சர்யம்!

---

# இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா.

கோடையிலே யிளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த குளிர் தருவே தருநிழலே நிழல் கனிந்த கனியே, ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரேயுகந்த தண்ணீரிடைமலர்ந்த சுகந்த மணமலரே, மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே மென்காற்றில் விளை

**சுகமே சுகத்திலுறும் பயனே, ஆடையிலே யெனைமணந்த மணவாளா பொதுவிலாடுகின்ற வரசே யென் னலங்க லணிந்தருளே.**

சித்திரை மாதம் கல்ல வெய்யில் பகல் 12-மணிநேரம் மணல் வெளியின் மத்தியில், ஓர் யௌவன மாது ஒருகால் பொடி ஒரு காலில் ஒட்ட, அகப்பட்டு துடித்து, ஓடோடியும் மாமரத்தினடியில், மிகக்குளிர்ந்த நிழலில் வீழ்ந்து, எப்படி களை தெளிந்தாளோ—அதைப்போல முன் ஜன்ம பரிபக்குவ யௌவன வள்ளற்பெருமான் வடலூர் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளும், தனதறியாப் பருவத்தில் உலக விஷய சுகதுக்க கஷ்டநஷ்ட மனக்கோட்டத்திலகப் பட்டு, அக்கொடிய மனவெப்பத்தின் துன்பத்தை சகிக்க மாட்டாமல் உண்முகத்தின் கனிந்த நிழலில் வீழ்ந்து, உபசாந்தமென்னும் குளிர்ந்த தன்மை மேலோங்க—யௌவன மாது களை தெளிந்து பார்த்து பக்கத்திலுள்ள மேடைமேல் உல்லாசமாக அமர்ந்திருக்கும்போது வாடி வதங்கின தனது மிருதுவான தேகத்தில் சுகந்தரும் மெல்லிய பூங்காற்று வீச மகிழ்ந்து ஓடைநீர் பருகிப் புஷ்பஞ்சூடி ஆனந்தபரவச முற்றிருந்ததைப் போல—ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் மிகுந்த அனுபவமென்னும் மேடைமேலேறி பரம சகஜ ஆனந்தமென்னும் தென்றற் காற்றுவீசப் புளகாங்கித முற்று ஞானானந்தவாரிதி யாகிய ஓடையிற் சென்று தாகந் தணிய மௌனத் தீஞ்சுவைத் தண்ணீரைச் சாப்பிட்டு அந் நீரிடைக்கிடைத்த துரியவெளி யென்னும் பிரம்மானந்த சுகந்த புஷ்பத்தினைத்தானணிந்து, ஆனந்தபரவசமாய் அந்த யௌவனமாது நாடகம் பார்த்துக்கொண்டிருக்கும் போது, ராஜபார்ட், ஸ்ரீராஜ ராஜ ஸ்ரீ நடராஜன் முன்னீட்டிலுட் கார்ந்திருந்த யௌவன கன்னிகைக்கு தானணிந்திருந்த

மணமிகு மலர்மாலையை அவள் கழுத்தில் போட்டு, இழுத்துக்கொண்டு போய் எழுடுக்கு மெத்தையின்மேல் ரதிகேளி விலாஸ சயன அறையில் இருவரும் எப்படி ஒன்றுபட்டுப் போனார்களோ, அதைப்போல—ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளும், தனது அநுபவநாடகத் துயர்காணு நிலைக்காட்சியைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, சிதாகாசப்பெருவெளியில் ஆனந்தநிருத்தமிடும் ஸ்ரீராஜ ராஜ ஸ்ரீமந் நடராஜப்பெருமான் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமியை, உம்மை நான் ஆட்கொண்டேனென்று ஞான ரஞ்சிதமாலை சூட்டி, தனது யதார்த்த ஸ்வரூப மென்னும் சுபேச்சை, விசாரணை, தனுமானஸி, சத்துவாபத்தி, அஸம்ஸத்தி, பதார்த்தாபாவினி, துரியகா என்னும் ஏழுநிலைகளின் மேலுள்ள துரியாதீத குருதுரிய பரவெளியில் ஒன்றுபட்டார்கள். இதை இராமலிங்க சுவாமிகள் அருட்பாவில் "கோடையிலே இளைப்பாற்றி" என்று உருவகப்படுத்திப் பாடி அமைத்தார் போலும்.



சிதம்பரம் அண்ணாமலை (யூனிவர்ஸிட்டி) சர்வகலா சாலையில் படித்துவரும் தேசபக்தி நிறைந்த, ஆடம்பரமற்ற பரிசுத்தமான உடைகளணிந்த, நெஞ்சம் களங்கமில்லாத, யாவரிடத்திலும் அன்புபூண்ட, பக்தி மிகுந்த, உத்தம குணங்கள்வசித்த, சூட்சும புத்தியுள்ள, தொடுத்ததை முடிக்கும் வைராக்கிய அஞ்சாத நெஞ்சுள்ள ஆத்மநாதன் என்னும் யுவகன் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலிய உத்தம குணங்கள் நிறைந்த சிறுமியான, அம்மாப்பேட்டையிலுள்ள அக்காள்மகள் லோகநாயகியை மணந்து தமக்கை வீட்டிலேயே விட்டுத் தனது படிப்பை நிறுத்தி, அதமமாகிய அடிமைத்தொழில் உத்தியோகம்செய்ய மனமில்லாமல், உத்தமமாகிய சுதந்தர வாழ்வு வாழ எண்ணி, சென்னையம்

பதிகோமளீஸ்வரன்பேட்டையில் (எஞ்ஜினீயரிங் வொர்க்ஸ்) கைத்தொழிற்சாலை ஒன்று நியமித்து, உத்தம வழியில் பொருளைச் சம்பாதித்துவரும்நாளில், எஞ்ஜினீயர் ஆத்ம நாதனுக்கு, சிதம்பரம் காலேஜ் கிளாஸ்மெட் நண்பன் சிவானந்தம் பிள்ளைக்கு விவாஹமென்று நிருபம்வர, மிஸ் லோகநாயகியின் ஞாபகமும் போராட, சென்னை எழும்பூரில் இரவு 9-30 மணிக்கு புறப்படும் போட்மெயிலில் ஏறினர். அம்மாப்பேட்டையில் லோகநாயகி தனது உயிர்த்தோழி ஞானம்பாளுடன், மாலை 4-மணிக்கு உத்தியான வனத்தி லுலாவி, உல்லாச மேடையிலமர்ந்து, மெல்லிய காற்றில் சல்லாப முற்றிருக்கும் சமயம் தோழியை நோக்கி, என்ன! என்மனமானது சின்னாட்களாக ஓர்வித மாறுதலையடைந்து வருகின்றது. புத்தி ஓர்விதமான நிலையிலில்லை. நான் புஷ்ப வதியாகி வருஷம் இரண்டாகின்றது. எனது தாயும் தந்தை யும்,என்னைப்பற்றிக் கவலைகொள்ளவில்லை,என் மனதிலுள்ள கவலையை என்ன சொல்லப்போகிறேன், ஒரு சமயம் எனது காதலர் என்னையே மறந்திருப்பாரா? என்ன! அவரு டைய க்ஷேமத்தை யெப்படி அறிய முடியும், என்னுயகரை எப்பொழுது கண்குளிரப்பார்த்து, வாயாரப் பேசி, மனமார மகிழ்ந்து, சந்தோஷ சாகரத்திலிருப்பேன். நித்திரைக்குச் சென்றாலோ நித்திரையும் வரமாட்டேனென்கின்றதே ஹா! ஹா!! என்ன இப்படி தேகத்தைத் தகிக்கின்றது, இது தான் விரகவேதனை என்பதோ? ஏண்டி; உனக்கேதேனும் என் நாயகரைப்பற்றி சமாசாரம் தெரியவருமா? ஆனாலும் நீ நாளைகாலை சிதம்பரம் அனந்தேச்வரர் தெரு 5-நெ. வீடு ஆனந்தவிலாஸம் சென்று அந்தரங்கமாய் ஏதேனும் சமா சாரம் வந்ததா எப்பொழுது வருவார் என்று தெரிந்துவா, எனப் பலவாறு பிதற்றிப் பின்னர் வீடுசென்று, வேதநாயகம் பிள்ளை எழுதிய மாதரொழுக்கம், பதிபக்தி, மாதர் நீதிமஞ்

சரி, குடும்ப ஒழுக்கம், கற்புநிலைமை, உத்தம பதிவிரதா சிரோமணிகளின் சரித்திரம், ஆண்டாள்பக்தி, சக்குபாய் சரித்திரம் முதலிய புராதன உத்தம பக்திமாதர்களின் சரித்திரத்தைத் தனக்குத் தூக்கம் வரும்வரையில் படித்து நித்திரைக்குப் போய்விட்டாள்.

எஞ்ஜினீயர் வருகையை எதிர்பார்த்து சிதம்பரம் ஸ்டேஷனில் கார் காத்துக்கொண்டிருந்தது; ரயிலை விட்டு இறங்கினார். எஞ்ஜினீயர் நண்பர்களும், கலியாணத்திற்கு வந்திருந்தவர்களும், எதிர்பார்த்திருந்தபடி எஞ்ஜினீயர் தோன்றவில்லை. தலைக்கு ஹாட்டு, கழுத்திற்கு நெக்டை, காலர், ட்ரௌஸர், கோட், ஸ்டாக்கிங்ஸ், பூட்ஸ் முதலியவை யில்லாமல், ஆடம்பரமற்ற பரிசுத்த உடையணிந்த பெரியார் எஞ்ஜினீயர் வந்து காரிலமர பூம் பூம் என்று ஊதி மோட்டார் வேகமாய்ச் சென்று அனந்தேச்வரர் தெரு 5-நெ. ஆனந்தவிலாசம் சென்று நின்றது. தாய்தந்தை வர வேற்புக்கூறி உபசரித்தார்கள். இவர் விஷயமாய் நேற்றுமாலை லோகநாயகி கட்டளைப்படி தோழி ஞானம்பாள் இங்கு விஜயம்செய்து, சமாசாரம் தெரிந்து, சந்தோஷச் செய்தியை ஓடோடியும் வந்து மிக்க ஆவலோடெதிர்பார்த்திருந்த லோகநாயகியிடம் உனது காதலர் ஆத்மநாதம்பிள்ளை வந்து விட்டார் என்றாள். ஆஹா! என்ன நிஜந்தானா!! நீ நேரில் பார்த்தாயா, பார்த்தது உண்மையானால் எப்படியிருக்கிறார், சொல் பார்ப்போம் என்றாள். மலர்ந்த புன்னகையுள்ள முகத்துடன் உன்னை மணந்தபோது இருந்ததைவிட சற்று தேகம் பருத்திருக்கிறார் என்றாள்.

எஞ்ஜினீயர் ஆத்மநாதம்பிள்ளை தனது ஆப்த நண்பர் சிவானந்தம்பிள்ளை விவாஹம் நாளைய தினமானபடியினால் இன்று சாதாரணமாக வாக்கிங் போவதுபோல அம்மாப்

பேட்டை சென்று, தனது காதலியைப் பார்க்காமல் பார்த்து வருவோமெனத் தீர்மானித்து, அம்மாப்பேட்டைக்குத் தெற்கு நோக்கி ரோட்டின் பாதிவழி சென்றுகொண்டிருக்கிறார். லோகநாயகி தனக்குள் நினைப்பது:—"திடீரென்று என்ன காரணமாக எனது காதலர் வந்திருக்கலாம்! எப்பொழுது அவரைப் பார்க்கும் பாக்கியம் கிடைக்கும்? ஒரு வேளை வந்தவேலை முடிந்து மறுநாள் ட்ரெயினில் போய் விடுவாரோ என்னமோ? இதற்கென்செய்வது? என்னுடைக் காதலரை எப்பொழுது பார்ப்பேன்? ட்ரெயினில் வந்ததில் ஏதேனும் அலுத்துக் களைத்து உறங்குவாரோ? ஹா!........ ஈதென்ன என்னுயிர்க்காதலரே, நீவிர் நேரில் நிற்பதுபோல் தோன்றுகின்றதே ஹோ! திடீரென்று மார்போடிறுகத் தழுவி முத்தங்கொடுத்து ஓடுகின்றாரே! அதோ........ போகின்றார் அதோ........போகின்றார் கூப்பிடு....கூப்பிடு.... சே, சே....இல்லை....எனது எண்ணத்தின் வடிவம்..........." தோழி தனக்குள் நினைப்பது, லோகநாயகி தனது புருஷனிடத்துள்ள வாத்சல்ய மிகுதியினால் காமலாகிரி மீறி மனம் பைத்தியம்பிடித்துவிட்டது, நேரில் உருவம் தோன்றுகின்றது என்கிறாளே இதற்கு என்ன செய்வதென்று திகைத்திருக்கிறாள்.

லோகநாயகி சித்தம்தெளிந்து, புத்தி சற்று நிதானித்து, இனி ஒரு நிமிஷமும் இங்கிருக்கலாகாது, எனது தந்தையும் தாயும் உன் நாயகனைப்போய்ப் பார்த்துவா வென்று சமீபத்தில் சொல்வதாகத் தெரியவில்லை, எனது உயிர்த் தோழியாலும் இவ்விஷயத்தில் ஒன்றும் பயன்படாதென்றே நினைக்கிறேன் என்று தீர்மானித்துத் தனது வீட்டையும் அன்னையையும் அப்பனையும் அப்பொழுதே மறந்தாள். அம்மாப்பேட்டையை விட்டுப் புறப்பட்டு சாலை வழியாக வடக்கு நோக்கி வந்துகொண்டிருக்கிறாள்.

தானெதிர்பார்த்த உள்ளத்தைக் கொள்ளைகொண்ட உயிர்க் காதலர் எதிரில் வந்ததை பிரத்தியட்சத்தில் பார்த்தாள். அன்னவரும் எதிர்பார்த்த காதலியைத் தரிசித்தார். அன்பு மேலீட்டினாலே இவளும் அவ்விசாலமான வெட்டவெளியில் எங்கிருக்கிறோம், என் செய்கிறோம், என்பதையும் தனது ஒழுக்கம், தேகநிலை, சாலையில் நடந்துவந்தது, முற்றும் மறந்து, தனது நாயகனை இன்புறத் தழுவி, தன்னையே மறந்து, நாயக நாயகி இருவரும் ஒன்றுபட்ட மனதாய் லயித்து ஆனந்தாதீதரானார்கள்.

## சைவ சமய ஆசாரிய சுவாமி
## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்,
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சியானாள், அன்னை
யையு மத்தனையு மன்றே நீத்தாள் அகன்றாள்
அகலிடத்தா ராசாரத்தைத், தன்னைமறந்தாள்
தன்னாமங்கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை
தலைவன் தாளே.

ஆத்மநாதனை லோகநாயகி எப்படிக் காதலித்து எதிர்பார்த்துத் தன்தோழியினால் முதலில் பெயரை அறிந்து மனமகிழ்ந்து யோக க்ஷேமங்களையும் இருக்கும் தன்மையையும் விசாரித்ததுபோல—திருநாவுக்கரசு சுவாமிகளும் பரசிவத்தினை நாயகனாகவும், தன்னை நாயகியாகவும் பாவித்து, ஒருமைப்பட்ட மனத்துடன் கசிந்துருகி முதலிலே திருநாமத்தைக்கேட்டும், அவன்மேற்கொண்டிருக்

கும் அன்பினால் மூர்த்தி தன்மையைத் தியானித்து விசாரித்தும்,—லோகநாயகி தன் நாயகன் எங்கு எவ்வூரிலிருக்கிறாரென்று விசாரித்து அவரையடைய மிகுந்த பைத்தியம் பிடித்ததைப்போல — திருநாவுக்கரசு சுவாமிகளும் திரு ஆரூரை விசாரித்தும், அத்திரு ஆரூர்க் கடவுளையே அடைய ஞானப் பைத்தியம் பிடித்தும் — லோகநாயகி இருந்த ஊரையும் பெற்ற தாயையும் தகப்பனையும் தோழியையுமறந்து ஒழித்துப் புறப்பட்டுப் போனதைப்போல திருநாவுக்கரசு சுவாமிகள் தனது ஊரையும் உலக நடைக்குள்ள உறவினரையும், தன் மாதா பிதாவையும் அன்றைக்கே முற்றுந்துறந்து ஒழித்து அவ்விடத்தை விட்டு நீங்கினார். லோகநாயகி விசாலமான சாலைவழியே நாயகனைக் காணத் தேடிச்செல்ல நாயகனுமெதிர்ப்பட, உலக ஒழுக்கம் நிலைமை முழுதும் அந்த விடத்தில் மறந்து, இன்புறத்தழுவி ஆனந்தமேலீட்டால் பிரக்ஞையே யில்லாமல் ஆத்மநாதனுடன் மனம் இரண்டற்று ஒன்றானதைப்போல—திருநாவுக்கரசு சுவாமிகளும், தனது அந்தர்முக சூட்சும அகண்ட அனுபவத்தில் நின்று உலகத்திலே உள்ளவர்களது ஒழுக்கத்தை முழுவதும் மறந்து, மேலும் அநாத்மாவாகிய ஸ்தூல சூட்சும தத்துவ குப்பை நிரம்பிய தன்னையும் தன் பெற்றோர்களா விடப்பட்ட தன்னுடைமைத்தையு மறந்து ஆன்மாவாகிய தலைமகனுடைய அந்தரங்க வுலக நிர்க்குண அகண்ட துவாதசாந்தப் பெருவெளியில், காண்பான், காட்சி காணப்படு பொருள் என்னும் திரிபுடி நீக்கி அத்வைத ஞான நிலையில் திருவருளோடு இரண்டறக் கலந்தா ரென்பதைப் பக்திமான்கள் தனது யதார்த்த நிலையாகிய சொரூபத்தை எளிதிலுணர்ந்து அநுபவிக்குமாறு, பக்தி யோக ஞான சோபான முறையில் நமது திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பதிகத்தில், முன்னம் அவனுடைய நாமங் கேட்

டாள், என்னும் பாட்டில் மிக்க அழகாய் அமைத்தார் போலும்.



# மாயா விநோத மாளிகையின் குடும்பக்காக்ஷி.



இந்த விநோத மாளிகை கருவூரைச்சேர்ந்த பண்டித புரத்தில் சுக்கிலாச்சாரி சுரோணிதாச்சாரிகள் புகுந்து, அயனவன் துணையால் மூலக்கால்கள் நிறுத்தி, அதற்கு மேல் விமான வேலைகள் செய்யப்பட்டுள்ளது.

உற்றுநோக்கின் நமது தேகமே ஓர் மாயா விநோத மாக்ஷிமைதங்கிய மாளிகையல்லவா? அம்மாளிகையிலும் ஒரு வீட்டிலுள்ள சம்சார பரிவாரங்கள் போன்று தலைவன், தலைவி, தாதிகள், புத்திரர்கள், காவற்காரர்களாகிய வீரர்கள், இவர்களின் பணிவிடைக்காரர்கள், மற்றும்பல பரிவாரங்களுமுள்ளன. விசாரிக்கப்புகின் மிக்க சம்சாரியான குடும்பமே இக்குடும்பம்.

இக்குடும்பத்தை ஆழ்ந்து நோக்கின் மாயாமயக்கத்தினால் ஓயாக்கவலை கொண்ட எல்லையற்ற தொல்லையாகவே தோன்றும், கவலை நிறைந்த அதை சுத்த நித்திய தரித்திரத்தில் மூழ்கின குடும்பமெனவே நினைக்கலாம்.

இந்த தரித்திரம் பிடித்த மாளிகைக்குத் தினந்தோறும் குளித்தல், புசித்தல், அசுசியை வெளிப்படுதல் முதலியவைகளால் பழுது பார்க்கவேண்டும். ஒருநாளைக்கு கவனிக்கா விட்டாலோ களைத்து, இளைத்து, மெலிந்து வாடி

விடும், கண் பஞ்சடையும், காது கேளாது, கால்கள் சோர்ந்து விடும், ஆகவே இது நித்திய தரித்திரம் பிடித்த மாளிகையல்லவா! காலந்தவறாது ஒவ்வொரு நாளும் குறை வில்லாது பழுதுபார்த்துப் போஷணை செய்து வரவேண்டும்.

இவ்விநோத மாளிகையானது இரண்டுகால் நிறுத்தி அதன்மேல் வீடுபோல் கட்டப்பட்டும், ஜன்னல்கள் போல் கண், காது, மூக்கு, வாய், மலத்துவாரம், நீர்த்தாரை முதலிய ஒன்பது துவாரங்கள் அமைக்கப்பட்டும், வீட்டினின்று சாக்கடை வெளிப்படுவதுபோல கண்பீளை, காது குரும்பி, மூக்குச்சளி, வாயினின்றுவரும் ஊத்தைக்கோழை, மலத்துவாராதிகளால் மலஜலம் முதலியன வெளிப்படுகின்றன. மலஜலங்களை அப்போதைக்கப்போது கவனித்து சுத்தம் செய்யாவிடில் சகிக்கமுடியாத நாற்றமெடுத்துவிடும். அந்தோ! அசிங்கம். பழுது வந்து விடும். வீட்டை துயிலம், சரம், தண்டியம், வாரை முதலியன தாங்குவதைப் போல இவ்வீட்டையும் கெட்டியாயுள்ள எலும்பினாலாய கால், துயிலம், சரம், தண்டிய முதலிய தாங்கும் பலமுள்ள கருவிகள் அமைந்திருக்கின்றன. வீட்டின் மேற்கூரைக்கு விழல்புல் வேய்ந்திருப்பதுபோல, தோல் மயிர் இவைகளடர்ந்து வளர்ந்து மூடிக் கொண்டிருக்கின்றன.

அந்த மாளிகையில் வசிக்கும் மன்னர்பிரான் யாரெனில் ஜீவனென்ற மஹாப்பிரபு மைனர். இவர் எப்பொழுதும் சிற்றின்பப் பிரியர். இந்தப்பிரபு தனது காதலியின் பக்கத்தில் சதா பிரியாமலே அமர்ந்திருப்பார். காதலி காலாலிட்ட வேலையைப் பிரபு மைனர் தலையால் வணங்கி, கையால் செய்வர். அதிகம் சொல்வானேன்? அம்மின்னாளிட்டதே சட்டம், அவள் வாக்கே வேதவாக்கு, ஆசைக்காதலி ஜீவனென்னும் பிரபுக்கு மோஹமென்னும் மருந்தைக் கொடுத்து பித்தம்

தலைக்கேறும்படி செய்து தன் வசப்படுத்திக்கொண்டிருக்கிறாள். அவளோ காமவெறி கொண்ட காதகி. அவள்பேரைச் சொன்னாலே உலகமெல்லாம் நடு நடுங்கும். அம்மாதரசியினாலேயே ஜகமனைத்தும் மயக்கப்படுகின்றன. அந்த சீமாட்டியாரெனில் மஹாராணி மனோவதியே இப்பாதகி இடைவிடாது ஒவ்வொரு நிமிஷமும் தனது கட்டழகனுடன் சுகித்திருக்கு முயற்சியையே தேடுவாள். எதைக்கண்டாலும் தனக்கு வேண்டுமென்று ஆசைவைப்பாள். அதைச் சம்பாதிப்பதற்குப் பிரபு ஜீவானந்தனைத் தூண்டுவாள். அவர் முடிக்காதபட்சத்தில் அவரைப் பலவழியிலும் வில்லம்பினுமிக்க சொல்லம்புகளாகிய பாணப்பிரயோகம் செய்வாள். மலைத்து அமர்ந்திருப்பாள். எப்போதும் ஜீவானந்தப் பிரபுவை தனது சொற்படியே நடத்திவருவாள். அப்படி, நடக்காவிட்டாலோ காரியம் பூர்த்தியாகும் வரையில் ஓரே மூர்க்கமாயிருந்து தனது தாதிகளைக்கொண்டு இடைவிடாது இம்சிக்கச் செய்வாள். அத்தாதிகள் யாரெனில் புத்தி, சித்தம், அகங்காரம் என மூவராகும். இவர்களைக் கொண்டுதான் கணவனுக்கும் தனக்கும் வேண்டிய சுகபோகங்களைச் செய்துகொள்ளுகிறாள். இக்குடும்பத்திற் குழைப்பதற்கே இவர்களை அடிமைப்படுத்தி யிருக்கிறாள். அம்மனோவதி என்னும் இராணி தான் நினைத்த காரியத்தை உடனே புத்தியினிடங் கூறுவாள். அவள் சித்தத்தினிடம் கூறுவாள். அகம்பாவத்தோழியும் அதை ஆமோதிப்பாள்.

அம்மனோவதிக்கு பத்து புத்திரர்களுண்டு. அவர்கள் கண், காது, மூக்கு, நாக்கு, துவக்கு, வாய், கை, கால், அபானன், குறி, முதலியவர்கள். இவர்களைக் கணவன் சொற்படி ஒருபோதும் கேட்கவிடுவதில்லை. சதாகாலமும் தனது புத்திரர்களை தனது சுகத்திற் குழைக்கும்படியே செய்துகொண்டிருக்கிறாள். இவ்விதமாக மாயா விலாச சரீரமாகிய

விட்டை இடைவிடாது பரிபாலனம்பண்ணிவருகிறாள். தான் குடியிருந்த வீடாகிய சரீரத்திற்குப் பழுதுவந்தால் தனது பரிவாரங்களோடு மற்றொரு வீடாகிய சரீரத்திற் குட் சென்றுவிடுவாள்.

தனது புத்திரர்களைத் தனது சுக நன்மையின் பொருட்டு வெளியிலிருந்து கொண்டு வரும்படி செய்து அப்படி அவர்களால் கொண்டுவரும் யாவற்றையும் கணவனோடு சேர்ந்து தானும் புசிப்பாள். தனது ஆசைநாயகன் ஜீவானந் தன் என்றைக்கேனும் இவளிடம் ரமிக்காமலிருக்கக் கண் டால் தனது புத்திரர்களை ஏவிவிட்டு அவர் தன்னிடத்தில் ரமிக்கும் வரையில் இம்சிக்கச் செய்வாள். அவளைப்போல கொடிய காதகி, பாதகி, கிராதகி எங்குமே கிடையாது. அவள் நெஞ்சழுத்தம் ஒருவருக்கேனும் வாராது. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஈஸ்வரன் யாரையுமே மதியாள். மானதக் கோட்டை கட்டி, ஆகாயத்திற் பந்தல் போட்டு, இந்திரஜாலம் மகேந்திர ஜாலமுதலிய அரிய வித்தைகளை எல்லாம் செய்வாள். தாசி வேசிகளைப்போல தலைவனைப் பல முறை அவமானமாகக் கூறுவாள். அந்தோ! அவள் வலையில் வசப்பட்டு விழிக்காத ஜீவபிரபுக்களில்லை. எக்காலத்தும் மனோவதியின் மயக்கத்தால் மாண்டவர்கள் கோடானகோடி. அவள் ஒவ்வொரு விஷயங்களிலும் பரந்து கொண்டே யிருப்பாள். தனது கணவனை (புண்ணியமென்னும்) ஐஸ் வரியத்தை யொழித்து ஒட்டாண்டியாக்கி அவரை வெளி யிற்கிளம்ப வொட்டாமலும் அந்தப்புரத்தை விட்டகலாம லும் (பாவமென்னும்) காவலில் வைத்திருக்கிறாள். அம் மஹா புனிதவதியிடத்தில் ஐந்துவீரர்களுண்டு. அவர்களா லேயே இம்மாளிகை காக்கப்பட்டிருக்கின்றது. அவர்கள் அரண்மனை போன்ற பெரியவீட்டில் நவத்துவாரங்களிலு மிருந்து காத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் யாரெனில்?

பிராணன், வியானன், அபானன், உதானன், சமானன் இவர்கள். இவ்வீரர்களிடத்தில் நாகன், கூர்மன், தேவதத்தன், கிரிகரன் முதலியோர் பணிவிடை செய்கின்றார்கள்.

மனோவதி என்னும் இராணியானவள் ஹிருதய மென்னும் குகையாகும் அந்தப்புரத்திலிருந்து, புத்தி முதலியோர் கைகால் பிடிக்க, தனது கணவனோடு கொஞ்சிக் குலாவிக் கொண்டிருப்பாள். பிராணன் என்னும் வீரன் ஜாக்ரூபனாய் அரண்மனைக்கபாயம் வாராமற் காத்துக்கொண்டிருக்கிறான். அபானன் என்போன் அன்னாசயத்திலிருந்து பாகாதிகளைச் செய்கிறான். உதானன் என்போன் ஆகாராதிகளை உள்ளே செலுத்துகிறான். ஸமானன் என்போன் அவரவர்கட்கு சமமாக பங்கிட்டுக் கொடுக்கிறான். வியானன் என்போன் இவ்வரண்மனை முழுவதும் சுற்றிச் சுற்றிக் கொண்டிருக்கிறான். இவனுடைய பத்து புத்திரர்களும் அவரவர்கள் தங்கள் தங்களுக்குள்ள வேலைகளைச் செவ்வனே செய்து வருகின்றார்கள். எல்லோரும் தனது மாதாவிடத்தில் அத்யந்த பிரீதியுடையவர்களே. அவரவர்கட்கு வேலையாதெனில்:—காது தனது மாதாவிற்கு வெளியிலிருந்து சொல்லுபவர்களுடைய வார்த்தையின் சத்தத்தை யுணர்ந்து கூறுகிறான். கண் வெளியிலிருக்கும் பதார்த்தங்களின் காக்ஷிகளைப் பார்த்து மாதாவுக்குத் தெரிவிக்கின்றான். மூக்கு அம்மாவுக்கு உயர்ந்த வாசனைச் சாமான்களைக் கொண்டு போய்க் கொடுக்கிறான். துவக்கு தன் வீட்டிற்கு வந்தவர்களை யறிந்து உபசரிக்கிறான். நாக்கு அம்மாவிற்கு ருசியான பண்டங்களைக் கொண்டுபோய்க் கொடுக்கிறான். கால் தனது மாதா நினைத்த விடத்திற்கு (பூதக்கண்ணாடிப் பெட்டிக்காரன் ஜனங்கட்குப் படங்காட்டி சம்பாதிக்க கோரிபோலுள்ள கைலாசப்பெட்டியைத் தோள்மேல் சுமந்து கொண்டு திரிவதைப் போல) வீட்டையே தூக்கிக்கொண்டு போகிறான். கை தனது

மாதாவிற்கு வேண்டிய சாமான்களைக் கொண்டு போய்க் கொடுக்கிறான். வாக்கு மாதா கூறியதை பிறருக்கு உரைக்கின்றான். வாயு வீட்டின் வெளிப்புரத்தில் கெட்டசாமான்களை பொறுக்கித்தள்ளுகிறான். உபஸ்தம் தனது மாதவிற்கு அடிக்கடி ஆனந்தத்தை யுண்டுபண்ணுகிறான். ஆகவே இவள் தனது புத்திரர்களை மிக்க நயமாக குடும்ப வேலைகளை ஒற்றுமையாகச் செய்யும்படி சிக்ஷித்திக்கிறாள்.

அந்தோ! இந்த ராக்ஷஸிவசப்பட்டு மஹாப்பிரபு திண்டாடுகிறார். அவர் என்ன செய்வார் பாவம், சற்று சாந்தமாக நிம்மதியாயிருக்க ஒரு நிமிஷம் விலகவெண்ணினேலர் நையப்புடைக்கின்றாள். சிலசமயம் அன்னவளுக்கு களைப்பு வருமாயின் பரிவாரங்களாகிய புத்திரர்களையும், தாதிகளையும், அழைத்துக்கொண்டு இருட்டறைக் குகைக்குள் ஒடுங்கிவிடுவாள்.

இவளை யெப்படியாவது தன் வசப்படுத்த முயன்றும் தன்னலாகாமல் பலர் தவிக்கின்றார்கள். இவளை சில மஹான்கள் தன்வசப்படுத்தி சுதந்திர புருஷர்களாகவும் விளங்குகின்றார்கள். அவர்களைக் கேட்டவ்வழி நடக்கபோவோமெனவெண்ணினாலோ அதைப்பலவழியாலும் தடுத்துவிடுகிறாள். ஹா! ஹா! இக்காதகியின் கொடுமை சகிக்க முடியாததே.

இவளிடத்தில் காம, குரோத, லோப, மோஹ மென்னும் ராக்ஷஸ குணங்களிருக்கின்றன. அவைகளாலேயே இவ்வுலகத்தை வென்று வருகின்றாள் போலும். எவ்வளவோ அறிவாளிகளும், சாமியார்களும், தம்பிரான்களும், யோகிகளும் இவளை ஜெயிக்கமுடியாமல் வருத்தமடைந்தார்கள் அடைகிறார்கள், அடைவார்கள். ஏதோ ஒருவர் இருவர் இவளது மாயையிலிருந்து வீடுபெற பிரம்ம பிரயத்தனம் செய்கின்றார்கள். இவளை எவ்விதத்திலும் வசப்படுத்தலாமென

கர் யோசிக்கின்றார்கள். விளக்குவாரில்லாமல் வழி றை தெரியாமல், அலைந்தலைந்து அலமந்து திரிகின்றவர் னேகர். விளக்குமாற்றால் விளக்கினால், அன்னவள் டங்கு முறையி லடங்கிவிடுவாள்.

அந்தோ! இந்த ராக்ஷஸியின் குடித்தனத்தை நினைக்கக் லநடுங்கும், பயம் தொடுக்கும். இவள் ஒருநிமிஷத்தை மாகக்குவாள். யுகத்தை நிமிஷமாக்குவாள். ஒரு நொடிப் ாதில் வெகுதூரஞ் செல்வாள். இவள் வல்லமையை நம் ற் கூறவொண்ணாது. இம்மனோவதியின் கொட்டத்தை க்குவதற்காகவே அடக்கிவைத்த பெரியார்கள், யாவ ் எளிதில் வழி தெரிந்து கொள்ளட்டுமென்று பிரபல ஸ்திரங்களாகிய கைவல்யம், பகவற்கீதை, ஞானவாசிஷ் ம், ரிபுகீதை முதலியன செய்யுள் உரையாகவும் வசன டையாகவும் அனுபவசாஸ்திரங்கள் ஏராளமாகச் செய்துள் ர்கள். அதற்காகவே துறவிகள் எத்தனம் செய்கின்றார் . அதற்காகவே தீர்த்தயாத்திரை, சிவபூஜை முதலியன ய்கின்றார்கள். அதற்காகவே கோயிற் குளங்களும் ஏற் டிருக்கின்றன. அதிகம் சொல்வானேன் மனோவதியை க்கிக் கீழ்ப்படியச் செய்வதற்காகவே கண்மூடி, குகை ரில் தபஸ்செய்கின்றார்கள். எங்கு சென்றாலும் இம்மாது ராணி மனோவதியின் வார்த்தையே கேட்கப் கின்றது.

இவளை யடக்கிவிட்டால் சுதந்தர புருஷராய் மோக்ஷ மடைந்து விடலாம் :—

இந்த விடத்தில் இதைப் படித்துக்கொண்டிருக்கும் வாசகர்கட்கு ஓர் வார்த்தை :—

மாது ஸ்ரீ இராணி மனோவதி இப்பொழுது எங்கே யிருக்கின்றாள்? புருவ மத்தியில் சகல தத்துவங்களுடனுங் கூடி நம் செய்கையைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள்.

மாய் மையை இங்குக் கொடுக்க மாட்டேனென்னும் நம்பிக்கை உங்களுக்கு முண்டு. இம்மையை அ கொள்வதற்கு எளியவர் பணக்காரரென்னும் வரன் மு கிடையாது. என்றாலும் இம்மையை நல்ல அறிவாளிகள் ஞானவான்கள் முறையே கையாண்டு வந்தார்கள். இம் உத்தமர்கட்கு ஓர் அணிகலம்போல் துலங்கும் ரத் ஆனாலும், இம்மையை மேலும் மேலும் விடாமுயற்சியுட கையாண்டு வரின் பூரண சந்திரனைப் போல் பிரகாசிக் தன்மை உங்களுக்குண்டு. இம்மையை வைத்துக் காப்பா றும் திறமையும் உங்களுக்குண்டு. என்னப்பனுடை அருளை பெறவோ அல்லது வேறெந்த காரிய வெற் யிலோ யாவருக்கும் இம்மை அத்யாவசியம். இம் ஷ்பு னுடைய பிரயோஜனத்தை இங்குசொல்வது அசாத்ய ஏனென்றால் நீங்கள் சிலகால மணிந்து அனுபவித் பின்பு எப்பொழுதும் கைவிடமாட்டீர்களென்பது நி ஏன்? எப்படி நெய்யினுடைய சுவையை, புளிப்பு, தித்தி கசப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்புவைகள் சொல்ல முடியாமல் நெய்யினுடைய சுவை நெய்ல போலிருந்தது என்று சொல்வதைப் போல இம் னுடைய மகாத்மியத்தை என்னால் சொல்லத் தரமன், இம்மை அனுபவிக்கின்றவர்கட்கு பட படப்பு த துடிப்பு முதலியவை உண்டாக்காது. இம்மை அடைந்த கா தில் சாந்த மூர்த்தியாயிருந்து உபாஸிக்கும் திறமை யுண்டுபண்ணும். இம்மையானது எதிரியை வணங்கி வ படி செய்யும். இம் மையணிந்தால் விரோத மென்ப கிடையாது. இம் மையை யணிந்து கொண்டு வெளிக்கி றினால் பெரிய மஹான்முதற் சிறு குழந்தைகள் வரை யாவரும் வசியமே. இவ்வுலகத்தை வெல்வித்து இம் யானது மோட்ச சாதகத்திற்கு முதல் படித் திறத்

பசிக்கும்படியான தன்மையையும் கூட்டுவிக்கும். இம்மைக்கு ஜீவகாருண்யமே பத்திய விரதமாகும். இம்மையை யணிந்து கொண்டால் பொய், சூது, வாது, புலை, கொலை, களவு, கோபம் இவைகளை நீக்கும். நீக்காவிடில் மையி னுடைய வெற்றிக்குப் பெருந்தடையாகும். இம் மையா னது பெரும்பாலும் அருள் நோக்கமுடையவர்கள் பேரிலும் ஜீவகாருண்யம், ஈவு, இரக்கம், தயை, பச்சாதாபம் என் னும் நல்ல எண்ண முடையவர்கள் பேரிலும் ஆரோகணித் துத் துலங்கும் திலதம். இம்மைக்கு விலையே கிடையாது. மதிப்பிடமுடியாது. இம் மை யில்லாமல் கெட்டவர்கள் அநேகர். இம் மை ஒன்று விசுவாமித்திர மகரிஷியினிடமும் இலங்கையதிபன் இராவணனிடமும் கிட்டாமல் அவர்கள் பட்டபாட்டிற்கு அளவே கிடையாது. இம் மையை நாம் அடைவோமாயின் முன் ஜன்மாந்திரத்தின் புண்ய வச மென்றே நினைக்கவேண்டும். மேலும் சேவற்கொடியோன் வெற்றி வேலெனத்துலங்கும்படி வஜ்ராயுதமாய் நம்மிடத் தில் விளங்கும். இம் மைக்கு என்றும் ப்ரகாசிக்கும் தன்மை யுண்டு. நீங்கள் நினைத்ததைப் போல் உங்களை ஆக்குவிக் கும். இம்மை மனம்போல வாழ்வைக் கொடுக்கும். இம் மை சுயஞான ஊற்றின் துவாரத்தை திறக்க முயற்சிக்கும். சிறு வித்திலிருந்து பெரிய மரமுண்டாவதுபோல் இம் மையி லிருந்து மகிமை யுண்டாகிறது. நினைப்புகளைக் கெட்ட வழி யிற் செலுத்தினால் இம் மை மறைந்து விடும். ப்ரகாசம் குன்றிவிடும். ஆழமாகிய சுரங்கந்தோண்டி கவனத்துடன் தேடுதலால் தங்கமும் வைரமும் கிடைக்கின்றன. அதைப் போல் ஆன்மாவாகிய சுரங்கத்தைத் தோண்டி, பரம ஆன்ம தெரிசனம்பெற இம் மை தான் தேவை. மனமாகிய தோட் டத்தில் குணமாகிய மையை வைத்தால் இனமாகிய களைகள் முளைப்பது செவ்வனே தெரியும். இம் மையில்லாமல் களை

மண்டி விட்ட தோட்டமனேக முண்டு. எப்படி விட்டிற் பூச்சிகள் தீபத்தில் மடிகின்றனவோ அதுபோ லிம்மை யொளியால் களை முளைகள் கருகிவிடும். இம்மையை விடா முயற்சியுடனணிந்து அனுஷ்டிக்குங் காலத்தில் கணத்தி லழிந்து போகும் மன விருப்பம், மனோராஜ்யம், மனோபாவனை முதலிய மனச் சலனம் கூடாது. இம் மை யடையும் காலத்தில் சந்தேகம், பயம், ஆலஸ்யம் இவை கொண்டால் மையி னுடைய வெற்றியைக் குறைக்கும். நூலாசிரியர், சிலையாக்குபவர், சித்திர மெழுதுவோர், கவிவாணர், தீர்க்கதரிசி, ஞானி, இவர்களிடத்தில் திருநடஞ்செய்து குருவடிவாய்க் குடிகொண்டிருப்பது இம் மையே. ஒருவன் இம்மையை யணிந்துக்கொண்டு ஞானியாக வேண்டுமென்று நினைத்தா லும் ஆகலாம். தியானியாக வேண்டுமென்றாலும் ஆகலாம். மேனிபெற வேண்டுமென்றாலும் பெறலாம். தேனீயைப் போல் சுறு சுறுப்புள்ளவனாக வேண்டு மென்றாலும் ஆகலாம். எப்படி நினைக்கிறோமோ, அப்படியெல்லா மாகலாம். ஆனால் அழுத்தமாய் மையைக் கையாடவேண்டும் முட்டைக்குள் ஆகாயத்தில் பறக்கும் பட்சிகாத்திருப்பது போல இம் மைக்குள் நாமடைய வேண்டிய அனந்தம் சக்திகள் அபாரமாய் பொங்கித் ததும்பக் கிடக்கின்றன, இது கற்பனையல்ல புனைந்துரைப்பதல்ல, பொய்புகலுவதல்ல, உத்தேசமாய்ச் சொன்னதல்ல, இம்மையிலுள்ள முடிவாகிய மகிமையைப் பெற்றால் உலகத்தைச் சீர்படுத்தும் வாளையும் சிவுளியையும் பற்றவராவோம். (நாமெல்லாம் பெற பாத்தியமுடையவர்களே) இம் மையுள்ளவன் மற்றவர்களோடு தான் நடந்து கொள்ளும் விதமறிவான். இம் மையை அதிதீட்சண்யமாகக் கொண்டவனிடம் ஆன்ம பலத்தைப்பெற அன்பர்கள் கோடானுகோடி சுற்றுவார்கள். இவன் பெரும் பாலும் உலகத்தில் சுற்றமாட்டான். உலகம் இவனைச்சுற்

றும். ஒருவன் எவ்வளவிற்கு விடாமுயற்சியுடன் இம்மையை அநுஷ்டிக்கிறானோ அவ்வளவிற்கு அவனது காரியசித்தியும் செல்வாக்கும் நன்மையும் சக்தியுமதிகரிக்கும். இம்மை ஞானிகட்கு மாத்திரமல்ல ஏனையோர் வியாபாரத்திலோ வேறெந்தக்காரிய வெற்றியிலோ மையின் அநுசந்தானமுள்ளவர் மகிமையால் விளங்கி நிற்பர். இம் மையுடைய ஒருவன் உலகிற்கு ஒருபாலைவனத்தில் நிழலைக்கொடுக்கும் மரத்திற்குச் சமானமாகவும், சூறைக்காற்றில் தங்குதற்கு இடங்கொடுக்கும் மலைக்குச் சமானமாகவுமிருக்கிறான். இம் மையே குடிகொண்டவர்கட்கு மழை பெய்தாலும் வெய்யலடித்தாலும் அல்லது வேறெவ்விதமாறுதல்கள் நேர்ந்தாலும் ஒன்றுமில்லை. மையின் இனிமையால் திருவருட்பிரகாச வள்ளலார், சமயாசாரிகள், அறுபத்துமூவர், அருணை மாநகரிலெழுந்தருளியுள்ள ஸ்ரீ ரமணமஹரிஷிகள், மற்றுமுள்ள தவஞானிகளெல்லாம் ஆண்டனுபவித்ததும் அனுபவிக்கிறதும் இம் மையே, எட்டுமிரண்டுங் காணச்செய்யும் இம் மை, எட்டாத நிலையிலும் சேர்பிக்கும் இம்மை அகிலத்திலுள்ள அனைவரும் குறிக்கும் மையத்திற் சேர்க்கும். இம் மையே மூலகாரணம். இம் மையானது மனிதனிடத்திலுள்ள பாயும் சக்தி தாங்கும் சக்தி, அமைதிநிலை, ஏகாக்ரசித்தம் இவைகட்கு அஸ்திவாரத்தினடிப்படையாகும். சாதன சதுஷ்டயத்தைக் கைக்கொள்ளும்காலத்தில் நிலைபெறச்செய்வது இம்மை. ஆவரண சக்தியை யொழித்து விட்சேபம் பரோட்சம் நீங்கி அபரோட்ச ஞான அனுபவத்தை யுண்டுபண்ணுவதும் இம் மையே பஞ்சகோசங்களை இம் மையில்லாமல் ஜயித்தமஹான்கள் ஒருவருமேகிடையாது. தத்பதம் த்வம்பதம் அஸிபதம், முறையே பதம்பெற இம் மைதான் துணைக்கருவி சகல நிலை கேவல நிலையிலுங்கூட இம் மை ஆனந்தத் தாண்டவமாடும். இம் மை ஒன்று துணையாக விருந்தால்தான் இருக் யஜுர்வஸ்,

சாமம், அதர்வணமெனும் வேதத்தில் கூறப்பட்ட பிரக்ஞா னம் பிரம்மம், அஹம், பிரம்மாஸ்மி தத்துவமஸி, அயமாத்மா பிரம்மம் முதலிய வாக்யங்களை இடைவிடாது பாவனை செய் யும்படிச் செய்யும், இம்மையினாலேயே மனமென்னும் மாயா ஜால மாதினை மஹான்கள் வசமாக்கியது. அஹங்காராதி ஆணவாதிகளை அல்லற்படும்படிவிட்டது. மாயையாதி மன் னர்களை மடியச்செய்தது. காம, க்ரோத, மத, மத்ஸராதி மக் களை மண்ணில் கண்காணுதடித்தது. மாயாவாத இராணி மனோவதியின் அந்தப்புர ரகஸ்யத்தில் புஷ்பித்து ஆனந்தா தீத சுகந்தமாகப் பரிமளிப்பது இம்மை. ஹா! ஹா! என்ன இதன் பெருமை உங்கள் வறுமையைத்தீர்த்து பெருமையி லிருந்து உண்மையை யறிய பன்மையிலிருந்து ஒருமையாகி வன்மைபெற நீங்கள் உரிமையுள்ளவர்களாகிவிட்டபடியினால் உங்களிடத்தில் குடிகொண்ட திம்மையே. அருமையாயுள்ள இம் மையை அனுஷ்டிப்பது சிறுமையா யிருக்குமென்று நினைத்து விட்டுவிடாதீர்கள். (தொடங்குங்கால் துன்பமாய்ப் பின்பு இன்பம்பயக்கும்) நீங்கள் நிலைமையிலிருக்கஇருக்க அது தங்கள் நிலைமையில் யாதொரு பிரயத்தனமில்லாமலே தானே வழிகாட்டி அழைத்துக் கொண்டுபோய்த் தன்னிலைமை யிலிருத்திவிடும். இம் மை அலங்காரத்துடனும், ஐந்தெழுத் தாலுள்ள மந்திரப் படைகளுடனும் ஆரோகணித்து அதி உல்லாசமாய் வேலை செய்யுமிடம் புருவ மத்தியஸ்தானமே. அவ்விடம் தவறினால் வெறும்தூக்கமாகத்தான் முடியும். இம் மையை யணிந்து கொண்டவர்களை ஒரு சமயம் தெய்வச் செயலினாலே சோதிப்பதற்கு ஒருவன் கையப்புடைத்து அனேக இடையூறுகளைச் செயினும் முன்செய்த தீவினையே யென்றெண்ணிப் பின்வருகிற நல்வினையையே நாடி அமைதி நிலைமையிலிருக்கும்படி செய்யும். இவைகளை சகித்து முடிவு வரை வெற்றிபெற்றால் பின்னால் மைக்கு பெரும்வெற்றியும்

இன்பத் துளேபிறந் தின்பத்துளே வளர்
இன்பத் துனைநினைக் கின்றறிது மறந்
தின்பத் துளேசிலர் சோருடுங் கூறைமெ
முன்பத் துளேநின் றுதூங்குகின் றூர்கவே

---

கற்கண்டோ தேனே கனிரசமோ பாலோ
சொற்கண்டா தெதென நான் சொல்லுவே
விற்கண்ட வான்மதிகாணு மௌனி மௌ
தானமதி லூறு மமிர்தம். [த

---

அறிவாய் அறியாமை நீங்கி அவனே
பொறிவாய் ஒழிந்து எங்கும் தானான போ
அறிவாய் அவற்றினுள் தானாய் அறிவன்
செறிவாகி நின்ற அச் சிவனுமாகுமே.

(திருமந்.)

மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
அடையாறு, சென்னை-20.

Sundaram Press, G.T., Madras.